பல்சுவை நாவல்

விலை ரூ.15

# ஆயிரம் கண்ணி

பாலகுமாரன்




தோழமைக்கு, வணக்கம்!

எழுதும் பேனாவிலிருந்து, உடுத்தும் உடை, உண்ணும் உணவு, குடிக்கும் பானங்கள்வரை அந்நியர்கள் நம் தெருவில் கடை விரித்தாயிற்று.

திருப்பூரிலிருந்தும் சரி.. லூதியானாவிலிருந்தும் சரி.. நாம் ஒரு பொருளை.. மேல்நாடுகளுக்கு அனுப்பினால் அதற்கு ஏகப்பட்ட தரக்கெடுபிடிகள், கட்டுப்பாடுகள் விதித்து நம் ஏற்றுமதியாளர்களின் விழி பிதுங்கச் செய்யும் பன்னாட்டாளர்கள் மத்தியில்.. நாம் இளிச்ச வாயர்கள் ஆன கதை.. இந்த 'கோக், பெப்சி' குளிர் பானங்கள் மூலம் நிரூபணமாகியிருக்கின்றது.

உயிருக்கே உலை வைக்கக்கூடிய பொருட்களை, 'சாஃப்ட் ட்ரிங்ஸ்' என்ற பெயரில் நம்முடைய தட்ப வெட்பநிலைக்கு சற்றும் ஒவ்வாத பானங்களை உதட்டில் ஒட்டியும் ஒட்டாமலும் உறிஞ்சி.. அன்னிய நாகரிகத்தை மோகித்த நமக்கு.. இன்னும் விழ வேண்டிய இடிகள் நிறைய இருக்கின்றன என்றே தோன்றுகின்றது.

போன மாதத்தில் அந்நிய பொருட்கள் அனைத்தும் ஒரே இடத்தில் கிடைக்கும் ஒரு பெரிய 'வேல்டு ஷாப்'பில் வாங்கிய பொருள் அதன் எக்ஸ்பைரி தேதி முடிந்த நிலையிலிருந்ததை கவனிக்காது.. அந்த

பல்பொருள் நிறுவனத்தின்மீது மிக நம்பிக்கை வைத்து வாங்கிச் சென்ற நபர், எதேச்சையாக.. அதன் எக்ஸ்பைரி தேதி முடிந்து ஒரு வருடம் ஆகியும் அதை விற்பனை செய்து இருப்பதை கண்டுபிடித்து அதிர்ச்சியானார். உடனே அவர் நுகர்வோர் கோர்ட்டுக்குப்போய் எச்சரிக்கை நோட்டீஸ் கொடுத்து ஈட்டுத் தொகையையும் பெற்ற கதையை மறந்திருக்க மாட்டீர்கள்.

அப்புறம், ஒரு குளிர்பான பாட்டிலின் உள்ளே.. பாட்டரி கிடந்ததை ஒரு பெரிய வார பத்திரிகை கட்டம்கட்டி காட்டியும், அதையும் அந்த நிறுவனம் சரிகட்டிய கதையும் நமக்கு தெரிந்ததே.. இப்போது உயிருக்கே உலைவைக்கும் தாது பொருட்கள் அதில் உள்ளன என்கிறது சுற்றுச்சூழல் ஆய்வகம்.

இதை அறியாமல் இவ்வளவு நாட்களாக அதை குடித்தவர்களின் நிலை இனி என்ன.. அந்த அப்பாவிகள் எதை நம்பி குடித்திருப்பார்கள். இந்திய அரசின் தரக்கட்டுப்பாடு.. இவ்வளவு மலிவாய் போனதற்கு யார் காரணம். நம்முடைய பொருட்களை ஏற்றுமதி செய்யும்போது ஏற்படும் விதிமுறைகள் போலத்தானே, அவர்கள் நமக்கு அனுப்பும் இறக்குமதிக்கும் நாம் கட்டுபாடும், விதிமுறைகளும் கடைபிடிக்க வேண்டும்.

யார் விட்ட கோட்டை இது.. பெரும் பொருளை, பணத்தை இந்தியாவில் அன்பளிப்பாகவோ, அல்லது இதற்கு இது என்ற காட் (GATT) ஒப்பந்தத்தினாலோ, இதை இங்கு கடை விரித்ததால் தடை செய்வார் எவருமில்லை என்பதை மட்டும் புரிந்துகொள்ள வேண்டியது மிக அவசியம்.

ஏனெனில்.. இதற்கு அந்த நிறுவனங்கள் இந்தியாவிற்கு கொடுத்திருக்கும் வெகுமதிகள் அதிகம். அதனால் தடையென்பதும், அது மீண்டும் வீதியில் கூவி விற்கப்படுவதும்.. பம்மாத்து போன்றும், கண்கட்டி வித்தை போன்றும் நடை பெறக்கூடியதுதான். எனவே நாம்தான் நம்மை காத்துக்கொள்ள முனைய வேண்டும். சீர்தூக்கி பார்த்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

அந்நிய பொருளை.. பகிஷ்கரித்த அந்த நாளை.. இன்று நாம் மறந்தால், இனி என்றும் மரண

வேதனைதான் என்பதை புரிந்து நடந்துகொள்ள வேண்டிய தருணம் இது.

மற்றபடி, எழுத்துச்சித்தர் பாலகுமாரன் பிறந்த நாளுக்கு நேரிலும், தொலைபேசியிலும் ஆசி பெற்றவர்கள், வாழ்த்தியவர்கள் மற்றும் பிரசாதங்கள் அனுப்பியவர்கள் அனைவருக்கும் நன்றி.

அப்புறம், லேடீஸ் நாவலில்.. நமது எழுத்துச் சித்தர் எழுதும் 'காமதேனு' எனும் பெண்களின் மன உணர்வுகளை தட்டியெழுப்பும் சமூகநாவல் இன்னும் சில தினங்களில் கடைகளில் கிடைக்கும்.

'குமுதம் பக்தி' இதழில் ஜோதிடம், ஜோதிடம் பற்றிய ஆலோசனைகள் மற்றும் பரிகாரங்கள் எழுதிவரும் ஜோதிடர் திரு.ஷெல்வீ பற்றி வாசகர்கள் பலரும் அறிந்திருப்பீர்கள். பத்திரிகையில் மட்டுமல்லாது, நேரிலும், தொலை பேசியிலுமாக ஷெல்வீ அவர்களை கண்டு கேட்டு வாழ்வில் வளம்பெறும் வாசகர்கள் பலரின் கடிதங்கள் தொடர்ந்து நமது அலுவலகத்திற்கு வந்தவண்ணம் இருக்கிறது.

ஜோதிடர் ஷெல்வீ கூறும் ஆலோசனைகளும் பரிகாரங்களும் அவ்வளவு தீர்க்கமாய் இருக்கின்றன. என் விருப்பத்தையும் நமது எழுத்துச்சித்தர் வேண்டு கோளையும் ஏற்று ஷெல்வீ அவர்கள் இருபத்திஏழு நட்சத்திரங்களுக்குமான பரிகாரங்களை லேடீஸ் நாவலில் எழுதுகிறார். அவற்றை படித்து வாசகர்கள் அனைவரும் பயன்பெற வேண்டுமென்பதே எங்கள் மூவரின் விருப்பமுமாகும். எனவே லேடீஸ் நாவல் பிரதிக்கு இப்பொழுதே கடைக்காரர்களிடம் சொல்லி வைத்துவிடுங்கள்.

மற்றபடி, 'டுடே க்ரைம் நியூஸ்'ல் இந்திரா சௌந்தர்ராஜன் எழுதிய அமானுஷ்ய நாவலான 'காற்று காற்று உயிர்' வெளியிடப்பட்டிருக்கிறது. அதையும் வாங்கி படித்துவிட்டு கடிதம் எழுதவும்.

மற்றபடி, உங்களின் கடிதங்களுக்காகவே காத்திருக் கிறேன். மீண்டும் சந்திப்போம்.

தோழமையுடன்,
பொன்.சந்திரசேகர்

# பாலகுமாரன் பேசுகிறேன்

பாலகுமாரன் பேசுகிறேன்



பாலகுமாரன் பேசுகிறேன்

இனிய ஸ்நேகிதங்களுக்கு,
வணக்கம். வாழிய நலம்.

சென்றமுறை பல்சுவை நாவலில் எழுதியிருந்த கடிகை என்ற சரித்திர நாவலுக்கு நீங்கள் கொடுத்த ஆதரவு மகத்தானது. கடினமான ஒரு சரித்திர நாவல் என்று நான் கவலைப்பட்டுக் கொண்டிருக்க மிகப் பெரியதாகவும், விளக்கமாகவும் அவர்கள் அனுபவித்த விதம்பற்றியும் பல வாசகர்கள் நீண்ட கடிதங்கள் எழுதியிருக்கிறார்கள். என்னைவிட உங்கள்மீது பொன்.சந்திரசேகருக்கு அதிக நம்பிக்கை. அவரும் உங்கள் கடிதங்கள் கண்டு பூரித்துப்போனார்.

பல்லவர் காலம் பற்றியும், மூன்றாம் குலோத் துங்கச்சோழன் பற்றியும் நான் அவருக்கு கதையாக விளக்கிச் சொல்ல அதையும் எழுதுங்கள் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்.

பாக்கெட் சைஸ் மாதாந்திர பத்திரிகையில் கனமான ஒரு சரித்திர நாவல் எழுதி வெற்றியான

தற்குக் காரணம் நீங்களே. உங்கள் அனைவருக்கும் என் நன்றி.

இந்த நாவலில் நந்தினி இல்லையே என்று சில பேர் கடிதம் எழுதியிருக்கிறார்கள். தொலை பேசியிலும் கேட்டார்கள். நந்தினி என்று சோழர்கால சரித்திரத்தில் எவரும் இல்லை. பேராசிரியர் கல்கி எழுதிய பொன்னியின் செல்வனில் வரும் நந்தினி அவருடைய கற்பனைப்பாத்திரம். அதில் வரும் ஆழ்வார்கடியானும் அவர் கற்பனைப் பாத்திரம். இதுபற்றி அவர் தனது பொன்னியின் செல்வன் ஐந்தாம் பாகத்தில் மிகத் தெளிவாக சொல்லியிருக் கிறார்.

இந்தக் கடிகை நாவலில் பானுகோபரும், மற்ற உபாத்யாயர்களும் கற்பனைப்பாத்திரங்கள். ரவிதாஸனும், பரமேஸ்வரனும் ஏனையோரும் சோழர்கால கல்வெட்டில் இடம் பெற்றவர்கள். உண்மையில் வாழ்ந்தவர்கள்.

காந்தளூர்ச்சாலை கலமறுத்தருளி என்பது உடையார் ஸ்ரீ ராஜராஜத்தேவருக்கு சொல்லப்படும் மெய்கீர்த்தி. காந்தளூர்ச்சாலை கலம் என்பதை மரக்கலம் என்றும் சொல்வார்கள் அல்லது கடிகை என்று சொல்லி அதற்கு .கலம்கலமாக நெல் கொடுத்தான் என்றும் பொருள் கொள்ள முடியும்.

நீங்கள் காட்டிய பேராதரவால் நான் தொடர்ந்து சில சரித்திரக் கதைகள் எழுதுவதாக இருக்கிறேன். இதைத்தவிர பல்சுவை நாவலின் துணை பத்திரி கையான லேடீஸ் நாவலில் தொடர்ந்து நாவல் எழுதித் தரும்படி, பல்சுவை நாவலின் ஆசிரியர் பொன்.சந்திரசேகர் அவர்கள் கேட்டிருக்கிறார். நான் எழுதித்தருவதாக ஏற்றுக் கொண்டிருக் கிறேன்.

இந்த நாவல் பெண்கள் பற்றியதாக இருக்க வேண்டுமென்று எனக்கு ஒரு ஆசை இருக்கிறது. இதில் சொல்வதற்கு நிறைய விஷயங்கள் இருக் கின்றன. எனக்கு கதை முக்கியமில்லை. மாலா சேகரோடு ஓடிப்போனாள் என்று சொல்லுகின்ற

சம்பவங்கள் முக்கியமில்லை. வாழ்க்கைபற்றி எனக்குத் தெரிந்த விஷயங்களை உங்களோடு நான் பகிர்ந்து கொள்கிறேன். உங்களை யோசிக்கும் படி தூண்டுகிறேன். அதற்கான கருவியே மாத நாவல்.

வாழ்க்கைக்கு உதவாத, வெறும் பொழுது போக்குக்காக எழுத என்னால் இயலாது. உங்களுக்கு அது தேவையும் இல்லை.

எதுக்கு படிக்கறோம். . டைம்பாஸ் பண்றதுக்கு என்று சொல்கிறவர்களை நான் மதிப்பதில்லை. இந்த 'நேரக்கொல்லி'களால் யாருக்கும் லாபம் இல்லை. இவர்களால் எதுபற்றியும் தெளிவாக சிந்திக்க முடியாது. செயலாற்ற முடியாது. என் வாசகர்கள் சிந்திக்கத் தெரிந்தவர்கள், செயலாற்றும் துடிப்புடையவர்கள். ஒரு நல்ல சமுதாயத்தை படைக்க வேண்டும் என்பதுதான் என் எழுத்தின் லட்சியம்.

என் எழுத்திலிருந்து வாசகர்கள் ஏதேனும் கற்றுக் கொண்டதாய் சொன்னால் அதுவே பெரிய பாக்கியம். நான் இங்கு வாழ்ந்ததற்கான அர்த்தம்.. முடிந்தவரை அடுத்த தலைமுறைக்கு வாழ்தல் பற்றிய யோசிப்பை அதிகரிக்கச் செய்வதே என் புதினங்களின் வேலை. நான் போதிப்பதில்லை. மாறாக யோசிக்க வைக்கிறேன். முடிவை நீ எடு என்று வாசகர்களிடம் திணிக்கிறேன். இந்தக் கதையிலிருந்து என்ன புரிந்து கொண்டாய். உனக்கு இந்த மாதிரி ஒரு விஷயம் நேர்ந்தால் நீ என்ன செய்வாய் என்று சிந்திக்கச் செய்வதே என் தலையாய பணி. ஆனால், சிந்திப்பது என்பது எளிதான விஷயமல்ல. பலபேருக்கு இங்கு சிந்திக்க சோம்பல் உண்டு. மாறாய் வெறுமே கெக்கக்கே என்று சிரித்து விட்டுப் போவதற்கும், காமத்தோடு குதூகலிப்பதற்கும், பல்லைக் கடித்துக்கொண்டு கண்மூடி வன்முறைச் சிந்தனையில் திளைப்பதற் குமே பலபேர் விரும்புகிறார்கள். இது எங்கு அதிக மாக தரப்படுகிறதோ அந்த விஷயத்தை நேசிக்

கிறார்கள். காமத்தையும், கலவரத்தையும் கலையாக்கி விற்பது மிக எளிது. அதில் தந்திரம்தான் மிக முக்கியமாக செயல்படுமே தவிர, ஒரு நிம்மதி, நிறைவு, பூரணத்துவம் கிடைக்காது.

நான் நிறைய பேருக்கு நல்லது சொல்லிக் கொடுத்திருக்கிறேன். என்னால் பலபேர் தெளிவாகியிருக்கிறார்கள். திடமாகியிருக்கிறார்கள் என்கிற நினைப்புதான் என்னுடைய முகமலர்ச்சிக்கும், அகமலர்ச்சிக்கும் காரணம். எப்படியாவது ஏதாவது பண்ணி சம்பாதிக்கணும் என்கிற வெறியெல்லாம் எனக்கு வரவேயில்லை. அப்படி செய்கிறபோது எப்படியாவது எதையாவது அனுபவிக்க வேண்டும் என்கிற வெறித்தனம் வந்துவிடுகிறது. அந்த வெறி, இந்த வெறியை இழுத்துக்கொண்டு வருகிறது. **வெறியாக இருப்பவர் எதையுமே அனுபவிக்க இயலாது.**

உண்மையாக இருக்கும்போதுதான் சந்தோஷமாக இருக்க முடியும். தந்திரங்கள் திரும்ப நம் முகத்தையே தாக்கும். நம்மைவிட தந்திரசாலி நமக்கெதிரே நரித்தனம் செய்து ஆடுகிறபோது, நம்முடைய சப்தநாடியும் ஒடுங்கிப்போய் நடுக்கம் ஏற்படும். தோல்வியில் மனம் துவளும்.

கடின உழைப்பு என்பது முக்கியமில்லை. உன் உழைப்பு எதைநோக்கி என்பதுதான் மிக முக்கியம். மாடுகளை எதற்கு விரட்டி ஓடிக்கொண்டிருக்கிறாய். மலையேறி பள்ளத்தில் விழவா அல்லது பல ஊர்களுக்கு பயணப்படவா என்று பார்க்க வேண்டும்.

என்னுடைய இந்த லட்சியத்திற்கு பொன்.சந்திரசேகர் அவர்கள் மிகப்பெரும் துணையாக இருக்கிறார். பதிப்புத்துறையில் நல்ல தருமநியாயங்களுக்கு கட்டுப்பட்டு தெளிவான சிந்தனையோடு, உயர்ந்த குறிக்கோளோடு அவர் பல்வேறு பிரச்சினைகளை எதிர்கொண்டு ஜெயித்து வருகிறார். ஏதாவது பிரசுரம் பண்ணி எப்படியாவது சம்பாதித்து என்கிற எண்ணம் அவரிடம் லவலேசமும் இல்லை.

அதனால்தான் எங்கள் இருவரின் வாழ்க்கையும் சந்தோஷமாக இருக்கிறது. நாங்கள் சந்தோஷமாக இருப்பதால் அடுத்தவரை நல்ல விஷயங்களுக்கு எளிதாய் திசை திருப்ப முடிகிறது. தெளிவாய் சிந்திக்க முடிகிறது. இறையருளால் வாழ்வில் சின்னஞ்சிறிய சௌகரியங்களுக்கும் குறை வில்லை. அந்தத் தெளிவினால்தான் நான் அரசியல் வாதியையோ, மடாதிபதிகளையோ, வேறு பிரமுகர் களையோ அண்டி வாழாது, ஒரேயொரு குருவை ஆச்ரயித்து அவர் வழி நின்று, என்னை உற்று உற்றுப் பார்த்து, என்னிலிருந்து பீறிடும் உயர் விஷயங்களை நல்லமுறையில் கதையாக்கி உங்களுக்கு படைக்கிறேன்.

என் சரித்திரக்கதைகள்கூட வாழ்வியல் சொல்கிற விஷயங்கள்தான்.

இந்த 'ஆயிரம்கண்ணி' நாவலில் நடையில் ஒரு புதுமுயற்சியை கைக்கொண்டிருக்கிறேன். இதுபற்றி உங்கள் அபிப்ராயத்தைச் சொல்லுங்கள்.

மழை அவ்வப்போது தமிழ்நாடு முழுவதும் பெய்கிறது. ஆனால், இது போதாது. கைகூப்பி இறைவனை இறைஞ்சி இம்முறையேனும் அதிக மழை பெறுவோம்.

**பல்சுவை நாவலுக்கு வரவேற்பு கொடுத்தது போலவே, லேடீஸ் நாவலையும் நீங்கள் வாங்கிப் படிக்க வேண்டும் என்பது என் விருப்பம்.**

ஆடிமாதம் கோவில்களில் கூட்டநெரிசல் அதிகம். கடவுள் எதிர்ப்பு இயக்கங்கள் முற்றிலும் தோல்வி அடைந்ததற்கு சாட்சியாக இன்றைய கோவில்கள் விளங்குகின்றன. அதற்கான எந்த முயற்சியையும், எந்தத் தனிமனிதனும் எடுக்காமல் தானாகவே இந்துமத எதிர்ப்புகள், கேலிகள் பின்வாங்கி சுருண்டுவிட்டன. இதனால் இந்துமதம் பெரும் தாமரையாய் மலர்ந்து மணம் வீசிக் கொண்டிருக்கிறது.

மதம் மனிதனால் ஏற்படுத்தப்பட்ட விஷயம். எல்லா மதத்திலும் குறைகள் உண்டு. கேள்விகள்

உண்டு. அபிப்ராய பேதங்கள் உண்டு. எல்லா மதத்திலும் உயர்வு தாழ்வுகள், பேதங்கள், பிரிவுகள் என்று உண்டு. எல்லோரும் சமம் என்று வாயளவில் சொன்னாலும் மனிதனுக்கு பிரிவினை காட்டாமல் இருக்கமுடியாது. எனவே, தன் முதுகைப்பார்த்து சுத்தமாக்கிக் கொள்வதை விடுத்து அடுத்தவரைக் குறைசொல்வதில் எந்த லாபமும் இல்லை. இந்துமதம் இதைத்தான் செய்து கொண்டிருக்கிறது. மற்ற மதத்தினரின் குறைகளை இந்துமதம் சுட்டிக்காட்டுவதே இல்லை. இதை ஒழுங்கு படுத்திக்கொள்ளவே இந்துமதம் விரும்புகிறது. சிலசமயம் இந்த முயற்சி வெற்றியடைகிறது. பல சமயங்கள் தோல்வியடைகின்றன. ஆனாலும், இடையறாத இந்தப் போராட்டம் தொடருகிறது.

இது மனிதனின் மகத்தான முயற்சி. மதம் என்கிற வாகனத்தின் மீது ஏறி த்ன்னை பண்படுத்திக் கொள்ள மனிதன் செய்யும் இடையறாத தவம்.

வேறென்ன,

மழை நன்கு பெய்ய வேண்டுமென்று மறு படியும் இறைவனை நாம் எல்லோரும் வேண்டிக் கொள்வோம். தனித்தனியாக கைகூப்பிக் கேட்போம். நம் எல்லோருக்கும் ஒட்டுமொத்தமாய் மழை பெய்யும். நிச்சயம் எல்லோருக்குமாய் பெய்யும்.

இந்துமத தத்துவ ஞானத்தின் உயர்ந்த பொக்கிஷமான பகவத்கீதையை அருளிய ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா பிறந்தநாள் இந்தமாதம் வருகிறது.

**'எவனொருவன் அனவரதமும் என்னை தியானிக்கிறானோ அவனது தினசரி யோக க்ஷேமத்தை நான் பார்த்துக் கொள்கிறேன்' என்று ஸ்ரீ கிருஷ்ணர் சொல்லியிருக்கிறார்.**

**அனவரதமும் தியானிப்பது என்றால் என்ன.**

அடுத்த இதழில் பேசுகிறேன்.

என்றென்றும் அன்புடன்,

**பாலகுமாரன்**

# பாலகுமாரன் பதில்கள்



எஸ்.பாண்டித்துரை,
தஞ்சாவூர்.

☐ அஜித் பேட்டி படித்தீர்களா. மிகவும் வேகமாக இருக்கிறாரே.

★ இல்லை. தெளிவாக இருக்கிறார். தன் திறமையின் மீதும் உழைப்பின் மீதும் நம்பிக்கையோடு இருக்கிறார். எவரையும் சார்ந்து இல்லாமல் தனித்திருக்கிறார். அதனால் வேகமாக இருப்பது போல் தெரிகிறது. அஜித் பேட்டி எனக்கு பிடித்திருந்தது.

---

ஆர்.கமலக்கண்ணன்,
வாணியம்பாடி.

☐ எனக்கு கடவுள் நம்பிக்கை இல்லை. நான் எந்த மதத்தையும் சார்ந்தவனில்லை. என்னோடு உங்களால் நட்பாக இருக்க முடியுமா. எனக்கு வயது இருபத்திநான்கு.

★ ஏன் முடியாது. நீங்கள் உண்மையான நாத்திகர் என்றால் உங்களை நான் வியந்து பாராட்டுவேன். மிகச்சிறிய வயதில் இவ்

வளவு முதிர்ச்சியா என்று ஆச்சரியப்படுவேன். உங்கள் உள்மன ஓட்டங்களை கேள்விகேட்டு தெரிந்து கொள்வேன். அவை வலுவாய் இருப்பின் மனமாரப் பாராட்டுவேன். மாறாக, வெளியே நாத்திகர் வேடம் பூண்டு உள்ளுக்குள்ளே கடவுள் பற்றிய குழப்பமான பயமும், முரண்பாடான பதில்களும் இருக்குமாயின் உங்கள் எதிரிலேயே தலையிலடித்துக் கொள்வது தவிர வேறு வழியில்லை. நீங்கள் நல்ல நாத்திகராக இருப்பின் உங்களுக்கு அருகே உள்ளவர்களை, உங்கள் நெருங்கிய உறவுகளை உங்களுடைய கொள்கை நிச்சயம் பாதிக்கும். அவர்களுக்கும் அதுபற்றிய ஒரு தெளிவு ஏற்படும். மாறாக உங்கள் வீட்டார் பூஜை புனஸ்காரங்கள் ஹோம யாகங்கள் பரிகாரங்கள் செய்து கொண்டு, நீங்கள் நாத்திகர் என்று சொன்னால் எனக்கு உங்கள்மீதும், உங்கள் கொள்கை மீதும் சந்தேகம் வரும். இதுவும்கூட பெரிய தவறல்ல. நீங்கள் நாத்திகராக இருக்கும்போது உங்கள் வீட்டார் ஆத்திகராக இருப்பதும்கூட இயல்புதான். ஆனால், உங்களை பெரிய நாத்திகர் என்று வெளியே பறைசாற்றிக் கொள்ளாதீர்கள். மதங்களையோ, கடவுளர்களையோ கேலி செய்யாதீர்கள். அடக்கமாக இருங்கள். மற்றவர்களின் இறை நம்பிக்கையைப்பற்றி இகழ்ந்து பேசாமல் இருந்தாலே உங்கள் நாத்திகம்பற்றி உங்கள் வீட்டார் தெரிந்துகொள்ள வாய்ப்புகள் அதிகம் இருக்கும். மாறாக, நீங்கள் நாத்திகர் என்று சொல்லி ஆத்திகர்களை, கடவுளர்களை, மத விஷயங்களை கேலி செய்யின் உங்கள் வீட்டாருக்கு உள்ளுக்குள் பயம் வரும். கடவுளை கேலி செய்ததால்தான் காலில் அடிபட்டதோ.. இறைவனை இழிவாகப் பேசியதால்தான் சுழுக்குகள் வந்தனவோ என்று பயந்துபோய் அவர்கள் இன்னும் வேகமான ஆத்திகர்களாக மாறுவார்கள். பூஜை புனஸ்காரங்கள், ஹோமப்பரிகாரங்கள் அதிகமாகும். நான் சொல்வது உங்களுக்குப் புரிகிறதா.

ஆனந்தராஜ்,
நாமகிரிபேட்டை.

☐ குமுதம் பக்தி மாத இதழில் நீங்கள் எழுதும் கட்டுரையான 'தேடிக் கண்டுகொண்டேன்' படித்து வருகிறேன். அஹோபிலம் மிக நன்றாக இருந்தது. அதைவிட ஸ்ரீசைலம் மிக நன்றாக எழுதப்பட்டிருந்தது. ஆனால், ஸ்ரீசைலம் எங்கிருக்கிறது என்று நீங்கள் சொல்லவே இல்லையே.

★ ஸ்ரீசைலம், ஆந்திராவில் இருக்கிறது. நீங்கள்

கேட்கின்ற கேள்வி எனக்குப் புரிகிறது. வழி, ரயில் மார்க்கம், பேருந்து மார்க்கம், போய்வர கட்டணம் என்று கேட்கிறீர்கள். என் கட்டுரை படித்து ஆவல் மேம்படுகிறவர்கள் எப்படியேனும் விசாரித்து விடுவார்கள். ஸ்ரீசைலம் அநேகமாக ஆந்திரதேசத்து மக்கள் அத்தனை பேரும் போய் வந்த இடமாகத்தான் இருக்கும். விசாரிக்கின்ற ஆர்வம் உங்களுக்கு வரட்டும் என்றுதான் போய்வரும் விஷயத்தை நான் அதிகம் எழுதாது இருக்கிறேன். ஸ்ரீசைலம் கடப்பாவிலிருந்து பஸ்மார்க்கமாகப் போகலாம். கடப்பா, சென்னை-பம்பாய் ரயில் பாதையில் இருக்கிறது. தேடிக்கண்டு கொண்டேன் என்றுதானே கட்டுரை எழுதுகிறேன். நீங்களும் சற்று முயற்சி செய்து தேடக்கூடாதா. எல்லா விஷயமும் உரித்த வாழைப்பழம் போலவே வேண்டுமா. நிச்சயம் ஸ்ரீசைலம் போய் வாருங்கள். நல்ல சிவதரிசனம் உங்களுக்குக் கிடைக்கட்டும்.

டேவிட் சாம்சன்,
போர்ட்பிளேயர்.

☐ **பெண்களின் மனதை அறிவது கடினம் என்று சொல்கிறார்களே. நீங்கள் மட்டும் பெண்களைப்பற்றி இவ்வளவு தெளிவாக எழுதுகிறீர்களே, இது எப்படி.**

★ நான் பெண்களைப்பற்றி எழுதுவது தெளிவாக இருக்கிறதென்று ஒரு பெண்தான் சொல்லவேண்டும். ஆணாகிய நீங்கள் சொன்னால் அதை நான் எப்படி அங்கீகரிப்பது. உள் மனக்குமுறல்களை வெளியே காட்டாத ஆண்கள் இல்லையா. இருக்கத்தான் செய்கிறார்கள். பெண்கள் மனம் திறந்து இந்த தேசத்தில் பேசமுடியாது. பேசுவாளாயின் அவளுடைய கற்பு பற்றியும், அவளுடைய குணநலன் பற்றியும் இழிவாகப் பேசுவார்கள். பெண் பேசுவதற்குத் தயாராக இருக்கிறாள். கேட்பதற்கு இந்திய மக்கள் தயாராக இல்லை. கேட்க ஆளில்லாத போது எவரும் பேசத்துணிய மாட்டார்கள். இதனாலேயே பெண்கள் மனம், புரிந்து கொள்வது கடினம் என்ற பேச்சு வந்திருக்கும் என்று தோன்றுகிறது. ஆனால், இந்த விஷயங்கள் வேகமாக மாறிக்கொண்டு வருகின்றன. பெண்கள் பேசத் துவங்கி விட்டார்கள், இஷ்டமிருந்தா கல்யாணம் பண்ணிக்கோ இல்லைன்னா எழுந்து வெளிய போடா என்று ஆணைச்சொல்லும் அதிகாரம் படைத்தவளாக மாறிக் கொண்டிருக்கிறார்கள். மிக மோசமான பெண் மணி என்ற தலைப்பில் எட்டரைக்கு எழுந்திருப் பேன். பெட்காபி குடித்திடுவேன். பிரஷ்ஷாலே பல்

தேய்ப்பேன். சோப்பு போட்டு குளித்திடுவேன் என்று ஒரு பாடல் என் பத்துவயதில் பல பெண்கள் பாட கேட்டிருக்கிறேன். பிரஷ்ஷால் பல் தேய்ப்பதும், சோப்பு போட்டு குளிப்பதும் மோசமான பெண்ணின் குணங்கள் என்று வர்ணிக்கப்பட்டிருந்த அபத்தம் அது. ஒரு மூடத்தனமான காலம் அது. அதேபோல இங்கிலீஷ் படிச்சாலும் இன்பத்தமிழ் நாட்டுல இப்படித்தான் இருக்க வேண்டும் பொம்பள என்று ஒரு லிஸ்ட் உண்டு. அவையெல்லாம் தூள் தூளாக உடைந்து கொண்டு வருகின்றன. இன்னும் ஐம்பது வருடங்கள் கழித்து பெண்கள் மனம் திறந்து தங்கள் கோபதாபங்களை வெளியேற்றக்கூடும். அப்பொழுது நீங்கள் பெண்களை புரிந்து கொள்ளலாம்.

**கோமதிசுப்ரமணியம்,**
**சுவாமிமலை.**

☐ ***வெண்டைக்காய், வல்லாரை, முருங்கைக் கீரையில் எந்த சத்தும் இல்லையா. இதைச் சாப்பிடுவதால் எந்தவித பலனும் இல்லை என்று விஞ்ஞானிகள் சொல்கிறார்களே.***

★ வெண்டைக்காயை விஞ்ஞானிகள் ஆராய்ந்து இருக்கமாட்டார்கள். மாட்டுச் சாணத்தையே ஆண்டி பயாடிக் என்று இப்பொழுது தான் ஒத்துக் கொண்டிருக்கிறார்கள். மஞ்சளை ஆன்டிபயாடிக் என்று அமெரிக்கா சொன்ன பிறகுதான் ஐய்யய்யோ அது எங்க சொத்து விட்டுடு என்று குரல் கொடுத்திருக்கிறார்கள். ஆயிரம் ஆண்டு களாக மஞ்சள் தேய்த்துக் குளிக்கின்ற பழக்கம் தென்னிந்தியாவில் இருக்கிறது. அலங்காரப் பொருளாக, முகத்தில் முடிமுளைக்காமல் நீக்குபவையாக, தோலை பாதுகாக்கின்ற விஷயமாக மஞ்சள் இருந்திருக்கிறது. குளத்திற்குள் மூழ்கி அடியில் இருக்கின்ற களிமண்ணை கலக்கிக் கொண்டு வந்து அதை முகம் முழுவதும் பூசி வெய்யிலில் உட்கார்ந்து அது வறண்டுபோனதும் மறுபடியும் நீரில் குளித்து மிகச் சரியாக அலம்பிக் கொள்ள முகம் புத்துணர்வு பெறும். இதை நமது ஊர் இளைஞர்களும், முதியவர்களும் செய் திருக்கிறார்கள். பிரகாசமான முகத்தோடு இருந்திருக்கிறார்கள். இப்பொழுது அதே களி மண்ணை டியூப்பில் அடைத்து அலங்காரப் பொருள்களாக பலநூறு ரூபாய்களுக்கு விற்கிறார்கள். பாரத தேசத்தின் மூலிகை வைத்தியம் இந்த தேசத்து விஞ்ஞானிகளால் ஆராயப்படாமலே போய் விட்டது. அமெரிக்கர்கள் என்ன சொல்கிறார்களோ, ஐரோப்பியர்கள் என்ன சொல்கிறார்களோ அதற்கு

ஆமாம் சாமி போடவே நமது விஞ்ஞானிகள் முயற்சிக்கிறார்கள். முழு மூச்சில் இந்திய மூலிகைகள் பற்றி மெத்தப் படித்த மாணவர்கள் குழு அமைத்துக் கொண்டு ஆராய வேண்டும். அதற்குண்டான முயற்சி இல்லாததால் நம்மூர் காய்கறிகளின் குணாதிசயங்களோ, அது என்ன செய்யும் என்கிற விஷயங்களோ எவருக்கும் தெரியவில்லை. இது போலி மூலிகை வைத்தியர்களையும் உருவாககி விடுகிறது.

இந்தக் கிழங்கை நெருப்பில வாட்டித்தின்னு பேணாக்கத்தி பிரிச்சாப்போல ஆயிடும் என்று ஏமாற்றுகின்ற கூட்டமும் இருக்கிறது.

அறுவை சிகிச்சையில் மிக உன்னதமான நிலையை மேலைநாடுகள் அடைந்து விட்டன. ஆனாலும், அறுவை சிகிச்சையே செய்ய வேண்டாத, அடிப்படையிலேயே மாற்ற வேண்டிய உணவுப்பழக்கங்கள், நல்ல வேர்கள், மரப்பட்டைகள், மூலிகைகள் நம்மிடையே இருக்கின்றன.

**ஆர்.பிரசன்னா,**
**காந்திபுரம்.**

☐ **செல்போனை தெருவில் குவித்து விற்கின்ற காலம் வந்துவிட்டது பார்த்தீர்களா.**

★ அபரிமிதமான வளர்ச்சி. அபாரமான வளர்ச்சி. தகவல் தொடர்பு பலப்பட்டால் வியாபாரம் பெருகும். மக்களிடையே போக்குவரத்து அதிகரிக்கும். மக்கள் இடம் பெயர்தலாலும், நாகரிகப் பொருளாதார விஷயங்கள் மேம்படும்.

இங்கதான் கொல்லூர் கோயில் வாசல்ல இருக்கேன். அப்பா எழுந்துட்டாங்களா. பாப்பா பல் தேய்ச்சுடுச்சா. மாட்டுக்கு புண்ணாக்கு வச்சுட்டியா. காலையில தைலா பேசிச்சு நீ போன் போட்டு சொன்னியா அதுக்கு, நான் கோபிகிட்ட பேசினேன். அவன் உன்னை ரொம்ப விசாரிச்சதா சொல்ல சொன்னான். அவங்கூட பேசு.

பேருந்தில் பயணப்பட்டுக் கொண்டே அறுநூறு கிலோமீட்டருக்கு அப்பால் இருக்கின்ற கிராமத்தினரோடு தொடர்பு கொண்டு பேசலாம்.

தொலைபேசியில் அடுத்தபடியாக என்ன புரட்சிவரும் என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன். உபயோகப்படுத்தி விட்டு தூக்கி எறிந்து விடுகின்ற அட்டை டெலிபோன்கள் வரும் என்று எங்கோ படித்ததாக ஞாபகம். அட்டை டெலிபோனை தூக்கி எறிந்துவிடாதீர்கள். இதோ குமாரிவத்சலா இதில் கிருஷ்ணர் பொம்மை செய்திருக்கிறார். பூச்சாடியும் செய்திருக்கிறார். நீங்களும் முயன்று பார்க்கலாமே என்று ஏதேனும் ஒரு பத்திரிகை

உங்களை உற்சாகப் படுத்தும். பதினைந்து வருடத்திற்கு முன்பு வீடியோ கேசட் பந்தாவாக இருந்தது. பிறகு பேஜர் பந்தாவாக இருந்தது. பிறகு சிடி.ப்ளேயர் பந்தாவாக இருந்தது. இப்போது செல்போன் பந்தா செய்து கொண்டிருக்கிறார்கள். விஞ்ஞானத்தைவிட இந்த பந்தாக்கள்தான் சுவாரஸ்யமானவை.

**புவனசேகர்,**
**கந்தர்வக்கோட்டை.**

☐ ***இம்முறை மழை வருமா. வராதா.***

★ நான் என்ன மடியில் வைத்துக் கொண்டு தரமாட்டேன் என்று சொல்கிறேனா. என்னை எதற்கு மிரட்டுகிறீர்கள். சமீபமாய் திருச்சிராப்பள்ளி மாவட்டத்திற்கு போய் வந்தபோது மக்களிடையே இருந்த சோர்வும், நிலங்கள் வறண்டு கிடப்பதும், வறண்டு கிடந்த நிலங்களில் எல்லைக்கற்கள் நட்டு, விற்கத் துணிந்திருப்பதும் பார்க்க முடிந்தது. பத்து வருடம் முன்பு பச்சைப் பசேல் என்று இருந்த வயற்காடுகள் இப்பொழுது வறண்டுதான் கிடக்கின்றன.

இயற்கை தன்னுடைய மகத்துவத்தை உணர்த்துவதற்கு அவ்வப்போது பின்வாங்கி ஒடி ஒளிவதுண்டு. குடிக்கிற தண்ணீரில் குளித்தும் கால் கழுவியும், எருமை மாட்டை குளிப்பாட்டியும், பாபம் செய்கின்ற ஊரில் தண்ணீர் பஞ்சம் வரத்தான் செய்யும். நாலுபேர் குடிக்கிற ஜலமாயிற்றே இதில் நான் குளிக்கலாமா என்று எண்ணாமல் குளிப்பவன் மனித இன துரோகி. தமிழ்நாட்டில் இது அதிகம் நடந்தது என்று நான் நினைக்கிறேன். இயற்கையின் மேன்மையை, தண்ணீரின் பெருமையை மக்கள் உணரவே வானம் பொய்த்திருக்கிறதோ என்று தோன்றுகிறது. வானம் பொய்த்தாலும் மக்கள் உணர்வார்களா என்று தெரியவில்லை. இந்த முறை நல்ல மழை பொழிய வேண்டுமென்று பிரார்த்தனை செய்வோம். வேறு வழியே இல்லை. விஞ்ஞானம் மழை கொண்டு வந்து கொடுக்காது. நாம் கையேந்தி கெஞ்சத்தான் வேண்டும்.

**ப்ரியா & தேன்மொழி,**
**ஊட்டி.**

☐ ***கழுதைக்கும் கழுதைக்கும் கல்யாணம் செய்து வைத்தால் மழை பெய்யும் என்று சொல்கிறார்களே. இது மூடநம்பிக்கைதானே.***

★ ஆமாம் என்று சொன்னால் வேகமாக மறுப்பார்கள். அன்னிக்கு ராத்திரி பத்தரை மணிக்கு மழை பெய்ஞ்சுதே என்று உரக்கச் சொல்லுவார்கள். நமக்குத் தேவையானது அரைமணி நேர மழையல்ல, பருவமழை.

பலத்த மழை. இதற்கு என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள். மூன்று நாட்கள் உப்பும்; இனிப்பும் சாப்பிடாமல் பிரம்மச்சாரி இளைஞர்கள் நூறுபேர் ஒருநாள் முழுவதும் ஜபம் செய்தால் வெகு நிச்சயமாய் மிக பலத்த மழை என்று ஒரு வேதவிற்பன்னர் சொல்கிறார். இதையும் முயற்சித்துப் பார்க்கலாமா. யோசித்து எனக்குச் சொல்லுங்கள்.

ஸ்ரீநாத்,
மடிப்பாக்கம்.

☐ **சீனாவோடு இந்தியாவிற்கு நல்ல நட்பு ஏற்பட்டு விட்டதே. இது தொடருமா.**

★ இதற்கு முன்னால் சீனர்கள் நம்பிக்கை மோசம் செய்திருக்கிறார்கள். அவர்களைச் சுற்றியுள்ள எந்த நாடும் நம்பவேயில்லை. சீனா தன்னை தனிமைப்படுத்திக் கொண்டு ஒரு தாழ்வு மனப்பான்மையில் வாழ்கிறது என்பது என் அபிப்ராயம். கம்யூனிசம் என்கிற பெயரில் மிகப்பெரிய சர்வாதிகாரத்தை கைக் கொண்டிருக்கிறது. ஒரு சர்வாதிகார தேசத்தோடு சமரசம் பேசுவது என்பதும், சல்லாபம் செய்வது என்பதும் முடியாத காரியம். அந்த ராணுவத்தை, அந்த ஆட்சியை கண்டிப்பதற்கு எவரும் இல்லாத காலத்தில், எந்த வழியுமில்லாத ஆட்சியில் அவர்கள் செய்வது அனைத்தும் சரி என்பதாகவே முடியும். சீனாவின் நட்பு அழைப்பை, உறவை இந்தியா எப்போதும் சந்தேகக் கண்ணோடேயே பார்ப்பது நல்லது என்பது என் அபிப்ராயம்.

எம். பெரியசாமி,
தஞ்சாவூர்.

☐ **ஏன் சென்னை தெருக்கள் இவ்வளவு மோசமாக இருக்கின்றன. பெங்களூரிலோ, ஐதராபாத்திலோ இப்படி இல்லையா?**

★ ஆரம்ப நாட்களில் இருந்தே ஊழல் அதிகமான இடம் இந்த சாலைபோடும் வேலைதான். கொள்ளை காசு சம்பாதிக்கலாம் என்று சிலர் சொல்ல கேள்விப்பட்டிருக்கிறேன். பாதி தோண்டி போட்டுவிட்டு அப்படியே போயிருக்கிறார்களே இந்த சண்டாளர்கள். உருப்படுவார்களா என்று என் நண்பர் ஒருவர் கதறுவது வழக்கம். பள்ளத்தில் டொம் என்று அவர் ஸ்கூட்டர் விழுந்து எழுந்திருக்க இதை நோண்டிப்போட்டவன் நாசமாகப் போகவேண்டும் என்று அவர் உரக்கக் கத்துவார். சம்பந்தப்பட்ட காண்ட்ராக்டர் வீட்டில் அகால மரணம் ஏற்படட்டும் என்று சபிப்பார். தெருவோடு கட்டாமல் சாக்கடை மூடியை மேலாகக்கட்டிய இன்ஜினி

யார் கை கால்கள் செயல் இழந்து போகட்டும் என்று திட்டுவார். ஏன் இப்படி கோபப்பட்டு உங்கள் உடல்நிலையை கெடுத்துக் கொள்கிறீர்கள் என்று நான் சமாதானப்படுத்த முயற்சிப்பேன். இப்படிப்பட்ட கேவலமானவர்களை அரசாங்கம் தண்டிக்க வேண்டும். அர்சாங்கம் தண்டிக்கவில்லை. நான் பாதிக்கப்பட்டிருக்கிறேன். இவர்கள் தங்கள் வேலையை ஒழுங்காகச் செய்யாமல் என்னையும் ஒழுங்காக வேலை செய்ய விடாமல் தடுத்துவிட்டார்கள். என் மனநிலையை பாழாக்குகிறார்கள். என் சௌகரியத்தை நாசப்படுத்தி விட்டார்கள். அரசாங்கம் செலவழித்து அதை உபயோகப்படுத்தாமல் ஏமாற்றி விட்டார்கள். இது தண்டிக்கப்படாமல் போகக் கூடாது என்று வேகமாகப் பேசுவார். அரசன் கொல்லவில்லை என்றால் தெய்வம் கொல்லும் என்று ஆர்ப்பரிப்பார். நான் மெல்லச் சிரித்தேன். இல்லை, நீ போய் இம்மாதிரி சம்பந்தப்பட்ட வேலை செய்யும் காண்ட்ராக்டர்கள் வீட்டில், இன்ஜினியர்கள் வீட்டில் உற்றுப் பார் அவர்கள் இடம் நசிந்த இடமாகவே இருக்கும் என்று தீர்மானமாக சொல்கிறார். நான் சாலை காண்ட்ராக்டர்களையோ, இன்ஜினியர்களையோ இதுவரை சந்தித்ததில்லை. சந்தித்தால் விசாரிப்பேன்.

அன்வர்பாஷா,
பொள்ளாச்சி.

☐ **நீங்கள் இப்பொழுதெல்லாம் ஆன்மீகமாக எழுதி வருகிறீர்கள் இதற்கு முன் நீங்கள் எழுதிய பல நாவல்களை நான் இப்போதுதான் படிக்கிறேன். இரும்புக்குதிரைகள், மெர்க்குரிப்பூக்கள் போன்ற நாவல்களை நீங்கள் ஏன் மறுபடியும் எழுதக்கூடாது.**

★ அந்த நாவல்களெல்லாம் நான் எழுதப்பயின்ற காலத்தில் எழுதப்பட்டவை. நான் வளர்ந்து கொண்டே இருக்கிறேன். இதற்கு மாறிக் கொண்டே இருக்கிறேன் என்ற அர்த்தமும் எடுத்துக் கொள்ளலாம். மாறுதல் என்பது வளர்ச்சி, வளர்ச்சி என்பது மாறுதல். மிகச்சரியான நாவல் ஒன்றை எழுதவே திரும்பத் திரும்ப முயற்சித்துக் கொண்டிருக்கிறேன். இதுமாதிரி எழுத வேண்டும். அதுமாதிரி எழுத வேண்டும் என்ற திட்டமெல்லாம் என்னிடம் இல்லை. எழுத்தாளருடைய எழுத்து பற்றி வாசகருக்கு முன்பின்னான பிரிவுகள் இருக்கலாம். எழுத்தாளருக்கு தன் எழுத்து பற்றி ஒரே நோக்கம்தான் உண்டு. பிறருக்கு வாழ்க்கையைப் பற்றி அறிவுறுத்துகின்ற நோக்கம்தான் என்னுடைய நோக்கம். கதைக்களன்கள் மாறுபடுமேயொழிய இந்த

நோக்கத்தில் எந்த மாறுதலும் இல்லை. விருப்பு வெறுப்பற்று என் எழுத்துகளை படிக்கப் பழகுங்கள்.

எஸ்.ஜெயந்தி,
ஆரணி.

☐ **ஏன் சினிமா உலகில் விவாகரத்துகள் அதிகமாகி விட்டன.**

★ சினிமா உலகில் மட்டுமல்ல. பொது வாழ்க்கையிலும் விவாகரத்துகள் அதிகமாகிவிட்டன. சினிமா உலகத்தினர் செய்யும் செயல்கள் உடனடியாக பெரிதாக பேசப்படுகிறது. அவ்வளவே.

ப.மணிமாறன்,
சென்னை.

☐ **சமீபமாய் உங்களை ஆச்சர்ய படுத்திய விஷயம் எது?**

★ தஞ்சை பிரகதீஸ்வரர் கோயில். சபிக்கப்பட்ட இடம். ஆளே வராத கோயில். சான்னித்தியமே இல்லாத சன்னதி என்று பல்வேறு விதமாக குறை சொல்லப் பட்ட அந்தப் பெரிய கோயிலில் இந்த ஜுலை மாத சனிப் பிரதோஷத்தின்போது அந்த கோயில் வளாகம் முழுவதும் திரண்டிருந்த கூட்டம் பார்த்து வியந்து போனேன். அந்த நந்திக்கு பல குடங்கள் பாலும், தயிரும் வாசனை திரவியங்களும் அபிஷேகம் செய்யப்பட்டன. யாரேனும் ஒருவர் ஒரு கோயிலுக்கு உண்மையாக உழைத்தால் போதும் ஊர் கவனம் கோயில் நோக்கி திரும்பும். குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்திலே என்பது சரி. கொண்டாடக் கொண்டாட கோயிலுக்கு பலம் வருகிறது. கோயிலுக்கு பலம் வர மேலும் கொண்டாடப் படுகிறது. தஞ்சை பிரகதீஸ்வரர் கோயிலுக்கு யாரோ ஒரு தனிமனிதர் தன்னை அர்ப்பணித்திருக்கிறார். அவருக்கும் அங்கு வந்த பக்தர்களுக்கும் என் நமஸ்காரங்கள். தொடர்ந்து இது போன்றவை நடக்க நடக்க மழை நிச்சயம் பெய்யும் என்று தோன்றுகிறது.

சுருளிராஜ்,
ஆழ்வார்பேட்டை.

☐ **தெருவில் திரியும் பசுக்களை மாநகராட்சி அகற்றப் போகிறதாமே. நீங்கள் எப்படி அகத்திக்கீரை கொடுப்பீர்கள்.**

★ பசுக்கள் தெருவில் திரிவது நல்லதல்லதான். அதனால் போக்குவரத்து இடைஞ்சல்களும் சிறு விபத்துகளும் ஏற்பட வாய்ப்பு இருக்கின்றன. ஊரிலுள்ள பசுக்கள் அகற்றப்பட்டால் என்ன. சென்னையில் இரண்டு மூன்று இடங்களில் நல்ல பசுக் கொட்டகைகள் இருக்கின்றன. அங்கு கொண்டுபோய் அகத்திக்கீரை கொடுப்பதும் என் வழக்கம். என்னால் இயன்றவரை இந்த அன்பைச் செய்வேன்.

பொன்.குரு,
சிதம்பரம்.

☐ காதல் கொண்டேன் படத்திற்கு நீங்களா வசனம். ஆனால், உங்கள் பெயர் விளம்பரத்தில் இல்லையே.

★ இருக்கிறதே. அந்தப் படத்தில் வசனம் என்கிற சிறிய பங்குதான் எனக்கு. அதை அங்குலம் அங்குலமாக செல்லுலாய்டில் செதுக்கி யவர் செல்வராகவன். மொத்த மரியாதையும், பாராட்டும் அவருக்குத்தான் போய்ச் சேரவேண்டும். என்ன மனதிற்குள் இருக்கிறதோ அதை செல்லுலாய்டிற்குள் கொண்டு வரும் டைரக்டர்கள் மிகக் குறைவு. பல இடைஞ்சல்களை, வசதியின்மைகளைக் கடந்து செல்வராகவனால் தான் நினைத்ததை கொண்டுவர முடிந்திருப்பது பாராட்டுக்குரிய விஷயம். வசனகர்த்தாவின் வேலை ஆரம்ப கட்டத்தோடு, அதாவது கதை விவாதம் பேசி எழுதுவதோடு முடிந்து போய் விடுகிறது. ஆனால் அதற்குப் பின்தான் இருக் கிறது உண்மையான பிரச்சினை. அந்தப் பிரச்சினைகளோடு வசனகர்த்தாவுக்கு அதிகம் சம்பந்தமில்லை.

மரகதம்மாள்,
திருவண்ணாமலை.

☐ எப்படி இருந்தது இந்த ஐம்பத்தெட்டாவது வயது பிறந்தநாள்.

★ அடக்கமாக, அமைதியாக இருந்தது. நன்கு ரசித்து என் பிறந்த நாளை அனுபவித்தேன். ஜூலை ஐந்தாம் தேதியும் பிறந்த நாள், ஆறாம் தேதியும் பிறந்தநாள் என்று இரண்டு நாள் கொண்டாடினேன். ஐந்தாம் தேதி ஆங்கிலத் தேதி பிரகாரம் உண்டான பிறந்த நாள். ஆறாம்தேதி ஆனி உத்திரம். நட்சத்திரப் பிறந்த நாள். ஐந்தாம்தேதி கூடைப் பூக்கள், கொத்துப் பூக்கள் என்று நண்பர்கள் கொண்டு வர, ஆறாம்தேதி முல்லைச் சரம், மல்லிச்சரம், கதம்பம், மரிக்கொழுந்து கட்டு, தவனக்கட்டு, உதிரி அரளி, விருட்சி, துளசி, மருதோன்றி, நீல சங்கு புஷ்பம், தாமரை புஷ்பம், குவளை மலர்கள், போகன்வில்லா, நாகலிங்கப்பூ, கொடிசம் பங்கி, செண்பகம் என்று நண்பர்களும், உறவினர்களும் கொண்டு வந்து கொடுத்து திக்குமுக்காட வைத்தார்கள். ஆறாம்தேதி காலை ஏழிலிருந்து ஒன்பது வரை இடைவிடாது ருத்ரம் சொல்லி ஒன்பது அங்குலம் உயரமுள்ள பிரதோஷ சிவனுக்கு வெவ்வேறு வகையான திரவியங்களால் கைப்பட அபிஷேகம் செய்தேன். பிறகு, திரிசதி எங்கள் இல்லத்து சொல்லி மலர்களால் அம்பாளுக்கு பூஜை.

பிறகு அக்னி வளர்த்து ஆயுஷ்ஹோமம். பிறகு யோகாமாஸ்டர் ஜெயகோபால்ஜி உரத்தகுரலில் பாடல்கள் பாட நண்பர்கள் அத்தனை பேரும் கலந்து கொண்டு வழிபட்டார்கள். பிறகு பேச்சும் சிரிப்புமாய் அறுசுவை உணவு. நெற்றி நிறைய திருநீறும் ஹோமரட்சையுமாய் நண்பர்கள் உச்சி வேளையில் விடைபெற்றார்கள். பிற்பகல் கட்டிலில் சுருண்டு படுத்துக் கொள்ளும்போது என் கண்ஓரம் லேசாய் கண்ணீர் கசிந்தது. எத்தனை நெருக்கமான பிரியமான நண்பர்கள். எவ்வளவு ஆவலாக கலந்து கொண்டார்கள். நீங்கள் காட்டுகின்ற அன்புக்கு பதிலாக நான் என்ன செய்திருக்கிறேன் என்று கேள்வி எழுந்து. எது செய்தாலும் போதாது என்று தோன்றியது. ஏன் இத்தனை நெருங்கிய நட்பு என்று யோசித்தபோது நான் எழுதுகிறவிதம் என்பது புரிந்து போயிற்று. இன்னும் நன்றாக எழுவதைத் தவிர வேறு எப்படி என் அன்பை இவர்களிடம் காட்ட முடியும். என் எழுத்தின்மீது என் காதல், என் ஈடுபாடு அதிகரித்தது. நான் நேசிக்கப்படுகிறேன் என்பதைவிட மிகப்பெரிய சந்தோஷம், கர்வம் உலகத்தில் வேறு எதுவும் இல்லை. காசு கொடுத்து வாங்காத இந்தக் காதல்தான் எனக்குக் கிடைத்த வரம்.

**வி.பரமேஸ்வரி,**
**ஒசூர்.**

☐ ***அயோத்தியில் ராமர் கோவில் கட்டுவது சாத்தியம்தானா.***

★ இதற்கு காலம்தான் பதில் சொல்லவேண்டும். இந்தியாவை விட்டு பிரிட்டிஷார் வெளியேறுவார்கள் என்று ஒரு காலக்கட்டத்தில் மக்களுக்கு நம்பிக்கையே இல்லை. ஆனால் காலம் அதைச் செய்ய வைத்தது. ஆனால், ஆழ்ந்து யோசிக்கும்போது ஒன்று மட்டும் புலப்படுகிறது. இந்தப் பிரச்சினை அயோத்தியோடு மட்டும் முடிந்து போய் விடாது. மிகப்பெரிய பூகம்பங்களை இது கிளப்பும். மத்திய கிழக்கு நாடுகளின் பொருளாதாரம் ஆட்டம் காணுகிறபோது இதுபற்றிய முடிவுகள் வேகமாகும். விஞ்ஞான வளர்ச்சியில் பெட்ரோலுக்கு இணையான வேறு ஒரு விஷயம் கண்டுபிடிக்கிற போது மத்திய கிழக்கு நாடுகளின் பொருளாதாரம் ஆட்டம் காணும். அப்போது அந்த பலவீனமான இடத்தில் பலம் கொண்டவர்கள் பாய்வார்கள். அதற்கான சாத்தியக் கூறுகள் அங்கங்கே தெரிய ஆரம்பிக்கின்றன. பெட்ரோல் இல்லாமல் சூரிய ஒளியில் ஓடும் கார் ரேஸுக்கு வந்துவிட்டது. இரண்டாயிரத்து பத்தில்

பெட்ரோல் தன் மதிப்பை இழக்கும் என்று ஆருடங்கள் சொல்கின்றன. இது என் யூகம்தான். இது நடக்கலாம். நடக்காதும் போகலாம்.

இருபது வருடத்தில் தங்கம் நிராகரிக்கப்படும் என்று பிரசன்னம் பார்க்கும் ஒரு கேரளத்து நம்பூதிரி சொன்னார். நான் அதிர்ந்து போனேன். வேறு என்ன வகையில் பொருளாதாரம் இயங்கும் என்று எனக்குப் புரியவே இல்லை. அவரும் நானும் ஒரு இரவெல்லாம் பேசிக்கொண்டிருந்தோம். உலகப் பொருளாதாரத்தை வேறு எது நிர்ணயிக்கும் என்று சொன்னபோது உழைப்பு. யார் அதிகம் உழைத்து உற்பத்தி செய்கிறார்களோ அந்த இடத்தில் பொருளாதாரம் அதிகமாகும். அப்படியெனில் இந்தியாவில் அதற்குண்டான சாத்தியக் கூறுகள் அதிகம் இருக்கின்றன. இந்த பலத்தில் மைனாரிட்டி மதங்கள் அவஸ்தைப்பட நேரலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அதிகம் விஷயம் தெரிந்த எவருக்கேனும் தபால்கார்டில் கேள்வி எழுதி இதற்கான பதிலை பெற்றுக் கொள்ளுங்கள்.

**வெ.சுப்ரமண்யம்,**
**கோவை.**

☐ ***உங்கள் சொந்த ஊர் திருக்காட்டுப்பள்ளி பழமார்நேரியா.***

★ என் தாய் வழி ஊர் அது. என் தந்தை வம்சாவளி ஊர் தில்லை ஸ்தானத்து அருகே உள்ள மருவூர். மிகச்சிறிய கிராமம். பசுமை மிக்க பூமி. பலமுறை காவிரி வெள்ளத்தால் தாக்கப்பட்ட இடம்.

மருவூர் ஸ்ரீமஹாமாயா கோயிலும், பசுபதீஸ்வரர் மங்களாம்பிகை கோயிலும், மருவூர் சாம்பான் என்று அழைக்கப்படும் காவல் தெய்வமும் உண்டு. மாரியம்மாவை ஸ்ரீ மஹாமாயா என்று வேறு எங்கும் அழைக்கப்படவில்லை.

டெலிபோன் எக்ஸ்சேன்ஜ் மூன்று வழி மின்சாரம் எல்லாம் வந்துவிட்டன. சமீபமாய் அங்கு போய் வந்தேன். அங்கேயே வசிக்கலாமா என்கிற ஆவலை தூண்டியது என் கிராமம்.

**கோபாலகிருஷ்ணன்,**
**காரைக்கால்.**

☐ ***வற்றல் குழம்பு பிடிக்காது என்று சொன்ன அந்தணரை இப்பொழுதுதான் பார்க்கிறேன்.***

★ நான் அந்த சின்ன வட்டத்திற்குள்ளெல்லாம் அடங்கிவிடவில்லை தோழா. உணவு உண்பதற்கும், ஜாதிக்கும் எந்த சம்பந்தம் இருப்பதாகவும் தெரியவில்லை. நான் உணவில் சற்று கவனமாக இருப்பவன். அதனாலேயே உப்பு உறைப்பை விலக்கி விடுகிறேன். அவ்வளவே.

## திருநீற்றுப் பதிகம்

மங்கையர்க்கரசியாரின் அழைப்பை ஏற்று திருஞானசம்பந்தப் பெருமான் மதுரைக்கு எழுந்தருளினார். மதுரையில் இருந்த அந்த பொல்லாத சமணர்கள், பெருமான் தங்கியிருந்த மடத்திற்கு தீ வைத்தனர். "பையவே சென்று பாண்டியர்க்காகவே" என்றார் பெருமான். உடனே பாண்டியன் வெப்பு நோயால் அவதிப் பட்டான். சமணர்களால் அந்நோயை குணப்படுத்த முடியவில்லை. அரசியாரின் அழைப்பின் பேரில் அங்கே திருஞான சம்பந்தப் பெருமான் எழுந்தருளி 'திருநீற்றுப் பதிகம்' பாடி, திருநீறு பூசி பாண்டியனின் வெப்பு நோயைப் போக்கினார்.

மந்திரசக்தி உடைய இப்பதிகத்தைப் பாராயணம் செய்து திருநீறு அணிந்து கொண்டால் எந்த நோயும் நம்மைத் தீண்டாது. வந்த நோயும் பறந்து விடும்.

### திருச்சிற்றம்பலம்

**மந்திரமாவது நீறு**
**வானவர் மேலது நீறு**
**சுந்தரமாவது நீறு**
**துதிக்கப்படுவது நீறு**
**தந்திரமாவது நீறு**
**சமயத்தில் உள்ளது நீறு**
**செந்துவர் வாயுமை பங்கன்**
**திருஆலவாயான் திருநீறே.**

**பொருள் :**

எல்லாம் வல்ல எம்பெருமான் பவளம் போன்ற சிவந்த மேனியை உடையவர்; உமையவளுடன் இருப்பவர். திரு ஆலவாயில் (மதுரையில்) எழுந்தருளி இருப்பவர். அவரின் திருவருளாகிய திருநீறு, மந்திரம் போன்றது. வேண்டும் பலன்களைத் தரவல்லது. தேவர்களும் அணிவது. அது நமக்கு அழகைத் தரும். சான்றோர்களால் வணங்கப்படுவது. சாத்திர ஞானத்தைத் தருவது. சைவ சமயத்துக்கே உரியது. இத்தகைய திருநீறு நம்மை எம்பெருமானிடம் கொண்டு போய்ச் சேர்க்கும்.



வேதத்தில் உள்ளது நீறு
வெந்துயர் தீர்ப்பது நீறு
போதம் தருவது நீறு
புன்மை தவிர்ப்பது நீறு
ஓதத் தருவது நீறு
உண்மையில் உள்ளது நீறு
சீதப்புனல் வயல் சூழ்ந்த
திருஆலவாயான் திருநீறே.

பொருள் :

வேதங்களில் எல்லாம் புகழ்ந்து சொல்லப்படுவது திருநீறே ஆகும். அது பூசும் அடியார்களின் துன்பத்தைப் போக்கும். வினைப்பயனால் உண்டாகும் பிறவியையும், அதன் காரணமாக ஏற்படும் சிறுமையையும் நீக்கும். மந்திரங்களை கூறி அணியத்தக்கதும், உலகில் என்றும் நின்று நிலைத்திருக்கும் உண்மைப் பொருளாவதும் திருநீறாகும். இவ்வளவு பெருமை உடைய திருநீறு, குளிர்ச்சி பொருந்திய நீர்உள்ள வயல்சூழ்ந்த திரு ஆலவாய் அண்ணலின் உடைமையாகும். அத்திரு நீற்றை அணிந்து நாம் உய்வோம்.

முத்தி தருவது நீறு
முனிவர் அணிவது நீறு
சத்தியமாவது நீறு
தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு
பரவ இனியது நீறு
சித்தி தருவது நீறு
திரு ஆலவாயான் திருநீறே.

பொருள் :

திருஆலவாய் எனும் மதுரை மாநகரில் எழுந்தருளி இருக்கும் சொக்கலிங்கப் பெருமானது திருநீறு, அதை அணிபவர்களுக்கு வீடு பேற்றைத் தரும். மேலும், முனிவர்கள் விரும்பி அணிவதும், உலகில் சத்திய சொரூபமாக இருப்பதும், சான்றோர்கள் புகழ்வதும், பக்தியைத் தருவதும், போற்றத் தக்கதும், எல்லோராலும் வணங்கத் தக்கதும் திருநீறு ஆகும். மேலும் திருநீறு அஷ்டமா சித்திகளையும் தரும்.

காண இனியது நீறு
கவினைத் தருவது நீறு
பேணி அணிபவர்க்கு எல்லாம்
பெருமை கொடுப்பது நீறு



மாணம் தகைவது நீறு
மதியைத் தருவது நீறு
சேணம் தருவது நீறு
திருஆலவாயான் திருநீறே.

**பொருள் :**

ஆலவாய் அண்ணலின் திருநீறு காட்சிக்கு இனியது. அது அழகைத் தரும். மேலும் அதை அணிபவர்களுக்குப் பெருமையைத் தரும். நல்ல மாட்சிமையைத் தரும். அத்திருநீறு நல்அறிவைத் தந்து வாழ்வில் உயர்வைத் தரும்.

பூச இனியது நீறு
புண்ணியமாவது நீறு
பேச இனியது பெருந்தவத்
தோர்களுக்கு எல்லாம்
ஆசை கெடுப்பது நீறு
அந்தமதாவது நீறு
தேசம் புகழ்வது நீறு
திரு ஆலவாயான் திருநீறே.

**பொருள் :**

சோமசுந்தரக் கடவுளின் திருநீறு; அதை அணிந்து கொள்ளும் போதெல்லாம் இனிமையைத் தரும். அதைப் பற்றிப் பேசும்போதெல்லாம் இனிமையைத் தரும். மேலும், பெரிய தவத்தைச் செய்பவர்களுக்கு ஆசையைப் போக்கும். உடலுக்கும், உயிருக்கும் அதன் இறுதிவரைத் தொடர்ந்து வரும். திருநீறு உலகமெல்லாம் புகழத்தக்கதாகும்.

அருத்த மதாவது நீறு
அவலம் அறுப்பது நீறு
வருத்தம் தணிப்பது நீறு
வானம் அளிப்பது நீறு
பொருந்தமதாவது நீறு
புண்ணியர் பூசும் வெண்ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த
திருஆலவாயான் திருநீறே.

**பொருள் :**

மாளிகைகள் சூழ்ந்த ஆலவாயிலில் எழுந்தருளி இருக்கும் எம்பெருமானது திருநீறு சிறந்த செல்வமாகும். அது நம் துன்பத்தைப் போக்கும். ஊழ்வினைப் பயனால் ஏற்படும் வருத்தத்தைப் போக்கும். நம் ஆன்மாவை வானுலகில் சேர்க்கும். என்வே, எல்லோர்க்



கும் பொருந்துவதும், புண்ணியம் செய்தவர்கள் பூசுவது மாகிய திருநீறு நமக்கு நிலைபெற்ற செல்வமாகும்.

**எயிலது அட்டது நீறு**
**இருமைக்கும் உள்ளது நீறு**
**பயிலப்படுவது நீறு**
**பாக்கியமாவது நீறு**
**துயிலைத் தடுப்பது நீறு**
**சுத்தமதாவது நீறு**
**அயிலைப் பொலிதரு**
**சூலத்து ஆலவாயான் திருநீறே.**

**பொருள் :**

தம் திருக்கரத்தில் கூர்மையான சூலத்தை ஏந்திய ஆலவாய் பெருமானது திருநீறு முப்புரங்களையும் எரித்தது. அது நமக்கு இம்மைக்கும், மறுமைக்கும் துணையாக இருக்கும். எப்போதும் நாம் அணிந்து கொள்ளத்தக்கது. மேலும், அத்திருநீறு நமக்குப் பாக்கியத்தைத் தரும். சோம்பலையும், தூக்கத்தையும் போக்கி, தூய்மையையும் தரும் அத்திருநீறு.

**இராவணன் மேலது நீறு**
**எண்ணத் தருவது நீறு**
**பராவணமாவது நீறு**
**பாவமறுப்பது நீறு**
**தராவணமாவது நீறு**
**தத்துவமாவது நீறு**
**அராவணங்கும் திருமேனி**
**ஆலவாயான் திருநீறே.**

**பொருள் :**

பாம்புகளையே ஆபரணமாக அணிந்த ஆலவாய் அண்ணலின் திருநீறு, இராவணன் அணிந்ததும், எல்லோராலும் எப்போதும் மதிக்கத்தக்கதும், அம்பிகையின் திருவடிவாகவே விளங்குவதும், நாம் முப்பிறவிகளில் செய்திருந்த பாவங்களை எல்லாம் போக்குவதும், உலகியல் நலமாவதும், உள்பொருளாவதும் ஆகும்.

**மாலொடு அயன் அறியாத**
**வண்ணமும் உள்ளது நீறு**
**மேலுறை தேவர்கள் தங்கள்**
**மெய்யது வெண்பொடி நீறு**
**ஏல உடம்பு இடர் தீர்க்கும்**
**இன்பம் தருவது நீறு**
**ஆலம் அது உண்ட மிடற்று**
**எம் ஆலவாயான் திருநீறே.**



பொருள் :

ஆலகால விடத்தை உண்டு அடக்கிய கழுத்தை உடைய ஆலவாய் ஐயனின் திருநீறு, திருமாலும் பிரம்மனும் அறிய முடியாத பெருமை உடையது. வான் உலகத்தேவர்கள் எல்லோரும் விரும்பித் தம் உடலில் அணிந்து கொள்வது. அந்த வெண்மையான திருநீறு நம் உடற்பிணிகளை எல்லாம் முழுவதும் நீக்கி எப்போதும் இன்பத்தைத் தரும்.

**குண்டிகைக் கையர்களோடு**
**சாக்கியர் கூட்டமும் கூடக்**
**கண் திகைப்பிப்பது நீறு**
**கருத இனியது நீறு**
**கண் திசைப்பட்ட பொருளார்**
**ஏத்தும் தகையது நீறு**
**அண்டத்தவர் பணிந்தேத்தும்**
**ஆலவாயான் திருநீறே.**

பொருள் :

எல்லா உலகங்களிலும் உள்ளவர்களும் வணங்கிப் போற்றும் ஆலவாய அண்ணலின் திருநீறு, சமணர், பௌத்தர்களின் ஊனக் கண்களைத் திகைக்கச் செய்வது ஆகும். நினைக்க நினைக்க இனிமை தரும். எட்டுத் திக்குகளிலும் உள்ள நல்லவர்கள் வணங்கும் தன்மையுள்ளதாகும்.

**ஆற்றல் அடல் விடை ஏறும்**
**ஆலவாயான் திருநீற்றைப்**
**போற்றிப் புகலி நிலாவும்**
**பூசுரன் ஞானசம்பந்தன்**
**தேற்றித் தென்னன் உடலுற்ற**
**தீப்பிணி ஆயினதீரச்**
**சாற்றிய பாடங்கள் பத்தும்**
**வல்லவர் நல்லவர் தரமே.**

பொருள் :

ஆற்றல் உடைய எருதின்மேல் ஆரோகணித்து வரும் ஆலவாய் அண்ணலின் திருநீற்றைப் போற்றிச் சீர்காழியில் தோன்றிய, புகழ்மிக்க திருஞான சம்பந்தனாகிய அடியேன், பாண்டிய வேந்தனின் வெப்பு நோய் தீரும் படியாகத் திருநீற்றின் பெருமையை விளக்கி அருளிச் செய்த பத்துப் பாடல்களையும் பயின்று, திருநீற்றின் பெருமையை உணர்ந்து நடக்கும் நல்லவர்கள் எல்லா விதமான நன்மைகளையும் பெற்றுச் சீரோடும், சிறப்போடும் வாழ்வார்களாக.

உரை எழுதியவர்

திருப்பனந்தாள் புலவர். க.துரியானந்தம்



பேதமில்லா
பேனா நட்பு வேண்டி
ஒரு தேடலுடன் உலாவும்
இதயங்களுக்கு ஒத்தடம்
தரவே இந்தப்பகுதி.

# நட்புகம்



எல்.எஸ்.விஜயலட்சுமி,
16, கோவிந்தசாமி
ரெட்டித்தெரு,
ஜோலார்பேட்டை-635851.

வி.பாலமுருகன்,
512/742, அக்ரஹாரம் தெரு,
தாளவாடி (Po),
ஈரோடு - 638 461.

ஜே.ஆர்.ராகவன்,
32 ஏ, குளக்கரைத்தெரு,
திருமுல்லைவாயல்,
சென்னை - 600 062.

ஜே.கோவிந்தராஜன்,
2, இளங்கோ தெரு,
ஐயப்ப நகர்,
திருச்சி - 620 021.

எம்.சுரேஷ்,
கீழத்தெரு,
புலவன் காடு,
தஞ்சை - 614 625.

எஸ்.பி.சக்திவேல்,
2/6, சுப்ரமணியர் தெரு,
முகலிவாக்கம்,
சென்னை - 600 116.

எழுத்துச்சித்தர்

# பாலகுமாரனின்

## பல்சுவை நாவல்கள்



பல்சுவை நாவலில் இதுவரை எழுத்துச் சித்தர் எழுதிய நாவல்களின் பட்டியல் வாசகர்களின் வேண்டுகோள்களின்படி வெளியிடப்படுகிறது. தேவையான நாவல்கள் வேண்டுவோர் விலையுடன் கூரியர் செலவும் சேர்த்து மணி யார்டர் அல்லது டி.டி. மூலம் ஸ்ரீ ஐஸ்வர்யா பப்ளிகேஷன் என்ற பெயரில் அனுப்பி வைக்கவும்.

**முகவரி :**

**பல்சுவை நாவல்,**
**ஸ்ரீ ஐஸ்வர்யா பப்ளிகேஷன்,**
**12/29, நைனான் தெரு,**
**அபிராமபுரம், சென்னை - 18.**

| நாவலின் பெயர் | விலை |
|---|---|
| 1. பணம் காய்ச்சி மரம் | 8/- |
| 2. நல்ல முன்பனிக்காலம் | 7/- |
| 3. சுழற்காற்று | 8/- |
| 4. என் அன்புள்ள அப்பா | 15/- |
| 5. என்றென்றும் அன்புடன் | 10/- |
| 6. நான் என்ன சொல்லிவிட்டேன் | 10/- |
| 7. கல்திரை | 10/- |
| 8. ஆனந்த யோகம் | 12/- |
| 9. காதல் வரி | 10/- |
| 10. தனரேகை | 10/- |
| 11. சிம்மாசனம் | 10/- |



| | |
|---|---|
| 12. தனிமை தவம் | 10/- |
| 13. மனக்கோயில் | 10/- |
| 14. தங்கக் கை | 12/- |
| 15. காதற்பெருமான் | 15/- |
| 16. எங்கள் காதல் ஒரு தினுசு | 12/- |
| 17. மரக்கால் | 10/- |
| 18. பட்டாபிஷேகம் | 12/- |
| 19. கள்ளி | 12/- |
| 20. பேய்க்கரும்பு | 12/- |
| 21. பந்தயப்புறா | 15/- |
| 22. அரசமரம் | 12/- |
| 23. கனவுகள் விற்பவன் பாகம் - 1 | 10/- |
| 24. கனவுகள் விற்பவன் பாகம் - 2 | 10/- |
| 25. இரண்டாவது கல்யாணம் | 12/- |
| 26. கொஞ்சும் புறாவே | 12/- |
| 27. பொன்னார் மேனியனே | 15/- |
| 28. சக்ரவாஹம் | 15/- |
| 29. பிரம்புக்கூடை | 12/- |
| 30. அத்திப்பூ | 12/- |
| 31. துளஸி | 12/- |
| 32. பொய்மான் | 12/- |
| 33. ஏழாவது காதல் | 15/- |
| 34. அவரும் அவளும் | 12/- |
| 35. நான்காம் பிறை | 12/- |
| 36. வேட்டை | 12/- |
| 37. கடிகை | 15/- |
| 38. கல்யாணத்தேர் | 10/- |
| 39. ஏனோ தெரியவில்லை | 10/- |
| 40. போகன்வில்லா | 10/- |
| 41. மெர்க்குரி பூக்கள் | 12/- |
| 42. முன் கதைச்சுருக்கம் | 12/- |



43. பாலகுமாரன் கட்டுரைகள் 10/-
44. பவழமல்லி 10/-
45. கனவு கண்டேன் தோழி 10/-
46. முதிர்கன்னி 10/-
47. அன்பரசு 10/-
48. உச்சித்திலகம் 10/-
49. மனசே மனசே கதவைத்திற 12/-
50. உத்தமன் 12/-
51. குயிலே குயிலே 12/-
52. மாவிலைத் தோரணம் 12/-
53. சிறுகதைகளும் கட்டுரைகளும் 10/-
54. சூரியனோடு சில நாட்கள் 10/-
55. போராடும் பெண்மணிகள் 10/-
56. இனிது இனிது
காதல் இனிது பாகம் - 1 10/-
57. இனிது இனிது
காதல் இனிது பாகம் - 2 10/-
58. உறவில் கலந்து
உணர்வில் நனைந்து 10/-
59. யானை வேட்டை 12/-
60. பனிவிழும் மலர்வனம்
கடல் நீலம் 12/-
61. ஒரு காதல் நிவந்தம் 12/-
62. வில்வமரம்
காற்றுக்கென்ன வேலி 12/-
63. செவ்வரளி
அம்மாவும் பத்து கட்டுரைகளும் 12/-
64. ஆசை என்னும் வேதம் -1 10/-
65. ஆசை என்னும் வேதம் -2 10/-
66. என்னுயிரும் நீயல்லவோ 15/-
67. இரண்டாவது சூரியன் 15/-
68. தொப்புள் கொடி 15/-
69. ஆனந்த வயல் 15/-
70. திருப்பூந்துருத்தி 20/-

# எடைமேடை



■ நான் ஒரு பொறியியல் பட்டதாரி. ராம க்ருஷ்ணர் மற்றும் ஸ்ரீராக வேந்திரரின் மானஸீக சிஷ்யன். நான் ஆங்கில முறையில் கல்வி கற்று வந்த காரணத்தால், ஆங்கில நாவல்களை மட்டுமே படிக்கும் வழக்கத்தைக் கொண்டிருந்தேன். அதற்குமேல் நான் செய்த பாவம், தமிழ் புத்தகம் படிக்க கிடைத்த தருணத்தில், அதைப் புறக்கணித்தேன். ஆனால் எனக்கு ஆங்கில மோகம் அல்ல, தமிழை இழிவு படுத்தும் நோக்கமும் அல்ல. (நான் தமிழில் நல்ல பல கவிதைகளை எழுதியிருக்கிறேன்.) தமிழ் நாவலில், தமிழின் ஆழத்தை அளந்து பார்க்கும் ஞானம் என்னிடம் அப்போது இல்லை. தற்போது, என் சிற்றன்னையின் மூலமாக தங்களின் மூன்று புத்தகங்களை படிக்கும் பாக்கியம் பெற்றேன். தமிழை நேசிப்பவன் மட்டுமே தமிழை நல்ல சுவையில் எழுத முடியும். அதை உங்களின் புதினத்தில் ஆத்மபூர்வமாக அனுபவித்தேன். தாசியையும் புனிதப்படுத்தி அவர்களும் இறைவனுக்கு தொண்டு செய்யும் நக்கன் என்பவர்களாக பெருமதிப்பு கொடுத்த தங்களின் இனிய யட்சினி பாராட்டத்தக்கது. உங்களுக்கு கொடுத்த எழுத்துச் சித்தர் என்கிற பட்டம் எவ்வளவு பொருத்தமாக உள்ளது என்று என்னை நெகிழவைத்தது. தங்களை நேரில் கண்டு மேலும் பல விவரங்களை தெரிந்துகொள்ள ஆவலோடு இருக்கிறேன். தங்



களின் பார்வை நேரத்தை தெரியப்படுத்தினால் பாக்கியவானாவேன்.

– க.ஸ்ரீனிவாசராமானுஜம், சென்னை.

▣ ஒரு வெள்ளிக் கிழமை தங்களை சந்தித்து ஆசீர்வாதம் பெற்றது, என் தங்கை கண்மணிக்கு மிகுந்த மன அமைதியை கொடுத்துள்ளது. அதன் பிறகுதான் அவள் முகம் தெளிவாகவும், அமைதியுடனும் காணப்படுகிறது. தூங்கும்போது கூட இறுகி காணப்பட்ட அவள் முகம் இப்பொழுது ஒருவிதமான சந்தோஷத்துடன் காணப்படுகிறது. மனதுக்கு மிகவும் மகிழ்ச்சியாக உள்ளது. கடந்த இரண்டு நாட்களாக வீட்டில் ஒரு சந்தோஷம். ஒரு இனம் புரியாத மகிழ்ச்சி அனைவர் முகத்திலும், நடவடிக்கைகளிலும் காணப்படுகிறது. மொத்தத்தில் வீட்டில் குதூகலம் அதிகரித்துள்ளது. இந்நிகழ்வு தங்களால்தான். தங்களின் எல்லையற்ற கருணையினால்தான்.

வெள்ளிக்கிழமை தாங்கள் கூறியபடி முண்டகக் கண்ணியம்மன் கோயில் சென்றுவிட்டு, திரு. ஷெல்வி அவர்களை சந்தித்தோம். மொத்தம் ஐந்து பரிகாரங்களை கூறினார். கடைபிடிப்பதற்கேற்ற எளிய பரிகாரங்களே. அதன் பிறகு அரண்மனைக்காரத்தெரு காளிகாம்பாள் கோவில் சென்றுவிட்டு, தங்களிடம் விடை பெறுவதற்காக தங்கள் வீட்டிற்கு போன் செய்தேன். அம்மா பேசினார்கள். தங்களிடம் மேற்கண்ட விஷயத்தை தெரிவிக்கும்படி கூறிவிட்டு ஊருக்கு திரும்பினோம்.

தங்களை வந்து சந்திப்பது எனக்கு மிகப்பெரிய அமைதியை, குதூகலத்தை கொடுக்கிறது. பகவான் யோகிராம்சுரத்குமார் அவர்கள் சித்தி அடைந்த அன்று, திருவண்ணாமலையில் அவர் திருஉருவம் முன்பு நின்றிருந்தபோது, இனம் தெரியாத ஒரு வெறுமை தாக்கி கதறி அழுதேன். மனம் பலதும் புலம்பிகொண்டிக்கிறது. எனது பதினெட்டாவது வயதில் இருந்து பகவானை தரிசித்து கொண்டிருந்தாலும், ஒரு ஆழ்ந்த ஈடுபாடு, பக்தி ஏற்பட்டிருந்தது. அந்த சமயத்திற்கு ஒரு சில ஆண்டுகளுக்கு முன்பிருந்துதான், பகவான் தேரடி தெருவில் இருந்த போது எனக்கு ஆழ்ந்த பக்தி இல்லை. பகவானிடம் ஆழ்ந்த பக்தி கொண்டிருந்த போது பகவானின் உடல் நிலை காரணமாக அதிகம் நெருங்கிப் பழக அனுமதிக்கப்படவில்லை. இது பக

வானின் விருப்பமே. ஆனாலும் இது எனக்கு ஒரு ஏக்கத்தையே கொடுத்தது. அதாவது பகவானின் (சித்தி) சமாதிக்கு பிறகு எனக்கு ஏற்பட்ட மனநிலை இது. அதனால்தானோ என்னவோ அவர் திருஉடல் முன்பு சென்று நின்றபோது அவ்வளவு கதறல் என்னிடம் இருந்து வெளிப்பட்டது. ஆனால் பகவான் என்னை தங்களிடம் அனுப்பி வைத்து விட்டார். தாங்கள் முதுகில் தட்டும்போது, பகவானின் தேரடி தெரு வீட்டில் இருக்கும்போது அவரை வணங்கும் பேறு பெறுவது போலவே உள்ளது. தங்களிடம் வந்து தங்களுடன் இருக்கும் அந்த சிறிய நேரம் மனம் மிகவும் அமைதியாக உள்ளது. இதை பற்றி கேட்க வேண்டும். அதைபற்றி கேட்க வேண்டும் என்று நினைத்து கொண்டு வந்தாலும் தங்கள் முகத்தை பார்த்தவுடன் குரலை கேட்டவுடன் ஒரு அமைதி வந்து விடுகிறது. உங்களுடன் ஏற்பட்ட சந்திப்புகள் அனைத்தும் பகவானின் ஆசிர்வாதமே.

உடையார் இரண்டு பாகமும் படித்து விட்டேன். சரித்திரக்கதை என்றாலே பெண்களை பற்றிய வர்ணனையே அதிகமாக இருக்கும் என்பதை மாற்றி அதிலும் வாழ்க்கையை பற்றிய விசாரமும், ஆன்மீகமும் கலந்து எழுதுவது தங்களுக்கு மட்டுமே இறைவனால் கொடுக்கப்பட்ட வரமாகும். உடையார் வாங்குவதை இந்த வர்ணனைகளால் சரித்திரக் கதைகள் மீது (கல்கி மட்டும் விதிவிலக்கு) ஏற்பட்டிருந்த அலுப்பு காரணமாக தள்ளி போட்டுக் கொண்டே வந்தேன். ஆனால் அது எவ்வளவு தவறு என்பதை நாவல் படித்தவுடன் புரிந்து வருத்தப்பட்டேன். ஆனால் தங்கள் கைகளால் பரிசாக எனக்கு வழங்கப்பட்டு நான் படிக்க வேண்டும் என்று இருக்கும்போது எப்படி என்னால் வாங்க முடியும் என்று சமாதானமும் எனக்கு ஏற்பட்டது.



உடையார் ஸ்ரீராஜராஜத் தேவர் போன்ற அரசரும், பிரம்மராயர் போன்று அவருக்கு ஆலோசனையும், உதவியும் செய்ய கூடியவர்களும் உடைய அரசாங்கம் இப்பொழுது இருந்தால் எவ்வளவு சிறப்பாக, செழிப்பாக நாடு இருக்கும் என்ற நினைப்பு ஏக்கமாக வெளி வருகிறது. போர் அடிமைகளிலிருந்து கதையில் வரும் ஒவ்வொரு பாத்திரமும் ஆழ்ந்து புரிந்து படித்தால் வாழ்க்கையைபற்றி ஏதாவது ஒன்றை, ஒரு செயலின் மறுபக்கத்தை பார்க்கும் புத்தியை, வாழ்க்





கையை பற்றிய ஒரு பாடத்தையும், அதனால் ஒரு தெளிவையும் கொடுப்பதாகவே உள்ளது. இதை எனக்கு தனித்தனி யாக தெளிவாக எழுத்தில் கொண்டு வரதெரிய வில்லை. காலம் எதுவா னாலும் பெண்களுக்கு குழந்தை இல்லாத ஏக்கம் ஒன்றாகவே உள்ளது என் பதும், அது இறை அவதாரங் களால் சரி செய்யபட்டிருக் கிறது என்பதையும் அறிந்து கொள்ள முடிகிறது.

பெண்கள் மீது தங்க ளுக்கு உள்ள தாய்மை பாசத்தை, பிரியத்தை, அக் கறையை இந்நாவல் பல இடங்களில் பிரதிபலிக் கிறது. திருவக்கரைக்கு அரு கில் சுமார் அறுபது கிலோ மீட்டர் இருந்தும் இவ்வளவு நாட்களாக செல்ல சந்தர்ப் பம் கிடைக்கவில்லை. நாளைக்கு திருவக்கரை சென்று காளிகோவிலை தரிசிக்கலாம் என்றிருக்கி றேன். தங்களை மீண்டும் சந்திக்கும் சந்தர்ப்பம் விரை வில் வரவேண்டும் என்று பகவானை வேண்டி இக்கடி தத்தை முடிக்கிறேன்.

- வி.எஸ்.கண்ணன்,
பாத்திர வியாபாரம்,
கீழ்பெண்ணாத்தூர்.

 கோபத்தை முடிந்த வரை ஒழித்திட உதவிய குருவிற்கு, இப்பந்தம் என்றென்றும் ஜென்ம ஜென்மமாகத் தொடர விரும்புகிறேன்.

நான் 1996ல் தங்கள் நாவல் படிக்க நேர்ந்தது. உங்கள் நாவல் கடலோரக் குருவிகளே. முதல் தோழமை. அதில் லயித் திருந்தபோது திருப்பூந் துருத்தி படித்து, பின் மொர்க் குரிப்பூக்களை உணர்ந்து, இனிது இனிது காதல் இனிது யோசித்து, எனக்குள் பேசுகிறேன். வழி நடக் கிறேன். இதற்கிடையில் தங் களின் படைப்புகள் எண் ணற்றவற்றை அலசியிருக் கிறேன்.

சமீபத்தில் தங்களின் கவிழ்ந்த காணிக்கை படிக்க நேர்ந்தது. நான் திருவக் கரை அருகில் இருப்பதால் நாங்கள் இருவரும் அக் கவிழ்ந்த காணிக்கையைக் காண தேடிச் சென்றோம். சோழர்களின் உணர்வினை உறிஞ்ச படையெடுத்தோம்.

ஐயா, தாங்கள் எதை வைத்து திருவக்கரையி லிருந்து பாண்டிச்சேரி செல் லும் சாலையில் உள்ளது என்று எழுதினீர்கள்.

அந்த காவல் தெய்வம் பாண்டிச்சேரி, திருக்கனூர் சாலையில் சன்னியாசிக் குப்பம் என்னும் ஊரின் சாராயக்கடையின் வாயிலில் உள்ளது. திருவக்கரையி லிருந்து செல்வதென்றால் பன்னிரெண்டு கிலோமீட்டர்

தூரம் செல்லவேண்டும். அதுவும் நேர்வழி அல்ல. பஸ்வசதியும் இல்லை. ஆனால், பாண்டிச்சேரியிலிருந்து சன்னியாசிக் குப்பத்திற்கு எண்ணற்ற நகரப் பேருந்துகள் செல்கின்றன. நான் தங்களுக்கு அந்த நந்தியின் புகைப் படத்தை அனுப்பி வைக்கிறேன்.

என்றும் தாங்கள் காட்டிய முக்கிய கருத்துக்களை மனதில் இருத்தி செயல்பட்டு வருகிறேன் இன்னமும்.

'இன்னா செய்தாரை நன்னயம் செய்ய மனமில்லை' இது ஒன்றினை மட்டும் செயல்படுத்த நான் மனிதனாகி விடுவேன். எவ்வளவு உதவி செய்ய முடியுமோ அவ்வளவிற்கு ஏழைக் குழந்தைகளுக்கு உதவுகிறேன்.

ஒரு வகையில் நீங்களே என் குரு. நான் உங்களை சந்தித்து கற்காவிட்டாலும், ஏகலைவன்போல் உங்களை மானசீகமாக மனதினில் உங்கள் எழுத்துக்களை குருவின் வாக்காகக் கொண்டுள்ளேன்.

அநேகருக்கு உதவி செய்கிறேன். உதவி பெற்றவர் உதாசீனப்படுத்தும்போது நான் எவ்வளவு உதவி செய்தேன். இப்படி மறந்து விட்டார்களே என மனம் துன்பப்படுகிறது. இது சரியா, தவறா எனத் தெரியவில்லை. தயவு செய்து இதனை எனக்குத் தெளிவுபடுத்தினால் நன்றாக இருக்கும் என எண்ணுகிறேன். தாங்களுக்கு நேரமிருந்தால் எனக்கு விளக்கவும்.

- அ. அந்தோணி பாக்கியராஜ்,
ஆசிரியர்,
திண்டிவனம்.

◘ விளக்கவே முடியாத விஷயத்தை விளக்குமாறு தங்களை நான் வேதனை படுத்தியிருந்தால் என்னை மன்னித்து விடுங்கள்.

ஒரு செல்ல நாய்க்குட்டி மனிதனிடம் சென்று நீயும் என்னை மாதிரி ஒரு காலத்தில் நாயாய் இருந்தவன் தானே. என்னை மட்டும் விட்டு நீ மட்டும் எப்படி மனிதன் ஆனாய். எனக்கும் உன்னை மாதிரி ஆகணும். சொல்லிக் கொடு என்று கேட்டால், அந்த மனிதனும் அந்த நாய் குட்டியை உயிராய் நேசித்து இருந்தால், அவன் எப்படி குழம்புவான். எவ்வளவு தவிப்பான். எப்பேர்பட்ட கேள்வியை இது கேட்டுவிட்டது. இதற்கு என்ன பதில் சொல்வது என்று கலங்குவான். அது மாதிரி நான் ஏதாவது கேட்டு உங்களை தவிக்க விட்டிருந்தால் Please excuse me.

உன்னை மாதிரியே நானும் காலை எழுந்து பல் தேய்க்கட்டுமா. பேண்ட்,



சர்ட் போட்டுகட்டுமா. ஆபீஸ் போகட்டுமா.

இப்படியெல்லாம் செய்தால் நானும் மனிதன் ஆகலாமா என்று அந்த நாய்க்குட்டி கேட்டால் அந்த மனிதன் எவ்வளவு விதிர்த்து போவான். பல் தேய்ச்சா, பேண்ட், சர்ட் போட்டா மட்டும் மனுஷன் ஆயிட முடியாதுடி செல்லம், இதெல்லாம் பண்ணாட்டி கூட மனுஷனா இருக்கலாம் என்று சொல்லி, அந்த நாய்க்குட்டி புரியாமல் ங்கே.. என்று விழித்து, அந்த மனிதனை காயப்படுத்தியது போல் நான் ஏதாவது தங்களை காயப்படுத்தியிருந்தால் *I am sorry my dear Balakumaran.*

மனிதனாய் வாழ்தல் என்றால் என்ன என்று ஒரு நாய்க்குட்டிக்கு எப்படி புரிய வரும். வேறு வழியே இல்லை. அது மனிதனாய் பிறக்கும்போது மட்டுமே அதற்கு புரிய வரும்.

பாலகுமாரன் யார். எந்த மாதிரி அனுபவத்தை அவர் பெற்றிருக்கிறார் என்று எப்போது புரிய வரும். நான் பாலகுமாரனாய் ஆகும் போது மட்டுமே அது புரிய வரும். எனக்கு அது தெரிய வரும்.

நாடி சுத்தியினாலோ, பூஜை செய்வதினாலோ இல்லை. உன் குரு நாமத்தை உன் போலவே நானும் நெக்குருகி பாடுவதாலோ எனக்கு அது கிட்டவே கிட்டாது.

*I will wait Balakumaran. I will wait.*

காயத்ரி என்ற இந்த நாய்க்குட்டிக்கும் உன் வீட்டு 2nd floorஇல் ஆங்கிலத்தில் அலட்டியபடி பேசினானே அந்த அருண் ஷோரிக்கும் (என் அண்ணன் அவனுக்கு வைத்த Nick Name) வித்யாசமே இல்லை. பாலகுமாரன் என்ன.. அது பாலகுமாரனின் மடியில் அளவளாவும் வாய்ப்பு பெறாத நாய், நான் வாய்ப்பு பெற்ற நாய் அவ்வளவே. மற்றபடி எனக்கும் அந்த அருண் ஷோரிக்கும் வித்யாசமே இல்லை பாலகுமாரன். இருவருக்குமே பாலகுமாரன் யார் என்பது தெரியாது. தெரிந்து கொள்ளவும் முடியாது. ஓரிரு வித்யாசங்கள் இருக்கலாம். காய்த்ரி என்கிற நாய் சற்றே குளிர்வான, அதிர்வலைகள் நிரம்ப பெற்ற நாயாக இருக்கலாம்.

*It may be a Lucky Dog. If life goes on in an arithmetical order, Then Gayathri becoming like Balakumaran will be soonet & faster than that Arun Shori becoming like Balakumaran. This is all. But as of now.. in our essence we are one & the same. Both*



*of us are devoid of knowing who Bala is & what he has attained.*

*Laughter maketh a man* என்று நான் புத்தகத்தில் படித்திருக்கிறேன். இந்நாள் சிரிக்கவே மாட்டேன்றான். அதனால் இவன் மனிதனே இல்லை என்று ஒரு நாய் ஒரு மனிதனுக்கு சர்ட்டிபிகேட் கொடுத்தால் அது எவ்வளவு பெரிய வேடிக்கை. எவ்வளவு பெரிய விபரீதம். அந்த வேடிக்கையை, விபரீதமான முடிவுகளை எடுக்காத நாய்க்குட்டி இந்த காயத்ரி.

சிரிப்பு என்கிற வினோதமான ஒலியை எழுப்ப எனக்கு தெரியும். அதனால் நான் மனிதன் என்று ஒரு நாய் சொன்னால் அது எவ்வளவு பெரிய வேடிக்கை. எவ்வளவு பெரிய விபரீதம். அதை செய்ய விரும்பாத நாய் இந்த காயத்ரி.

*I will wait Balakumaran. I will wait.*

பாவம் என்ற கல்லறைக்கு பல வழி. தர்ம தேவன் கோவிலுக்கு ஒரு வழி. ஒரே வழி. பாலகுமாரன் என்ன சொல்ல வருகிறான். எதை புரிய வைக்க விரும்புகிறான். இதற்கு ஒரே வழி மட்டுமே உள்ளது. அது நான் நீயாய் ஆவது மட்டுமே. இதில் குறுக்கு வழி சாத்தியமே இல்லை.

*I will wait Balakumaran. I will wait.*

இருந்தாலும் ஒரு மெல்லிய வேதனை எனக்குள் இருக்கவே செய்கிறது.

உனக்கு இருக்கும் ஒரு 10% பேச்சுதிறமை, எழுத்து திறமை உள்ளவனெல்லாம் ஆஷ்ரமம், Hospital, Trust என்று ஊரையே நாறடித்து கொண்டிருக்கும்போது மிக அழகான பேச்சுதிறமை, எழுத்து திறமை, மனதை மயிலிறகால் வருடும் வித்தை பெற்றிருந்தும் மயிலாப்பூரில் ஒரு பிளாட், ஒரு கார் போதுமென்று முடங்கி கிடக்கும் மிக நேர்மையான ஆத்மா நீ.

ஓஷோவிடமிருந்து சுடுவது எப்படி, ஜே.கே.விடமிருந்து ல்வட்டுவது எப்படி என்று கற்றவனெல்லாம் இன்றைக்கு குருவாகி ஓஹோ என்று வாழ்க்கை நடத்திக் கொண்டிருக்கும் போது மிக ஒரிஜினலான சரக்கை வைத்துக்கொண்டு மாத நாவல் போட்டுக் கொண்டு, நான் குரு நிலையை அடையவே இல்லை என கூவிக் கொண்டிருக்கும் மிக நேர்மையான, பொறுப்புணர்ச்சி உள்ள, எளிமையான, சத்தியத்திற்கு மிக அருகாமையிலுள்ள அழகு நீ. இந்த அழகை விட்டு விலகி நான் வாழ்க்கை நடத்த வேண்டுமென்பது எவ்வளவு வேத



## கூப்பன்கள்



*னையான விஷயம்.*

*மிக மோசமான ஒரு கிறுக்கலை கிறுக்கி Mummy Mummy Look at my drawing என்று வரும் குழந்தையை, எவ்ளோ அழகா இருக்கு வாடி என் செல்லம் என்று ஒரு தாய் உச்சி முகர்வது போல ஆ.. நீ இவ்ளோ கஷ்டப்பட்டு முன்னுக்கு வந்திருக்கியா. ஐ.. இவ்ளோ அழகா லவ் பண்ணியிருக்கியா. வாடி என் செல்லம்.. என்ன வேணும் உனக்கு. உன்னை வெச்சு நாவல் போட்டுடவா. Happy என்று கொஞ்சும் தாய்மை நிறைந்த அழகு நீ. இந்த அழகை விட்டு விலகி நான் வாழவேண்டுமென்பது எவ்வளவு வேதனையான விஷயம்.*

*ஓஹோ நான் இப்புடி இப்படி பேசினா, நடந்துண்டா, எழுதினா நான் ஞானின்னு முடிவு பண்ணிடுவியா. சரி.. நான் அப்படி அப்படி பேசறேன்.. நடந்துக்கறேன், எழுதறேன், எங்கே இப்போ என்னை ஞானின்னு நம்பு பார்க்கலாம் என்று சீண்டி விளையாடும் ஒரு Mischieveous Beauty நீ. It hurts me to be away from you*

*ஒரு பெண்ணின் நிர்வாணத்தை அவளுக்கு தெரியாமல் பார்க்க நேர்ந்தும் மனதில் அதை தேக்காமல், அந்த உண்மையை அந்த பெண்ணிடம் கூட சொல்*

லாமல் இருத்தல் எவ்வளவு பெரிய நாகரீகம். எவ்வளவு அழகு. அதுபோல் ஒரு மனிதனின் மனதையே நிர்வாணமாக பார்க்க நேர்ந்தும், உள்ளே நீ எப்படி என்று எனக்கு தெரியுமே என்ற நமுட்டு சிரிப்புகூட சிரிக்காத நாகரீக அழகு நீ. இந்த அழகை விட்டு விலகி நான் வாழ வேண்டும். How sad.

அட... உன் பிறவி பயனே என்னை ஏமாற்றுவதுதானா. நீ பிறந்ததே என் தலையில் மிளகாய் அரைக்கத்தானா. சரி.. சீக்கிரம் அரைத்துவிட்டு போயேன்.. நான் வேண்டுமானால் உதவட்டுமா என்று கேட்கக்கூடிய ஆச்சரியம் நீ. இந்த அழகைவிட்டு நான் விலகி வாழ்க்கை நடத்த வேண்டும். How sad.

No problem Bala kumaran.. I will wait. என்ன எழவு. சினிமா Climax இல் ஒரு அசட்டு Hero, நான் தான் CBI Officer என்று ஒரு முட்டாள்தனமான அதிர்ச்சியை Audience க்கு தருவது போல் உடலை விட்டு உயிர் பிரிந்த பிறகு ஆ.. பாலகுமாரன் டுபாக்கூர் party கிடையாதா. உண்மையிலேயே ஒரு உயர்ந்த ஆத்மாவா என்ற அறிவு கெட்ட அதிர்ச்சி எனக்கு நேரக்கூடாது என நினைத்தேன். No probs.. I will wait Balakumaran.

உடலை விட்டு உயிர் பிரிந்த பிறகு a, b, c யிலிருந்து பாடத்தை தொடங்காமல் d, e, f லிருந்து தொடங்க ஆசைப்பட்டேன். நான் காத்திருப்பேன் பாலகுமாரன்.

நான் எப்படியெல்லாம் காத்திருக்க வேண்டும் பாலகுமாரன்.. Please teach me. சுவாசத்தை, உடலை, போன வாட்டி மாதிரி, இந்த வாட்டி சொதப்பலான Letter எழுதகூடாது. அழகா எழுதணும் என்ற எண்ணத்தை உற்று நோக்கியபடி காத்திருக்கவா. கல்யாணம் செய்து, சமையல் கற்று காத்திருக்கவா. இன்னும் எப்படியெல்லாம் காத்திருப்பது என்று கற்றுத் தாருங்கள் பாலகுமாரன்.

ஒரு நாய்க்குட்டிக்கும் மனிதனுக்கும் என்ன பகிர்தல் சாத்தியம். என்ன புரிதல் சாத்தியம்.

மூலாதாரச் சக்கரம்கூட விழிப்படையாத காயத்ரிக்கும் அனாகதச் சக்கரம் வரை விழிப்படைந்த பாலகுமாரனுக்கும் என்ன பகிர்தல் சாத்தியம். என்ன புரிதல் சாத்தியம். நாம் இருவருமே தோல்வியை ஒப்பு கொள்வோம் பாலகுமாரன்.

நம்மிடையே அன்பு மட்டுமே சாத்தியம். Not a penny more Not a penny less. I will be waiting for you Balakumaran.

**- வி.காயத்ரி,**
**சென்னை.**

# ஆயிரம் கண்ணி



"ஆயிரத்து பத்து மார்க்கா. அரைப் பரிட்சையிலயா. ரொம்ப சந்தோஷம். இப்படியே அரசாங்கப் பரிட்சையிலயும் நல்லா எழுதி, நல்ல மார்க் வாங்கி, உன் பேர்,

போட்டோ, தினத்தந்தியில
வரும்படியா செய்யணும்."
மோகனசுந்தரம் சட்டையை
மாட்டிக்கொண்டே மகளோடு
பேசினார்.



பாலகுமாரன்

மகள் ஜீவா நாலடித் தொலைவில் கையை கட்டிக் கொண்டு நின்றிருந்தாள். அவளுக்குப் பின்னே சமையல் அறை விளிம்பில் மனைவி நின்று முகமெல்லாம் பூரிப்போடு அவரைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

மோகனசுந்தரம், மகள் பார்க்க மனைவியோடு நேரடியாய் பேசுவதில்லை. அப்படிப் பேசுகின்ற மரபு அவர் வீட்டில் எவருக்கும் இல்லை. ஆனால், என்ன சொல்ல வேண்டுமோ அதை மிகத்தெளிவாக மனைவியிடம் சொல்லுகின்ற ஒரு கெட்டிக்காரத்தனம் அவரிடம் இருந்தது. மனைவிக்கும் புருஷன் ஏதாவது சொல்வார் நாம் புரிந்து கொள்ள வேண்டும் என்கிற பரபரப்பு இருந்தது.

"உனக்கு என்ன வேணும் சொல்லு. நல்ல மார்க் வாங்கியிருக்க. நான் ஏதாவது வாங்கித் தர வேணாமா. மேஜை விளக்கு இல்லைன்னு சொன்னியே. வாங்கித் தரட்டுமா."

"மேஜை விளக்கு வேண்டாம். மாமாவே ஒயர் இழுத்து தரையில் தொங்கற மாதிரி ஒரு ரூம் விளக்கு போட்டுக் கொடுத்தார். வேணும்னா தரையில தொங்க விட்டுக்கலாம். வேணாம்னா கொக்கியில மாட்டிடலாம்."

"ஆங்.. பார்த்தேன்.. பார்த்தேன். நான்கூட ராத்திரி கோயில் கணக்கெல்லாம் அங்கதான் உட்கார்ந்து எழுதினேன். எல்லாம் பளிச்சினு தெரியுது இல்ல. என்ன வேணும் சொல்லு."

அவர் சட்டென்று மகளைப் பார்த்தார்.

அவர் பேச்சில் ஒரு அவசரம் இருந்தது. நிறைய வேலைகள் இருந்தன. என்னென்ன வேலை, எது முதலில் என்கிற ஒரு எண்ணம் முளைவிடத் துவங்கியிருந்தது. வெளியே போகும்போது இதை வரிசைப் படுத்திக் கொள்ள வேண்டும் என்ற பரபரப்பு இருந்தது.

"சொல்லு.. என்ன வேணும் சொல்லு."

மறுபடியும் மகளைப் பார்த்துக் கேட்டார்.

"எனக்கு ஒண்ணும் வேணாம். அம்மாவுக்கு ஒரு புடவை வாங்கிக் கொடுங்க. நல்ல புடவையே இல்லைன்னு சொன்னாங்க அம்மா."

"தே.. சும்மாயிருடி."

பின்னாலிருந்து மோகனசுந்தரத்தின் மனைவி முகம் மாறிப்போய் அவசரமாக மகளை கண்டித்தாள்.

மோகனசுந்தரத்திற்கு தன்னுடைய வேலை அத்தனையும் சட்டென்று மறந்து போயிற்று. பட்டனைப் போட்டபடியே மனைவியைப் பார்த்தார்.

"புடவை இல்லையா" என்று கடைசி பட்டனை மாட்டியபடி கேட்டார்.

"எல்லாம் இருக்கு. இவ என்னமோ உளர்றா."

"இல்லைப்பா. அம்மாவோட பட்டுப்புடவை எல்லாம் கிழிஞ்சுடுச்சி. நல்ல புடவையே அவங்ககிட்ட இல்ல. நீங்க எனக்கு ஒண்ணும் வாங்கித் தரவேணாம்ப்பா. அம்மாவுக்கு ஒரு நல்ல பட்டுப்புடவை வாங்கித்தாங்க."

"நல்ல பட்டுப்புடவைன்னா எவ்வளவுமா இருக்கும்."

"நாலாயிரம் ரூபா இருக்கும்ப்பா."

"நாலாயிரம் ரூபாக்கு தடுக்குனு நான் எங்கடா போவேன். நானூறு ரூபா தரேன். அம்மாவுக்கு ஒரு புடவை வாங்கிக் கொடு. நீயே வாங்கிக்கொடு."

"வேணாம்ப்பா. அந்த மாதிரி புடவைங்க நிறைய இருக்கு. வெளிய வாசலுக்கு போற மாதிரி பட்டுப்புடவை இல்லை. எதிர்வீட்டு செண்பகா கல்யாணத்துக்குக்கூட அம்மா சாதாரண புடவைலதான் வந்தாங்க. கொஞ்ச நேரம் இருந்துட்டு திரும்பிட்டாங்க."

"ஏன்."

"எல்லாரும் பட்டுப்புடவையில வரும்போது அம்மா சாதாரண புடவையில வந்தா, அம்மாவுக்கே கஷ்டமா இருக்கும். அம்மா திரும்பிட்டாங்கன்னு நானும் திரும்பிட்டேன்."

"வாங்கித்தரணும்னு எனக்கும்தாண்டா ஆசை. ஆத்தா ஏதாவது வழி விடுவோ. நான் செய்யறேன். அரைப்பரிட்சையில நல்ல மார்க் வாங்கிட்டு அரசாங்கப் பரிட்சையில கோட்டை விட்டுடாத. உட்கார்ந்து படி."

மோகனசுந்தரம் வெளியே போகும்போது அவர் மனைவி ஒரு டம்பளர் தண்ணீரை கொண்டு வந்து நீட்டினாள்.

மோகனசுந்தரம் வீட்டைவிட்டு வெளியே போகும்போதும், வீட்டிற்கு உள்ளே வரும்போதும் தண்ணீர் கொடுக்க வேண்டும் என்பது அவளுடைய விருப்பம். மோகன சுந்தரத்திற்கும் அதில் ஆசை இருந்தது. மனைவி கையால் தண்ணீர் குடித்துவிட்டுப் போனால் அந்த நாள் இனிமையாகவும், வெற்றிகரமாகவும் இருக்கிறது என்பதாய் அவருக்குள் ஒரு நினைப்பு உண்டு.

"பாக்கியம், புடவை வாங்கித் தரேன்னு சொல்லிட்டேன். வாங்கித் தந்துடுவேன். ஆனால், எனக்கு எட்டாயிரம் ரூபாதான் சம்பளம். கைல ஆறாயிரம் ரூபாதான் வருது. ரெண்டாயிரம் ரூபா வாடகைப் போய் மிச்சம் நாலாயிரத்துல குடித்தனம் பண்ணணும். இதுல பெருசா எதுவும் நான் வாங்கிட முடியாது. தில்லுமுல்லு பண்ணி சம்பாதிக்கவும் எனக்குத் தெரியாது. அதனால ரொம்ப ஆசைப்படாத இருக்கறது உனக்கும் நல்லது. எனக்கும் நல்லது."

"நான் கேட்டேனா. அவ அதிகப்பிரசங்கித்தனமா பேசறா.

அது அமிர்த சொம்பு என்றழைக்கப்பட்டிருந்தது. அதேபோல மேல் தூக்கிய இடது கையில் ஒரு அக்கமாலை இருந்தது. ஜபம் செய்பவர்கள் உருட்டுகின்ற மாலை அது. வலதுகை அபயஹஸ்தம் கொடுக்க, இடதுகை அவளுடைய காலை சுட்டிக்காட்டியது. அமிர்த குடமும், அக்கமாலையும் எங்கேனும் இருக்குமா. உடம்பினுடைய பலமும், மனசினுடைய வலிமையும் தர நான் சித்தமாக இருக்கிறேன் என்று ஆயிரம்கண்ணி சொல்வதாக அங்குள்ளோர் சொல்வார்கள்.

நல்ல உயரம். அற்புதமான ஆகிருதி. இடுப்பில் புடவை. கருங்கல்லிலேயே விசிறி மடிப்பாய் செதுக்கப்பட்டு தனியாகத் தொங்கும். கணுக்காலிடையே பீடத்திற்கும், காலுக்கும் இடையே ஒரு சிறுஇடை வெளி இருந்ததால் நல்ல வெள்ளித் தண்டையை அந்தக் காலில்போட்டு புடவையைச் சற்று நேராகச் சார்த்தியிருந்தார்கள். அடர்த்தியாய், இறுக்கமாய் கட்டப்பட்ட ஒரேயொரு மல்லிமாலை. பின்பக்கம் நீண்ட சிகை, தலைக்குமேல் தீப்பிழம்பாய் கிரீடம். மிக மெல்லியதாய் யார் கண்ணுக்கும் தெரியாததாக இரண்டு கோரைப்பற்கள். இதுவே இவளை காவல் தெய்வம் என்றும், உக்கிரமானவள் என்றும் உலகிற்கு சொல்லிக் கொண்டிருக்கின்றன. ஆனாலும், முகத்தில் ஒரு சிரிப்பு, கண்களில் ஒரு கருணை, ராஜகம்பீரம்.. மொத்த உருவத்திலும் வெளிப்படும். முண்டியடித்து கிட்டே வந்து பார்ப்பவர்களே அதிகம். உற்று உற்றுப் பார்த்தவர்கள் பலபேர். 'சொல், ஏதாவது சொல்' என்று கெஞ்சுவார்கள். அவளோடு பேசத் துவங்கி விடுவார்கள். புடவை சார்த்திய அந்தப் பெண்மணி அப்படித்தான் புலம்ப ஆரம்பித்தாள்.

ரொம்ப ரொம்ப தேங்க்ஸ் என்று கொஞ்சலாய் பேசத் துவங்கினாள். இன்னும் அருகே போனாள்.

"நான் எப்படி ஒரு மருமகள் வேணும்னு கேட்டேனோ அதே மாதிரியே அடக்கமா, அழகா கொண்டு வந்து கொடுத்திருக்க, அந்தக் குழந்தைய இன்னும் கெட்டிக்காரியா மாத்த வேண்டியது உன் பொறுப்பு. புள்ள ரொம்ப சந்தோஷமா இருக்கேன்மான்னு சொல்றான். காது குளிரக் கேட்டேன். இது உன்னுடைய அருள். உன் கருணை. தொடர்ந்து எங்கள் எல்லாரையும் காப்பாத்திண்டு வாடி தாயே."

அவள் கைகூப்பி வேண்டினாள்.

"அம்மா.. வேண்டிக்கோ" என்று மருமகளை மிகுந்த கரிசனத்தோடு சொன்னாள். மருமகளை மெல்ல இழுத்து தன் அருகே வைத்துக் கொண்டாள். "உத்துப்பார். அவ சிரிக்கறா பார். உதடு ஓரத்துல ஒரு சிரிப்பு நிக்கும் பார். உன்னையே பார்க்கறா மாதிரி இருக்கும் பார்."

பலமுறை அவளை பார்த்து அனுபவித்தது எல்லோருக்கும் தெரியவேண்டும் என்பதற்காக மருமகளிடம் உரக்கச் சொன்னாள்.

"இருபது வருஷமா இந்தக் கோயிலுக்கு வரேன். எனக்கு கண்கண்ட தெய்வம் இவதான். எது வேணும்னாலும் இவகிட்டதான் வந்து நிப்பேன். நான் மனுஷாளை நம்பறதே இல்லை. இவளைத்தான் நம்பறேன். நீயும் இவளை கெட்டியாப் பிடிச்சுக்கோ."

அவள் சொன்னது உண்மை எனினும் சொன்ன விதம் நாடக பாணியில் அமைந்திருந்தது. மருமகளுக்கு சொல்ல வேண்டும் என்பதைவிட தான் இந்த கோவிலின் மிகப்பெரிய பக்தை என்பதை வெளிச்சொல்லிக்கொள்ள காட்டுபவள் போல அவள் பேசினாள். அவளைச் சுற்றியிருந்த பல்வேறு பெண்கள் அவ்வளை அதிசயத்துடனும், மிகுந்த அக்கறையோடும் பார்த்தார்கள். காதுகளில் வைரம் மின்ன, மூக்கில் பேசரி மின்ன, கழுத்தில் பிடிப்பிடியான சங்கிலியோடு, பணக்காரக் களையோடு இருக்கின்ற பெண்மணி இப்படி இருப்பதற்குக் காரணமே இந்தக் கோயில் தேவிதானோ என்கிற எண்ணம் அவர்களுக்குள் வந்தது. சற்றுக் கிழிந்த புடவையும், வெறும் தாலிக்கொடியும் அணிந்து சென்ற பெண்கள் இன்னும் ஆவலோடும், மெல்லிய பொறாமையோடும் அந்தப் பெண்மணியைப் பார்த்தார்கள். அந்தப் பெண்மணி அந்தப் பார்வையிலிருந்த பொறாமையையும் ஆவலையும் நன்கு அனுபவித்தாள். மறுபடியும் மிகப்பெரிய தபஸ்வியைப் போல கண்களை மூடிக்கொண்டாள். கை கூப்பிக் கொண்டாள்.

அம்பிகையே எல்லாரையும் நன்னா வைடியம்மா என்று தனக்கும், அந்த தெய்வத்திற்கும் மிகுந்த நெருக்கம் இருக்கும் என்பது போல திரும்பவும் நடித்தாள்.

அவளுக்குப் பின்னால் மகன் நின்றிருந்தான். அவனுக்கு தாயின் நடிப்பு பிடிக்கவில்லை. எனினும், அம்மா என்பவள் இப்படித்தான் இருப்பாள் என்பதாய் அவன் நினைத்துக் கொண்டிருந்தான். அம்மா தனக்காக கஷ்டப்பட்டிருக்கிறாள். எனவே, இப்படி நடித்தால் இது ஒன்றும் பெரிய தப்பில்லை என்பதுபோல் அவுளை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான்.

அந்தப் பெண்மணியின் புருஷனைப் போன்றவர்.. நரைத்த தலையும், மாநிறமும், கொஞ்சம் பருமனான உடல்வாகும் கொண்டவர். அவளைப் பார்த்து மெல்லியதாய்ச் சிரித்தார்.

"நீ கொஞ்சம் நகர்ந்துக்கறியா. நான் நமஸ்காரம் பண்ணிட்டு வந்துடறேன்." என்று மனைவியைச் சொல்ல

அந்தப் பெண்மணி வினாடி நேரம் லேசான கடுப்போடு அவரைப் பார்த்தாள். ஆனால், சுற்றி பல பெண்கள் இருப்பதால் 'ஆஹா.. பாருங்கோளேன்' என்று கணவனுக்கு பயந்த பெண்மணியைப்போல தன் உடம்பை நெளித்து வளைந்து அவரை வலம் வந்து அவருக்குப் பின்னால் கைகூப்பி நின்று கொண்டாள். தள்ளி நின்று பார்க்கிறவர்கள் இவள் புருஷனுக்கு எவ்வளவு மரியாதை செலுத்துகிறாள் என்று தூண்டும் வண்ணம்தான் அந்தச் செய்கை இருந்தது.

அவர் கைகூப்பினார். கண்மூடினார். திரும்ப கண் விழித்துப் பார்த்தார்.

சுவரில் இரண்டு கரப்பான் பூச்சிகள் ஒன்றையொன்று துரத்திக் கொண்டிருந்தன.

"ஏம்ப்பா.. கருவறையை சுத்தமா வச்சுக்கக்கூடாதா. கரப்பான் பூச்சியெல்லாம் இருக்கே."

அவர் கோயில் அர்ச்சகரிடம் சுட்டிக் காட்டினார்.

"இதோ பாருங்கோ, வந்து சாமியைப் பாருங்கோ, கரப்பான் பூச்சியெல்லாம் பார்த்துண்டு." பின்னால் நின்ற மனைவி சொல்ல இரண்டுபேரும் மெல்லியதாய்ச் சிரித்தார்கள். அவர்களுடைய பையனும் சிரித்தான்.

அப்பாவை மட்டம்தட்ட அம்மா குத்திக் கிளறும்போது சிரிப்பது, அம்மாவை மட்டம்தட்ட அப்பா எகிறிப் பேசும்போது சிரிப்பது என்று அவன் வழக்கம் வைத்துக் கொண்டிருந்தான்.

"நம்ம இந்து மதத்துல சுத்தம்தான் பிரதானம். மனசு சுத்தத்துக்கு முன்னாடி உடம்பு சுத்தம் முக்கியம். உடம்பு சுத்தத்துக்கு முன்னாடி சூழ்நிலை சுத்தம் அவசியம். பன்னெண்டு மணிநேரம் நிக்கற இடத்தை இப்படியா வச்சுப்பா. தேய்ச்சு அலம்பி ப்ளீச்சிங் பவுடர் போடக்கூடாதா."

அவர் அர்ச்சகரைப் பார்த்துக் கேட்க, "அது என் வேலை இல்லை" என்று அந்தப் பையன் அடிக்குரலில் சொன்னான்.

"ஒரு பெட்டிஷன் எழுதி போட்டுடறேன். அப்போதான் சரியா வரும்."

அவர், மனைவியின் மீது இருந்த கோபத்தை கரப்பான் பூச்சியின் மீதும், அந்த அர்ச்சகர் மீதும் காட்டிவிட்டு சரட்டென்று வெளியேறினார்.

"அவர் எப்பவுமே அப்படித்தான். கொஞ்சம் முன்கோபி. கற்பூர ஆரத்தி காண்பிடா அம்பி" என்று அவள் சொல்ல, கற்பூர ஆரத்தி காட்டப்பட்டது.

அதுவரை எதும் பேசாதிருந்த அந்த மருமகள் மெல்ல தெய்வ உருவத்தை உற்றுப்பார்த்தாள்.

கற்பூர ஒளியில் அந்தத் தழல் ஆடும்போது ஏற்பட்ட ஒளிமாற்றத்தில் அந்தச் சிலை பெரிதாகி இருப்பதுபோல

தெரிந்தது. உதடு விரித்து இழுத்து, கன்னங்கள் குழிவிழுந்து, கண்கள் சுருங்கி ஒரு சிரிப்பு தெரிந்தது. சட்டென்று உள்ளே ஒரு பயமும் பயத்தின்பால் ஏறபட்ட நடுக்கமும், நடுக்கத்திலிருந்து ஒரு அழுகையும் அவளுக்குக் கிளம்பின. மறுபடியும் கற்பூரஆரத்தி காட்டப்பட்டது.

'எல்லாம் நன்னாதான் இருக்கு. ஆனா, என்னை வீட்டுக்கு அனுப்ப மாட்டேங்கறாளே. எங்க அப்பாவை பார்க்க விடமாட்டேங்கறாளே. எங்கம்மாவை பார்க்க விடமாட்டேங்கறாளே. என்னுடைய அண்ணாவை, என்னுடைய மன்னியை பார்க்க விடமாட்டேங்கறாளே. எனக்கு அங்க போகணும்.. எனக்கு அங்க போகணும்.. அவாளோட கொஞ்சணும்.. அவாளோட பேசணும். அவா இல்லாத என்னால இருக்க முடியாது. எனக்கு அவா வேணும்.. அவா வேணும். எங்காத்துக்காரர் நல்லவர்தான். எங்க மாமனார் தங்கம். இந்த மாமி மட்டும் ரெண்டுங்கெட்டானா இருந்துண்டு எங்க வீட்டுக்கு அனுப்பமாட்டேன்னு சொல்லிண்டிருக்கா. எப்படியாவது இவங்க மனசை மாத்தி என் வீட்டுக்கு அனுப்பு. எங்கப்பாவைப் பார்த்து பேசணும். எங்கம்மாவோட கைகோர்த்துண்டு உட்கார்ந்துண்டிருக்கணும். எங்க அண்ணாவோட சண்டை போட்டுக்கணும். எங்கம்மாவுக்கு உதவியா நான் சமையல் பண்ணணும். அவாளப் பார்த்து நாலு மாசம் ஆயிடுத்து. ப்ளீஸ்.. ப்ளீஸ்.. நான் எங்காத்துக்கு போகணும்.'

யாருக்கும் தெரியாமல் உதடுகூட அசைக்காமல் அவள் அழுகையின் மூலம் தன் கோரிக்கையை அவள் காலில் வைத்தாள்.

பூ ஒன்று கிரீடத்தின் உச்சியிலிருந்து உருண்டு தரையில் விழுந்தது.

எல்லோரும் வேறு எங்கோ கவனமாக இருக்க, அவள் மட்டும் பூ விழுந்ததைப் பார்த்தாள். உள்ளே சட்டென்று ஒரு நிம்மதியும் திருப்தியும் படர்ந்தது.

'எங்க மாமியார் எனக்கு ஒரு நல்ல விஷயம் பண்ணியிருக்கா. உன்னை காட்டிக் கொடுத்திருக்கா. நான் உன்னை கெட்டியா பிடிச்சுப்பேன். உன் கூட பேசுவேன். தேங்க்யூ' என்று தன்னுடைய பிரார்த்தனை அப்போதே பலித்துவிட்டதுபோல அவள் சந்தோஷமானாள். முகம் துடைத்துக் கொண்டாள்.

கருவறையை விட்டு வெளியே வரும்போது அவள் இன்னும் அழகாக இருப்பதாக அவள் கணவனுக்குத் தோன்றியது.

அன்று முழுவதும் அந்த மிளகாய்ப்பழ சிவப்புப் புடவை

ஆயிரம்கண்ணி மீது சார்த்தப்பட்டிருந்தது.

அன்று இரவு அந்தப்புடவையை நீக்கிவிட்டு, வேறு புடவை சார்த்தி இந்தப் புடவையை இழுத்து மடித்து ஆபீஸ் அறைக்குள் அர்ச்சகர் ராமசுப்பு கொண்டு வந்து வைத்தான்.

ராமசுப்புக்கு கள்ளிடைக்குறிச்சி சொந்த ஊர். அவன் சிருங்கேரி மடத்தில் அர்ச்சகருக்கு உண்டான படிப்பை படித்து முடித்து அரசாங்கத்திற்கு விண்ணப்பித்து, அரசாங்கம் அவனை இங்கே அனுப்பியிருந்தது.

ராமசுப்புவைத்தவிர அந்தக்கோயிலில் இரண்டு அர்ச்சகர்கள் உண்டு. ஐம்பத்தியிரண்டு வயதான விஸ்வநாதனும், இருபத்தைந்து வயதான காளிதாசனும் அங்கே அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டிருந்தார்கள். விஸ்வநாதனுடைய மூத்த மகன்தான் காளிதாசன். அப்பாவும், பிள்ளையுமாக இந்தக் கோயில் பூஜைகளை நடத்திக் கொண்டிருக்க, மூன்றாவதாக வந்த ராமசுப்புவை அவர்கள் அதிகம் மதிக்கவில்லை. மாறாய் எடுபிடி வேலைகளுக்கு பயன்படுத்திக் கொண்டார்கள். 'அவனுக்கு ஒண்ணும் தெரியலைப்பா' என்று எல்லோரிடமும் பரப்பினார்கள். பத்து பேர் இருக்கும்போது 'தப்பா சொல்றியே சரியாச்சொல்லு' என்று சிறிய தப்பையும் பெரிதாக்கிக் காட்டினார்கள்.

வேலையை விட்டுவிடலாமா.. வேறு ஏதேனும் கோவிலுக்கு மாற்றல் கேட்கலாமா.. என்று ராமசுப்பு தயங்கிய நேரத்தில், இதுபற்றி அந்தக் கோவில் நிர்வாகஅதிகாரி மோகனசுந்தரத்துடன் பேச, அவர் வாய்விட்டுச் சிரித்தார்.

"இதுக்கெல்லாம் பயந்தா அப்புறம் வாழ்க்கை வாழ முடியுமா. நீ எங்க போனாலும் அண்ணன் தம்பியோ, அப்பன் புள்ளையோ, சித்தப்பன் பெரியப்பனோ இருப்பானுக."

"என்னது."

"ஒருத்தனுக்கு ஒருத்தன் உள்கையா, பின்னிப் பிணைஞ்சு இருப்பாங்க. நீ போய் உன் வேலையை கவனி. எவ்வளவு திருத்தமா உன் வேலையை செய்ய முடியுமோ அதைச் செய். தொட்டு பூஜை பண்ற உனக்கே கடவுள் மேல நம்பிக்கை இல்லைன்னா வேற யாருக்கு நம்பிக்கை வரும். உன் பாரத்தை, உன் பிரச்சினையை தினம் பூஜை பண்றியே அவகிட்ட கொடுத்துடு. அவ பார்த்துப்பா. இதைப்போய் ஒரு குறையா வந்து எங்கிட்ட சொல்றியே நியாயமா. உன் பலம் உனக்கு ஏன் தெரியாதப் போச்சு. கோயில் வேணாம்னு ஒரு ஐயர் சொல்லலாமா. சொன்னா நீ ஒரு ஐயர்தானா.. உன்னை வளர்த்துக்கோ தம்பி. அதுக்கு இது ரொம்ப சரியான இடம். அவரு குறை கண்டுபிடிக்கும்படியா வைக்காத. முடிஞ்சா திருத்திக்கோ. அது நல்லதுதானே." என்று சொல்ல

அவனுக்குப் புரிந்தது.

அவன், அவர் கைகளைத் தொட்டு கண்ணில் ஒற்றிக் கொண்டான்.

"எனக்கு புரியுதுய்யா. என்னை நான் பலப்படுத்திக்கணும். அதுக்கு இதுதான் சரியான இடம்."

"இங்க தகதகன்னு இருந்தேன்னு வச்சுக்கோ அரசாங்கத்துலயே உன்னை இன்னும் நல்ல வேலைக்கு மாத்திடுவாங்க."

"நான் செய்யறேன்யா."

"உனக்கு ஏதாவது சந்தேகம் இருந்தது வச்சுக்க, இந்தப் பெரியவரை கேட்க வேணாம். விஸ்வநாதன் முரட்டுத்தனமாத்தான் பேசுவாரு. அவர் புள்ள இன்னும் அலட்டலா இருப்பான். தங்கச்செயினும், காதுல கடுக்கணும் போட்டுகிட்டா பெரிய மன்மதன்னு அவனுக்கு நினைப்பு. இதே ஏரியாவில ஒரு சிவன் கோவில் இருக்கு. அங்க ஒரு ஐயர் இருக்காரு. ரொம்ப தன்மையான ஆளு. அலங்காரம் பண்றதுல அவ்வளவு கெட்டிக்காரரு. அவருகிட்ட அலங்காரம் பண்ற வித்தைய கத்துகிட்டேன்னு வச்சுக்க, உன்னை கையில பிடிக்க முடியாது. விஸ்வநாத ஐயருக்கு அலங்காரம் பண்ண வராது. அவரு புள்ளைக்கு அக்கறை இல்லை. நீ நல்லபடியா அதைச்செய். இங்கயே கொடிகட்டிப் பறக்கலாம்."

மறுபடியும் இன்னொரு விஷயம் சொல்லிக் கொடுத்தார். ராமசுப்ரமணியன் சரி என்று தலையசைத்தான்.

அவர் சொன்ன சிவாச்சாரியாரிடம் போய் கைகூப்பி தான் கற்றுக் கொள்ள வேண்டியது அதிகம் இருக்கிறது என்று சொல்லி காலில் விழுந்தான்.

"யாரு, மோகனசுந்தரம் அனுப்பினானா. என்னை தேடிண்டு யாராவது வரான்னா அது மோகனசுந்தரம் அனுப்பினவனாத்தான் இருக்கும். உனக்கு என்ன கத்துக்கணும்."

"அதுகூட எனக்குத் தெரியலை. எது கத்துக் கொடுத்தாலும் நான் கத்துக்கறேன்."

"எனக்கு முடியலைடா. கோவில் கதவு திறந்து ஒரு சுத்து வந்தவுடனேயே எனக்கு இளைப்பாயிடறது. உனக்கு டூட்டியில்லாத நேரத்துல இங்க வந்துடறியா. கூடமாட ஒத்தாசையா இருக்கியா."

"நிச்சயமா செய்யறேன்."

ராமசுப்பு தலையசைத்தான்.

அன்று அவனுக்கு விடுப்பு. ஒருநாள் முழுவதும் அவருக்கருகே அமர்ந்து பல கோவில்கள்பற்றி பேசிக் கொண்டிருந்தார்கள்.

"நேரா உட்கார். கோவில் பூஜை பண்ற அந்தணன், குனிஞ்சு, சுருண்டு சுவத்துல சாய்ஞ்சு உட்காரப்படாது. நீ உட்கார்ந்துண்டிருக்கியேன்னு என்னைப் பார்த்து கேட்காத, எனக்கு வயசு ஆயிடுத்து. அம்பத்தெட்டு வயசு. இன்னும் ரெண்டு வருஷத்துல போடாப்போ அப்படின்னு அனுப்பிடுவா. அப்புறம் தனியார் கோவில்லதான் பூஜை பண்ணணும். அதுவும் முடியறதா தெரியலை. ஆஸ்துமா தொந்தரவால வேகமா வேலை செய்ய முடியலை. நாள் முழுக்க கற்பூரம், நல்லெண்ணெய் புகைலேர்ந்து மூச்சுத்திணறல் ஏற்பட்டுப்போச்சு. இதுக்கு யாரையும் குறை சொல்ல முடியாது.

இடுப்பு, முதுகு, கழுத்து, தலை நேரா நிக்கணும். நேரா இருந்தா நல்ல எண்ணங்கள் உதயமாகும். குனிஞ்சு உட்கார்ந்தா, பல்லு குத்திண்டு உட்கார்ந்தா, மூக்கை நோண்டிண்டு உட்கார்ந்தா அந்த எண்ணங்கள் சரியாக இருக்காது. முதல்ல சரியான எண்ணங்கள் உள்ளவனா உன்னை மாத்திக்கோ. அது நல்லது. உட்காரக் கத்துக்கோ. உடம்பு மெல்ல சுருளும். உதறி மறுபடியும் சரியா உட்காரணும். உட்காரக் கத்துக்கோ அதான் முக்கியம்."

உட்காரத் தெரிந்ததிலிருந்து புத்தியில் ஒரு தெளிவு ஏற்பட்டது. அந்தத் தெளிவு பொறுமையைக் கொடுத்தது.

விஸ்வநாதன் என்ன கடித்துக் குதறினாலும், அவர் பிள்ளை காளிதாஸன் என்ன அலட்சியம் செய்தாலும், வேறு யார் என்ன கூச்சல் போட்டாலும் அவன் மௌனமாகவும், புன்னகையோடும் இருக்கக் கற்றுக்கொண்டான்.

அந்த சிவன் கோவிலில் சுற்றிசுற்றி வந்து நிறைய வேலைகள் செய்தான். அங்குள்ள பணியாளர்கள் தங்கள் வேலையை புறக்கணித்து வேறு வேலைகளுக்குப் போவதால் கோவில் அழுக்கடைந்திருந்தது. அந்த சிவாச்சாரியார் கேட்டுக்கொண்டதற்கிணங்கி அவன் மிக அக்கறையோடு அந்தக் கோவிலில் ஒட்டடை அடித்தான். கருவறைகளை வெந்நீர்விட்டு சுத்தம் செய்தான். ஆசிட் ஊற்றி அலம்பினான். சுவர் முழுவதும் சந்தனமும், மஞ்சளும் தேய்த்து தடவினான்.

பௌர்ணமி நிலவுபோன்ற மஞ்சள் ஒளியில் அந்தச் சிவலிங்கம் மிக அழகாக காட்சியளித்தது.

வெள்ளி நாகப்படமும், வெள்ளி விபூதிப்பட்டையும் மாட்டி ஒரு வில்வமாலை சார்த்த அழகு அள்ளிக்கொண்டு போயிற்று. எழுந்து சிவலிங்கத்தை வணங்கினான்.

சிவனே.. என் சிவனே என்று அவரைத்தடவி உள்ளங்கைகளை தலையில் வைத்துக் கொண்டான்.

அந்த அம்பாள் சிறிய உருவம். வண்டார்குழலி. தாவணி போன்ற துணியை அழகாக மடித்துக் கொசுவி மடிசார்போல்

கட்டி, இடுப்பில் சரிகை ஒட்டியாணம் கட்டி தலையில் கீரிடம் சார்த்தி, புடவையை இறுக்கி பின்பக்கம் கொசுவிவிட அம்பாளும் அழகாகத் தெரிந்தாள். எப்படி இறுக்குவது.. எப்படி கொசுவுவது.. எப்படி புடவையை மடித்து பின்பக்கம் இழுப்பது என்ற வித்தைகளை சிவாச்சாரியார் அவனுக்கு, குழந்தைக்குச் சொல்வதுபோல் சொல்லிக் கொடுத்தார்.

"உங்க அம்பாளுக்கு புடவை கட்டறபோது இப்படிக்கட்டாத. இந்த மாதிரி மாத்திக்கோ."

அவர் சில யோசனைகளைச் சொல்ல, அவன் அலங்காரம் பற்றிய விஷயங்களை நன்கு புரிந்து கொண்டான்.

"ஏம்பா.. இங்க வேலை செய்துட்டு அங்கேயும் போய் வேலை செய்யறியா. ரெட்டை சம்பளமா. அங்கேயும் சோத்துப்பட்டைக்கு ஓடிட்டியாக்கும். இங்கதான் ஒண்ணுக்கு ரெண்டா தராளே" என்று விஸ்வநாதன் கத்த, அவன் மௌனமாக அவர் பேச்சை கேட்டுக் கொண்டிருந்தான்.

"அங்க வேலை செய்யறதா இருந்தா இங்க வராத. ஆமாம், சொல்லிட்டேன்" என்கிறபோது,

"இதை நீங்க சொல்ல முடியாது ஸார்."

"சொல்ல வைக்கறேன். யார் சொல்லணுமோ சொல்ல வைக்கறேன்." என்று அவர் மறுபடியும் உரக்கக் கத்தினார். அதை மோகனசுந்தரத்திடமும் சொன்னார்.

"அவரு அவர் டூட்டியை ஒழுங்கா பார்க்கறாரு. அந்த டூட்டி நேரத்துக்கு வந்துடறாரு. டூட்டி நேரத்துக்கு வராதது நீங்க ஒருத்தர்தான். அதனால நான் அவரைப்பத்தி ஒண்ணும் குத்தம் சொல்லமாட்டேன். இதை முடிச்சுட்டு வேற எங்க போனா எனக்கென்ன. இங்க வேலை செய்யற ஐயரு இன்னொரு கோயிலுக்கு போகக்கூடாதுன்னு என்ன சட்டம் இருக்கு. கவர்மெண்ட்ல இதெல்லாம் ஒண்ணும் எடுக்க மாட்டாங்க. சும்மா கத்தாதீங்க."

மோகனசுந்தரம் திருப்பி அனுப்பினார்.

"ரொம்ப தேங்க்ஸ்.. எனக்கு புத்தி வந்துடுத்து" என்று சொல்லி விஸ்வநாதன் அலுவலகத்தை விட்டு வெளியேறினார்.

'மகனே.. உனக்கு வைக்கறேண்டா.. வைக்கற நேரத்துல வைக்கறேன்' என்று மனசுக்குள் கறுவிக் கொண்டார்.

"ஓரமா நில்லுங்கோ.. சன்னதியை மறைக்காதீங்கோ." உரக்கக் கத்தினார்.

அங்குள்ள பெண்மணிகள் மிரண்டுபோய் ஓரமாக நின்றார்கள்.

"என்னப்பா.. அந்த பாப்பான் பேய் மாதிரி கத்தறான்."

ஒரு பெண்மணி மெல்ல முணுமுணுத்தாள். அடுத்தவள்

அதை ஆமோதித்தாள்.

ஜனங்களுடைய வெறுப்பை சம்பாதித்த எவரும் சௌக்கியமாக வாழ்ந்ததேயில்லை என்பது விஸ்வநாதனுக்கு அப்பொழுது புரியவில்லை.




ஆனால், இந்த ஜனங்கள் பொல்லாதவர்கள். அவர்கள் எது பற்றியும், எந்த நேரமும் எல்லோரிடமும் குறை சொல்வதில் ஆர்வமுள்ளவர்கள். குறை சொல்லாத பொதுஜனம் உலகின் எந்த பாகத்திலும் இல்லை. அந்த ஊரில் படித்த பெண்கள் நிறைய பேர் இருந்தார்கள். அவர்கள் திருமணம் செய்து கொண்டு வேலைக்குப் போகாமல் வீட்டோடு இருந்தபடி குடும்பத்தை கவனிக்கும் ஆவல் உள்ளவர்களாக, அதில் விருப்பமுள்ளவர்களாக இருந்தார்கள். ஒன்று அல்லது இரண்டு குழந்தை அளவோடு பெற்று பிறகு கருத்தடை ஆபரேஷன் செய்து கொண்டு மாமியார், நாத்தனார் தொந்தரவு இல்லாமல் அடுக்குமாடி வீடுகளில் மூவாயிரம் அல்லது நாலாயிரம் கொடுத்து தனிக்குடித்தனம் செய்பவர்களாக திகழ்ந்தார்கள்.

பெண்களுக்கு காலை நேரம் பரபரப்பான நேரம். எட்டரை மணிக்கு குழந்தைகளை அனுப்புவதும், ஒன்பது மணிக்கு புருஷனை வேலைக்கு அனுப்புவதுமே வாழ்வின் தினசரி முக்கிய வேலைகளாக இருந்தன.

வீடு காலியான பிறகு நிம்மதியாய், நிதானமாய் அந்த வீட்டின் மற்ற வேலைகளை ஒன்றன்பின் ஒன்றாகச் செய்யத் துவங்குவார்கள். உடம்பிலிருந்து குழம்புவாசனையும், ரசவாசனையும் நீங்குவதற்காக நன்கு குளிப்பார்கள்.

சலவைத்துணி உடுத்தி, குத்துவிளக்கு ஏற்றி ஐந்து நிமிடம் உட்கார்ந்து ஏதேனும் ஸ்லோகங்களைப் படிப்பார்கள். பாடல்களைப் பாடுவார்கள். முகத்தில் மெல்லியதாய் பவுடர் பூசிக்கொண்டு பாடிஸ்ப்ரே அடித்துக்கொண்டு நன்கு மலர்ந்த பெரிய தாமரைப்பூவைப் போல வெளியே வருவார்கள்.

அவர்கள் இளம்பெண்கள் அல்ல. அவர்களிடம் வாலிப மிரட்சிகள் ஏதுமில்லை. பருவக் கோளாறுகள் இல்லை.

வாழ்க்கையில் நல்லதும், கெட்டதும் அனுபவித்து அதன் வலி, வேதனைகளை தெள்ளத் தெளிவாக உணர்ந்தவர்கள்.

எப்போது அடங்கியிருக்க வேண்டும். எப்போது சீற வேண்டும் என்ற விவரமுள்ளவர்கள். நன்கு வளர்ந்த, விஷயம் புரிந்த குழந்தைகள் அவர்களுக்கு இருந்தன.

எனவே, கட்டுப்பாடாகவும், கம்பீரமாகவும், நடக்க வேண்டிய நிர்ப்பந்தமும் அவர்களுக்கு இருந்தது. அவர்களிடம் காசு இருந்தது. ஆனாலும், எதிர்காலம் கருதி வாரி எடுத்து செலவு செய்ய முடியாது. அவர்களுக்கு நல்ல மனோபலம் இருந்தது. இருப்பினும் எவரையும் எதிர்க்க இயலாது. வம்புச் சண்டைக்கு போக முடியாது. அவர்களுக்கு உடல் பலம் இருந்தது. ஆனாலும், எல்லாப் பொதுக்காரியங்களிலும் ஈடுபட்டு செய்வதற்கு அவர்களுக்கு விருப்பமில்லை. பொதுநல சேவை என்று அவர்கள் செய்வதெல்லாம் அருகிலுள்ள ஆயிரம் கண்ணி கோவிலில் சர்க்கரைப் பொங்கல் வைப்பதும், அந்தக் கோவிலில் ஒன்றாக உட்கார்ந்து குத்துவிளக்கு பாட்டுப்பாடுவதும்தான். அது, அவர்கள் வீட்டுக்கு மட்டும் நல்லது செய்வதற்குண்டான விஷயமல்ல. இந்த ஊரும் உலகமும் நல்லபடியாக இருக்க வேண்டுமென்ற பிரார்த்தனையும் அவர்களுக்குள் இருந்தது.

"மழை பெய்யலை ஆத்தா. இப்படியே போனா கிணத்துல தண்ணி இருக்காதுடி. நல்லபடியா மழை கொண்டாந்து குடுடி." என்று உரக்கவே ஒரு பெண் சொல்ல, மற்ற பெண்களும் அதை ஆமோதிப்பார்கள்.

"போனவாட்டி நல்லாதான் மழை பெய்ஞ்சுது. என்ன இருந்தாலும் இல்லை, பெய்யலை பெய்யலைன்றாங்க."

ஒரு பெண்மணி சொல்ல, "ஆமாம், மழை நல்லாதான் பெய்ஞ்சுது. தமிழ்நாட்ல இருக்கற எல்லா கிராமத்து ஆளுங்களும் மெட்ராஸுக்கு வந்துட்டா எல்லாருக்கும் தண்ணி வேணாமா. ஒரே இடத்துல ஜனங்க குவிஞ்சிட்டாக்கா தண்ணி கஷ்டம் வரத்தான் செய்யும். என்னமோ நம்ம அடுக்கு மாடியில அந்தத் தொந்தரவு வரலை."

"சொல்லாதீங்க, இப்போதானே மே மாசம்.. ஜூன், ஜூலை, ஆகஸ்ட், செப்டம்பர்னு நாலு மாசம் போகணும்."

"கார்ப்பரேஷன் தண்ணின்னு ஒரு நாள் விட்டு ஒரு நாள் கொடுத்துடறாங்க."

"என்னமோ இந்த மாசம் கொடுக்கறான். அடுத்த மாசம் கொடுப்பான்னு நினைக்கறீங்களா. எனக்கு நம்பிக்கையில்லை."

"ஒருமழை. ஜூன்ல ஒருமழை நல்லா பெய்ஞ்சா போறுங்க." இன்னொருத்தி பதில் சொன்னாள்.

"ஜூன் மாசம் மழை பெய்ஞ்சதா சரித்திரமே இல்லையே."

"இருக்கு." வேறொரு பெண்மணி உரக்கச் சொன்னாள்.

"படபடன்னு தூறல் போடும். பூமி குளிரும் அவ்ளோதான்."

"இந்தத்தடவை அதுகூட இருக்காதுன்னு நினைக்கிறேன். வெய்யில் பிய்ச்சு எடுத்துடப்போகுது."

"எப்படிச் சொல்றீங்க."

"பேப்பர்ல போட்டிருக்கானே."

"என்னான்னு."

"பருவமழை தாமதம்னு."

அவர்கள் உலக விஷயங்களை தெரிந்து கொள்ளவும், அந்தக் கோயிலை பயன்படுத்தினார்கள்.

அந்தத் தெருவில் இருந்த பல ஓட்டு வீடுகள் இடிக்கப்பட்டு அடுக்குமாடிக் கட்டிடங்களாக கட்டப்பட்டு எண்ணூறு சதுரஅடி, தொள்ளாயிரம் சதுரஅடி, ஆயிரத்து நூறு சதுரஅடி என்று தனித்தனி வீடுகளாக விற்கப்பட்டன. நூறடி ஆழம் போர்போட்டு குளிப்பதற்கும், மற்ற சுகாதார வசதிகளுக்கும் தண்ணீர் கிடைத்திருந்தது. ஆனால், அது குடிப்பதற்கு உகந்ததாக இல்லை. லேசாகக் கடுத்தது. ஒரு நாள் விட்டு ஒருநாள் வருகின்ற மாநகராட்சித் தண்ணீரை அவர்கள் பிடித்து வைத்துக்கொண்டு காய்ச்சி வடிகட்டி சுத்தமாகக் குடித்தார்கள். சிலர் தண்ணீரை காசுகொடுத்து வாங்கிக் கொண்டார்கள்.

"துட்டு கொடுத்து தண்ணி வாங்கறமே. இது என்ன நல்லாவா இருக்கு."

ஒரு பெண்மணி சொல்ல சகலரும் அவள்மீது பாய்ந்தார்கள்.

"வாங்காதீங்க. பன்னெண்டு ரூபாய்க்கு பார்ப்பீங்க. டாக்டருக்குப் போய் ஆயிரத்து இருநூறு ரூபா அழுங்க." என்று அவளுக்கு போதிக்கப்பட்டது.

அவள் மிரண்டாள்.

"இருபது ரூபா ஒரு ஜார் தண்ணி. இதுக்கு மேலும் கீழும் பார்த்தீங்கன்னா டாக்டர் செலவுதான் வரும். சமையலுக்கு கார்ப்பரேஷன் தண்ணியை ஃபில்டர் பண்ணி வச்சுக்கணும். அக்வாகார்ட்னு ஒண்ணு வருது. மூணு தடவை ஃபில்டர் பண்ணி வர தண்ணியை சமையலுக்கு வச்சுக்கோங்க. இந்த மினரல் வாட்டர் குடிக்கறதுக்கு ருசியா இருக்கும். இதை இருவது லிட்டர் வாங்கி வச்சுட்டா ரெண்டு நாளைக்கு வரும். ஒரு முன்னூறு ரூபா செலவு. ஒருநாள் விட்டு ஒருநாள் ஒரு ஜார் வாங்கினா போதும். இந்தக் காம்பவுண்ட்லயே இருவத்தி மூணுபேர் இந்தத் தண்ணிதான் வாங்கறோம். அவன் தினம் வந்துடறான். எப்போ தண்ணி கேட்டாலும் கொண்டு வந்து கொடுக்கறான். எங்க மாமனார் காலமானபோது ராத்திரி பதினோரு மணிக்கு போன்பண்ணி இந்த மாதிரி ஆயிப்போச்சுப்பா தண்ணி கொடுப்பான்னு சொன்னேன். ஒண்ணுக்கு ரெண்டு கொண்டுவந்து இறக்கிட்டான். எவ்ளோ நிம்மதியா இருந்தது தெரியுமா. ரொம்ப அழுவறவங்களுக்கு

ஒரு வாய் தண்ணிகூட கொடுக்க முடியாம போயிடுமோன்னு நினைச்சேன். மகராசன் கொண்டு வந்து இறக்கிட்டான்."

"உங்க மாமனார் காரியமெல்லாம் முடிஞ்சுடுச்சா."

"எல்லாம் முடிச்சுட்டோம்."

"ஹோமம் பண்ண மாதிரி ஒண்ணும் தெரியலையே. புகை வரலையே."

"நாங்க அப்படியெல்லாம் பண்றதில்லை. பத்து நாளைக்கு அப்புறம், புதைச்ச இடத்துக்குப்போய் ஒரு சாங்கியம் பண்றது. பிறகு குளிச்சுட்டு வந்து பதினாறாவது நாள் ஒரு தடவை சுத்தம் பண்றது. சொந்தக்காரங்க பத்து பேர் வந்திருந்தாங்க. அவங்களுக்கு சோறு போட்டோம். ஐயருங்களுக்கு அரிசி கொடுத்தோம். எங்க வீட்டுக்காரர் போறாது வேற ஏதாவது பண்ணணும் அப்படின்னாரு. ரெண்டு நாள் இந்தக் கோயில்ல அன்னதானம் பண்றோம்னு வேண்டிகிட்டிருக்கோம்."

"அடிசக்கை.. இது ஆயிரம் ஹோமத்துக்கு சமமாச்சே."

ஒருத்தி பாராட்ட, மாமனாரை இழந்தவள் முகம் மலர்ந்தாள்.

"நான்தான் அவருக்குச் சொன்னேன். ஏங்க துட்டை இப்படி வேஸ்ட் பண்ணணும். ரெண்டு ஆயிரம் ரூபா போறும். ஒரு நாளைக்கு ஆயிரம் ரூபாக்கு புளியோதரை போட்டுடலாம். ஒரு நாளைக்கு ஆயிரம் ரூபாக்கு தயிர்சாதம் போட்டுடலாம்னு. எங்க மாமனாருக்கு ரெண்டும் அவ்ளோ பிடிக்கும். எங்க வீட்டுக்காரரு உடனே சரின்னு சொல்லிட்டார். நாளைக்கு புளியோதரை போடறோம். நம்ம ரங்கநாதன் இல்ல, அவர்தான் கொண்டு வந்து போடறார். பன்னெண்டு கிலோ அரிசி."

"அது என்ன பன்னெண்டு கிலோ."

"அவருக்கு நெருங்கின சொந்தமா பன்னெண்டு பேர். அந்த பன்னெண்டுபேரும் நல்லா இருக்கணும்னு பன்னெண்டு கிலோ அரிசி போடறோம்."

"அடிசக்கை.. இதுவும் நல்லாதான் இருக்கு."

"என்ன கேலி பண்றீங்களா."

"இல்லவே இல்லை. சமையல் நாம வச்சுக்கறதுதான். எல்லாம் ஐயருகிட்ட கொடுத்து ஐயரு சொல்றபடிதான் இருக்கணுமா. தேவையே இல்லை. நம்ம மனசுக்கு ஏத்தபடி செய்யறதுதான் நமக்கு நல்லது. பன்னெண்டுபேர் பன்னெண்டுகிலோ அரிசின்னு சொன்னீங்களே கேட்கறதுக்கே நல்லாயிருக்கு."

மற்றொருவர் பாராட்ட, அவள் முகத்தில் பெருஞ்சிரிப்பு ஏற்பட்டது. பூரிப்புப் பொங்கி வழிந்தது.

"ரங்கநாதன் இன்னும் வரலை. அதான் காத்துகிட்டிருக்கேன்."

"வந்துடுவாரே ரங்கநாதன் பண்ற எல்லாப் பொருளும நல்லாயிருக்கும். நாம பூஜைக்கு உட்காரலாமா"

அந்தப் பெண்கள் வரிசையாக உட்கார்ந்தார்கள். அங்கே அபிஷேகம் துவங்கியது. இரண்டு கம்பி கிராதிகளுகடு நடுவே இருபத்துமூன்று. இருபத்துநான்கு பெண்கள். மத்திம வயதுப் பெண்மணிகள் அழுந்தி உட்கார கோவில் மணியை வேகமாக அடித்தார்கள். பூஜை துவங்கிவிட்டது. அபிஷேகம் ஆரம்பித்து விட்டது என்று அர்த்தம். அந்தச் சத்தம் கேட்டு மேலும் சில பெண்மணிகள் ஓடி வந்தார்கள். கோவிலைச் சுற்றிக் கொண்டிருந்தவர்கள், கருவறைக்கு எதிரே வந்து நின்றார்கள்.

அம்மன் சிலைமீது மெல்லிய கரும்பச்சை நிறத்து பழைய புடவை ஒன்றை சார்த்தி அதன்மீது நல்லெண்ணெய் ஊற்றப்பட்டது. முகமெங்கும் நல்லெண்ணெய் தடவப் பட்டது. கிரீடத்தில் மெழுகுவதுபோல் துடைக்கப்பட்டது. கைகளிலும், கால்களிலும் அழுந்த தேய்க்கப்பட்டது.

நல்லெண்ணெய் அபிஷேகம் ஆனபிறகு, ராமசுப்பு கற்பூரம் காட்டினான். கற்பூரத்தை கீழே போட்டான். பிறகு வாசனைப் பொடியை உள்ளங்கையில் வைத்துக்கொண்டு தண்ணீர் ஊற்றிப் பிசைந்து அதை அப்படியே அம்மனின் கிரீடத்தில் வைத்தான். மெல்ல தண்ணீர் ஊற்றி அது குழைந்துவர முகமெங்கும் தடவினான். சரஸ்வதி மாமி கொடுத்திருந்த வாசனைப்பொடி குபீரென்ற ஒரு வாசனையை கருவறை முழுவதும் நிரப்பியது. கருவறையைச் சுற்றிவந்த காற்று அந்த வாசனையை வெளியே உள்ள பெண்களுக்கும் அனுப்பியது. அந்தப் பெண்கள் ஆழ்ந்து அந்த வாசனைப் பொடியை நுகர்ந்து, அனுபவித்து அம்மன் முகத்தில் தோன்றும் மாறுதல்களை கவனித்து அதிசயித்தார்கள். எண்ணெய் தடவிய முகத்தின் மீது குழைவான அந்த வாசனைப்பொடி கரைசலை விட, அந்த சிரிப்பு இன்னும் அகலமாகியது. மூக்கும், கன்னமும், முகவாயும், உதடுகளும் நன்கு தெரிந்தன. மார்மீது வழிந்து இடுப்பில் பரவியபோது அவளின் கட்டுடல் நன்கு பெண்களுக்கு புரிந்தது.

அவர்கள் கைகூப்பினார்கள். மறுபடியும் கற்பூரம் ஏற்றப்பட்டது.

பிறகு ஆறு இளநீரின் கண்திறந்து ராமசுப்ரமணியம் செப்புக்குடத்தில் கவிழ்த்தான். பிறகு வெகு நிதானமாக குளிரக்குளிர அந்த இளநீரை அம்பாளின் மீது நிதானமாக ஊற்றினான். உச்சியிலிருந்து பாதம் வரையிலும் சீராக நீர்

வார்த்தான். மறுபடியும் கற்பூரம் காட்டினான்.

இளநீரின் இனிப்பு வாசனை அங்கு பரவியது.

இப்பொழுது பால் எடுத்து ஜனங்களிடம் காட்டினான்.

இது முக்கியமான அபிஷேகம் அப்படிப் பால் ஊற்றுகிறபோது முகத்தில் மிகத்தெளிவாக சிரிப்பும், கருணை பொங்கும் கண்களும், மூக்கின் விடைப்பும் மார்பின் எடுப்பும் உள்ளங்கைகளின் ரேகைகளும் நன்கு தெரியும். இந்தக் கோலத்தில் அம்பாளைப் பார்ப்பது அபூர்வமான விஷயம்.

அங்கு பால் பாக்கெட்டுகள் அதிகம் இருந்தன. இரண்டு குடங்கள் பால் வெகுநிதானமாக உடம்பின் எல்லாப் பகுதிகளிலும் படும்படியாக ராமசுப்ரமணியம் அபிஷேகம் செய்தான்.

அம்பாள் சிரித்தாள். கண் சிமிட்டினாள். மெல்ல உதடு பிரித்து பற்கள் தெரிய முறுவலித்தாள். கைகள் அசைத்தாள். அவள் நெஞ்சு விம்மித் தணிந்தது. வயிறு குழைந்தது. கால் நகங்கள் அசைவது போல் தெரிந்தன.

பால் அபிஷேகம் இத்தனை வித்தைகளையும் பார்ப்பவர் முன்பு காட்டியது.

"தாயே.. இப்பவே உன் காலடியிலயே செத்துடலாம் போல இருக்கு." ஒரு வயதான பெண்மணி நெகிழ்ச்சியான குரலில் சொல்ல மற்ற பெண்மணிகளுக்கும் அந்த நெகிழ்ச்சி தொற்றிக் கொண்டது.

ராமசுப்ரமணியம் கற்பூரம் காட்டினான். நல்ல நீரால் அந்த சிலையை மறுபடியும் குளிப்பாட்டினான். அடுத்தபடியாய் தயிர் அபிஷேகம் நடந்தது.

நிதானமாக நின்று முகம் முழுவதும் தயிர் பரவி அங்கங்கே தங்கி புதுவிதமான ஒரு முகம் காட்டியது. மெல்லிய அந்த கோரைப்பற்கள் தயிர் தேங்குவதால் தெள்ளத்தெளிவாக சற்று நீளமாகவே தெரிந்தது. அந்த ஒரு முகம்தான் அம்மன் உக்கிரமானவள் என்பதை எதிரே உள்ளவர்களுக்கு உணர்த்தியது. எல்லோரும் மௌனமாய் கைகூப்பியபடியே அம்மன் சிலையை பார்த்துக் கொண்டிருந்தார்கள். மறுபடியும் கற்பூர ஆரத்தி காட்டப்பட்டது.

"சின்ன பையனா இருந்தாலும் ராமசுப்ரமணியம் ரொம்ப அழகா அபிஷேகம் பண்றான்."

ஒரு மாமி சொல்ல, மற்றவர்கள் மடமடவென்று தலையசைத்தார்கள். 'ஆமாம்.. ஆமாம்' என்று கூவினார்கள். அந்த அபிஷேகம் பார்க்கிற சந்தோஷம் யாரையாவது பாராட்ட வேண்டிய எண்ணத்தை ஏற்படுத்தி அந்தப்பாராட்டு ராமசுப்ரமணியத்தின் மீது விழுந்தது.

"தேன் கொண்டு வரணும்னு நினைச்சேன். விட்டுட்டேன்

போங்கோ."

ஒரு பெண்மணி எழும்ப டக்கென்று அவளை இழுத்து உட்கார வைத்தார்கள்.

"அதுக்கு உண்டான நேரம் முடிஞ்சுப்போச்சு. இளநீ பண்ணபிறகு தேன் பண்ணியிருக்கணும். தேன் பண்ண பிறகு பால் பண்ணியிருக்கணும். தேன் சூடு இல்லையா. நாளைக்கு கொண்டு வாங்க போதும்."

அவளை உட்கார வைத்தார்கள்.

அடுத்ததாக பஞ்சாமிர்தம் அம்பாள் மீது தடவப்பட்டது. அள்ளி அள்ளி முகத்திலும், உச்சியிலும் இரண்டு கைகளிலும், தொடைகளிலும் நெஞ்சின் மீதும், வயிற்றின் மீதும் மிக மரியாதையாக ராமசுப்ரமணியம் வைத்தான். பிறகு வழித்து பாத்திரத்தில் தேக்கி வைத்துக் கொண்டான். மறுபடியும் சளோர் சளோர் என்று நீர்விட்டு அவளைச் சுத்தப்படுத்தினான்.

வெள்ளிக்குடம் நிறைய மஞ்சளும், சந்தனமும் இட்டு அதில் நீர் ஊற்றி நன்கு கலக்கினான். கீழே தங்கச் சங்கிலிகளும், இருபத்து நான்கு வளையல்களும் அந்தத் தட்டில் இருந்தன. வளையல்களை அப்படியே எடுத்து கிரீடத்தில் சாற்றினான். சிலவற்றை கைகளில் மாட்டினான். தங்கச் சங்கிலியை கழுத்தில் தொங்க விட்டான். மஞ்சளும், சந்தனமும் கலந்த அந்த நீரை மிக நிதானமாக அம்பாளின்மீது அபிஷேகம் செய்தான்.

அம்பாள் அத்தனை பேரையும் பார்த்து மிகப்பெரிதாகப் புன்னகை செய்தாள்.

மஞ்சளின் வாசனை, சந்தனத்தின் வாசனை அந்தக் கோவில் முழுவதும் பரவியது.

நகைகளை மொத்தமும் தட்டில் கொண்டு வந்து வைக்க அவர்கள் எல்லோரும் எடுத்துக் கொண்டார்கள். 'எல்லாம் வந்துடுத்தா' என்று அவன் கேட்க வந்துவிட்டது என்று தலையசைத்தார்கள்.

அந்த அடுக்குமாடி வீட்டின் கீழ் போர்ஷனில் குடியிருக்கும் சரஸ்வதி மாமி பிளாஸ்டிக் உறையில் பாதுகாக்கப்பட்ட கங்கை நீர் மூன்றை கத்தரித்து ஒரு பித்தளைச் சொம்பில் ஊற்றிக் கொடுக்க எல்லா அபிஷேகமும் முடிந்து கடைசியில் கங்கை நீரால் குளிரக்குளிர ராமசுப்ரமணியன் ஆயிரம்கண்ணிக்கு அபிஷேகம் செய்தான்.

அந்த கங்கைநீரை அங்கங்கே பாத்திரங்கள் வைத்து தேக்கிப் பிடித்து மறுபடியும் அந்தச் சொம்புக்கே கங்கைநீரை மாற்றினான். கொண்டுபோய் சரஸ்வதிமாமியிடம் கொடுத்தான். சரஸ்வதிமாமி அந்த கங்கை நீரை வாங்கி உள்ளங்கையில் வைத்துக் குடித்தாள். தலையில் தெளித்துக்

கொண்டாள்.

மறுபடியும் உள்ளங்கையில் வைத்துக் குடிந்தாள். தலையில் தெளித்துக் கொண்டாள். மறுபடியும் உள்ளங்கையில் எடுத்து அங்குள்ள எல்லாப் பெண்மணிகளின் தலையிலும் தெளித்தாள்.

கங்கையே புனிதமானது. அந்தப் புனித கங்கை ஆயிரம் கண்ணியின் உச்சியில் அபிஷேகம் பண்ணப்பட்டு வருகிறதென்றால் இன்னமும் புனிதமடைகிறது. ஒருநாள் போல சரஸ்வதிமாமி கங்காஜலம் கொண்டு வந்து கொடுக்கிறாள். உச்சி வேளைக்கு அபிஷேகம் கங்கை ஜலத்தால் ஆகிறது. அந்த கங்கைஜலம் சகலருக்கும் கொடுக்கப்படுகிறது. சகலருக்கும் தெளிக்கப்படுகிறது. இது மிக மிகப் புண்ணியமான விஷயம். இந்தக் கங்கைஜலம் வாங்கிக் கொள்வதற்கே தவறாமல் வந்துவிட வேண்டும் என்று பெண்களுக்குத் தோன்றியது. புனிதமுள்ள நீரால் தங்கள் தலை நனைக்கப்பட்டதால் தங்கள் முகத்தில் தெளிக்கப்பட்டதால் தாங்களும் புனிதமடைந்ததாக ஒரு பாவனை அந்தப் பெண்களுக்குள் தோன்றியது. சகலரும் கைகூப்பி கண்மூடி எனக்கு நல்லது நடக்க வேண்டும் தாயே, என்னை ஆசிர்வதிக்க வேண்டும் அம்மா.. என்று உள்ளுக்குள் கெஞ்சினார்கள். நிச்சயம் நல்லது நடக்கும் என்று நம்பினார்கள். அதனால் அங்கு உள்ள அத்தனை பெண்மணிகளின் முகங்களும் மிகப்பிரகாசமாக இருந்தன.

அடுக்கு தீபம் ஏற்றப்பட அத்தனை பெண்களும் கைகூப்பினார்கள்.

பெண்கள் எழுந்து கோவிலை வலம் வரத் துவங்கினார்கள். இதுவரை அமைதியாக இருந்தவர்கள் இப்பொழுது சடேரென்று சலசலத்தார்கள்.

"சரஸ்வதிமாமி இங்க இருக்கற அத்தனை பேர்ல உங்களுக்குதான் புண்ணியம். ஒரு நாள் தவறாத கங்கை ஜலத்தை கொண்டு வந்து எங்களுக்கு தெளிக்கறேளே. ப்பா.. எவ்ளோ பெரிய கொடுப்பனை அது. உங்களுக்காக நாங்க கடன்பட்டிருக்கோம் மாமி." என்று சொல்ல "போடி. அது என் கடமை. ஒரு பாக்கெட் பதினஞ்சு ரூபா. மூணு பாக்கெட் வாங்கறேன். அஞ்சு ரூபாய்க்கு கற்பூரம் வாங்கித்தரேன். இல்ல, நல்லெண்ணெய் வாங்கித்தரேன். அதுக்குண்டான ஒரு யோக்கியதையோட எங்கம்மா வச்சுருக்காளே அது போறும்டி. இது, அவ தனக்குத்தானே பண்ணிக்கிற ஒரு அபிஷேகம். நான் என்னடி பண்றேன்."

சரஸ்வதிமாமி உண்மையிலேயே மிக அடக்கமாகப் பேசினாள்.

முப்பத்தாறு போர்ஷன்களாக கட்டப்பட்ட அந்த அடுக்குமாடி வீடும் அவளுடைய சொந்த இடம். அவள் பிறந்த வீடு. அவள் வளர்ந்த இடம். அவளுக்கு திருமணம் செய்ய வேண்டுமென்று அந்த இடத்தை அப்பா ஒரு கட்டிட காண்ட்ராக்டிடம் கொடுக்க அவளுக்கு கீழ் போர்ஷன் கொடுக்கப்பட்டது. மேல் போர்ஷன் அவள் தம்பிக்கு தரப்பட்டது. மற்ற எல்லாம் காண்ட்ராக்டிற்கு கொடுக்கப் பட்டன. அதைத்தவிர அவள் திருமணத்திற்குண்டான காசும் அவள் தம்பிக்கு உண்டான பங்கும் போயிற்று.

"உன் பங்கு எட்டு லட்சரூபாயா. வாங்கிட்டு வந்துடு. நாம அதை ரொம்ப கவனமா இன்வெஸ்ட் பண்ணலாம்."

அவள் புருஷன் சொன்னான். அவள் போய் தந்தையிடம் சொல்ல, "யாரும் இதுக்கு பிறகு எதுக்கும் ஒத்த பைசா கேட்கப்படாது." என்று அவள் தந்தையிடமிருந்து ஒரு கட்டளை பிறப்பிக்கப்பட்டது. கேட்கமாட்டோம் என்று சரஸ்வதியின் கணவன் உறுதியளித்தான்.

அந்தக்காசு வந்ததும் ஒரு லட்ச ரூபாயை மகள் பெயரில் டெபாசிட் செய்தான். இன்னொரு ஒரு லட்ச ரூபாயை மகன் பெயரில் டெபாசிட் செய்தான். இருபது வருடம் கழித்து எடுக்கப்படும் என்று வங்கிக்கு அறிவித்தான். சரஸ்வதியினுடைய வீடும், அவள தம்பியின் வீடும் ஆயிரத்து ஐநூறு சதுரஅடி இருந்தன. மிக நேர்த்தியாக கட்டித்தரப்பட்டது. மீதிப்பணத்திற்கு சரஸ்வதி மிக நல்ல தங்க நகைகள் வாங்கிக் கொண்டாள்.

நல்ல புருஷன். நல்ல குழந்தைகள். பையில் சிறிதளவு காசு. எதிர்கால சேமிப்பு என்கிற சந்தோஷத்தில் வாழ்க்கை உற்சாகமாகக் கழிந்தது. தன்னுடைய வீடு இடிக்கப்பட்டு பெரிய அடுக்குமாடியாகக் கட்டப்பட்டது. ஆரம்பத்தில் வருத்தமாயிருந்ததெனினும் மெல்லமெல்ல அந்தப்பகுதி உயிர்ப்பெற்று நிறைய ஜனங்கள் புழங்கத்துவங்கி அங்கு படித்தவர்களும், பண்புள்ளவர்களும் ஒன்று சேருவதைக் கண்டு அவள் தன் துக்கம் மறந்தாள். நான்கு கட்டு ஓட்டுவீடு அவள் நினைவிலிருந்து முற்றிலும் மறந்தது. இந்த அடுக்குமாடியே மிகப்பெரிய சொர்க்கமாயிற்று.

அந்த வீட்டின் காம்பவுண்ட் சுவர் ஒட்டி செம்பருத்திச் செடிகளும், பவழமல்லி மரங்களும், விருட்சியும், சங்கு புஷ்பமும், அடுக்கு நந்தியாவட்டையும் வளர்த்தாள். காய்கறிக் குப்பைகளை தனியே கொடுங்கள் என்று கேட்டு வாங்கிக் கொண்டாள். அந்த அடுக்குமாடியில் உள்ளவர்கள் தனியே காய்கறிக் குப்பைகள் கொடுக்க அவைகளை தண்ணீரில் அமுத்தி இரண்டு மூன்று நாள் ஊறவைத்து பிறகு

அதைச் செடிகளுக்கு மண் கிளறி புதைத்து வைத்தாள். இயற்கையில் இயற்கை சிலிர்த்து எழுந்தது. காயகறி உரததால் பூக்கள் பூத்துக் குலுங்கின.

இத்தனை பூக்களை என்னசெய்வது எனக்கு. உனக்கு என்று போட்டி போட்டுக்கொண்டார்கள். சிலபேர் கடுமையான வார்த்தைகளை உதிர்த்தார்கள்.

"நான்கூடதான் காய்கறி குப்பைகூடை கொடுக்கறேன். எனக்கும் பூ சொந்தமோன்னோ." என்று உரக்கப் பேசினார்கள்.

இந்த சண்டையைத் தீர்க்க சரஸ்வதிக்கு வேறு வழி புரியவில்லை.

"பகவான் கொடுத்த பூ பகவானுக்குத்தான்."

"ஏன், பகவான் உங்க வீட்லதான் இருக்காரா. எங்க வீட்ல இல்லையா."

சரஸ்வதிக்கு வேகமாக குடித்தனக்காரி கேள்வி கேட்க. "இல்லை. உங்க வீட்டு பகவானுக்கு இல்லை. எங்க வீட்டு பகவானுக்கு இல்லை. இதே தெருவுல இருக்காளே ஆயிரம் கண்ணி.. இந்தப்பூ அத்தனையும் அவளுக்குத்தான் சொந்தம். இந்த இடம் முழுக்க அவளுக்குத்தான் சொந்தம். ஒரு காலத்துல அவள் ராஜ்யபரிபாலனம் பண்ண இடமா இருந்தது. அங்க இருக்கற நிலம் முழுக்க அவ கோயில் சொத்தா இருந்தது. அதனால இங்க பூக்கறபூ அத்தனையும் அவளுக்குத்தான். மீறி யார் எடுத்தாலும் சரி, அவா உடம்புக்கு வந்துடும்" என்று உரக்க சரஸ்வதி சொன்னாள்.

பூவைபபறித்து பாவாடை நிறைய பவழமல்லியை எடுத்துப் போன ஒருபெண் மாடிப்படியில் வேறு யாரோ வருவதைப் பார்த்து சரட்டென்று திரும்ப கால் பிழன்று விழ ஆறேழு படிகள் உருண்டு தரையெல்லாம் பவழமல்லிச் சிதறி மூக்கு முகமெல்லாம் ரத்தவிளாராகி அழத்துவங்க, இந்தப் பூவை தொடவேக்கூடாது என்று அந்த அடுக்குமாடி குடித்தனக்காரர்கள் முடிவெடுத்தார்கள். பூ பறித்துக்கொண்டு வருகின்ற பொறுப்பை அந்த குடித்தனக்காரர்களே ஏற்றுக் கொண்டார்கள். இன்னும் செடிக்கு உரம்போட்டு புதிதுபுதிதாய் நட்டு நிறைய வளர்த்தார்கள். வீட்டுக்கு மூவராக முப்பத்தாறு வீட்டிலிருந்து ஜனங்கள் அந்தக் கோவிலுக்கு வந்துபோக கோவில் பிரகாசமாயிற்று. ஆயிரம்கண்ணிக்கு விருட்சியில் ஆன தடித்த மாலை போட்டிருப்பதைப் பார்த்து அந்தப் பகுதிவாசிகள் அடிக்கடி கோவிலுக்கு வரத்துவங்கினார்கள். ஆயிரம்கண்ணியால் பூக்கள் அதிகம் பூத்தது. பூக்கள் அதிகம் பூத்ததால் ஆயிரம்கண்ணிக்கு மாலை சூட்டப்பட்டது. மாலைகள் சூட்டப்பட்டதால் ஆயிரம்கண்ணியைப் பார்க்க அதிக ஜனங்கள் வந்தார்கள். அங்கும் காணிக்கை

செலுத்தினார்கள். விதவிதமாய் வேண்டிக்கொண்டார்கள்.

யாரால் இது ஏற்பட்டது என்ற கேள்வி மறந்து போய் சகலமும் இறையின் சக்தி, அவளின் அருள் என்ற பேச்சே நிலைத்து நின்றது.

"அது குறுகலான தெருதான். ஆனா, பள்ளமான பகுதி. தண்ணிக்கு எப்பவும் பஞ்சமே இல்லை. நூறு வருஷத்துக்கு முன்னாடி 'அந்தப் பக்கமா ஒரு ஒடை' போய்கிட்டிருந்தது. பல்லாயிரக்கணக்கான வருடமா ஒடை போய்கிட்டிருந்ததால் அந்தப் பகுதியில தண்ணிக்கு பஞ்சமே இல்லை. அம்பதடி ஆழத்துல தண்ணி வருது. நூறடியில போட்டா நல்ல வெய்யில் காலத்துலயும் தண்ணி கிடைக்கறது. ஆள் அரவமே இல்லாத பணக்காரப் பகுதியில நீ வீடு இடிச்சு அடுக்குமாடி கட்டினாக்க விக்கறதுக்குள்ளயும் பெரும்பாடு ஆயிடுது. இந்த மாதிரி இடத்துல சல்லீசா வீடு வாங்கலாம். வேகமா கட்டலாம். உடனே போகும். குறைச்ச முதலீடு. நிச்சய லாபம். நிலம் வாங்கி வீட்டை வாங்கிடு. போர்டை மாட்டு. வெறும் இந்த மாதிரி கட்டப்போறோம்னு ப்ளான் கொண்ணாந்து காண்பி. இங்க கட்டற வீடு அத்தனையும் ஒன்றரை மாசத்துல புக் ஆகலேன்னா என் பேரை மாத்திக்கறேன்."

வீட்டுப் புரோக்கர்கள் கட்டிட காண்ட்டிராக்டர்களுக்கு வலை விசினார்கள்.

அந்தத் தெருவின் ஓட்டு வீடுகள் இரண்டு மூன்று வெவ்வேறு கட்டிட காண்ட்ராக்டர்களால் வாங்கப்பட்டு, போர்டு மாட்டப்பட்டு, இடிக்கப்பட்டு, அஸ்திவாரம் போடப்பட்டு சரஸ்வதி அம்மாளின் அடுக்குமாடி வீடு போலவே ஐநூறு, எண்ணூறு, ஆயிரம் சதுர அடி என்று பல்வேறு விதமாக விற்கப்பட்டது.

ஒரு கட்டிட காண்ட்ராக்டர் எல்லாமும் ஆயிரம் என்று பிரித்து விற்க அதற்கும் விசாரணைகள் வந்தன. அடுத்த ஒரு வருடத்தில் மூன்று திடமான அடுக்குமாடி வீடுகள் எழும்ப அந்தப்பகுதியின் மத்திய தர வாசிகள் இன்னும் இருபத்தைந்து வருடம் அரசாங்க வேலை உறுதியாக இருக்கிறது என்று நம்பியவர்கள், வாழ்வின் மீது பிடிமானம் உள்ளவர்கள். தன் குழந்தை வளர்ந்து நல்லபடியாக படித்து தன்னைக் காப்பாற்றும் என்ற நம்பிக்கையுள்ளவர்கள் போட்டி போட்டுக் கொண்டு வீடு வாங்கினார்கள்.

"ஆயிரம் ஸ்கொயர் ஃபீட் வாங்கறேன். எனக்கு கஷ்டம்தான். மாசம் ஆறாயிரம் ரூபா கடன் அடைக்கணும். சம்பளம் பதினோராயிரம்தான். மிச்சம் அஞ்சாயிரத்துல குடித்தனம் பண்ணணும். நான் எப்படியாவது சமாளிச்சுடுவேன். சம்பளம் ஜாஸ்தியாகும். மனைவியையும்

வேலைக்கு அனுப்பலாம்னு இருக்கேன். ரெண்டு பையன்களும் நல்லா படிக்கற பசங்க. அமைதியான இடத்துல ஆளுக்கொரு ரூம் கொடுத்தா ஜம்முனு படிப்பாங்க. நான் படிக்கறபோதெல்லாம் எனக்குன்னு ஒரு மேஜைகூட கிடையாது ஸார். பசங்களுக்கு நான் நிச்சயமா ஏதாவது பண்ணணும்."

அவர் டெலிபோன் டிபார்ட்மெண்ட் இன்ஜீனியர். அவர் கதையைச் சொன்னார். அனேகமாக அந்தப்பகுதி மக்கள் பலபேருடைய கதையும் அவருடையதைப் போலவே இருந்தது.

"நான் நன்னா பாடுவேன். பாட்டு சொல்லித் தந்தா.. ஒரு குழந்தைக்கு இருபது ரூபா. பத்து குழந்தைங்க வந்தாபோதும். இருநூறு ரூபா. ரேஷன்ல அரிசி வாங்கறதுக்கே காசு வந்துடுத்து. நான் கத்துக்கொடுக்கட்டுமா."

வடக்கு பார்த்த வீடு. தெற்கு பார்த்த ஜன்னல். ஹாலில் ஆறு குழந்தைகள் உட்கார்ந்து கொண்டு பாட்டு கற்றுக் கொண்டனர். அந்தக் குழந்தைகளும் அடுக்குமாடி வீட்டிலிருந்துதான் வந்தனர்.

"எங்கயும் மெயின்ரோடு தாண்டி போகவேண்டாம். இந்த தெருவுல நாலு பில்டிங் தாண்டினா பாட்டு டீச்சர் வீடு. கத்துண்டு வா."

பெற்றோர்கள் அனுப்ப இன்னும் குழந்தைகள் சேர்ந்தனர். காலையில் பத்து பேர். சாயந்தரம் பத்து பேர் என்று இரண்டு வகுப்புகள் நடத்தும்படி ஆயிற்று.

"விலைவாசியெல்லாம் ஜாஸ்தி ஆயிடுத்தும்மா. இனிமே ஆளுக்கு முப்பது ரூபான்னு கேட்கப் போறேன். முன்னூறு முன்னூறும் அறுநூறு ரூபாய் வரும். ரேஷன் அரிசி எதுக்கு. நல்ல சன்னமான அரிசியே வாங்கலாமே."

"வாங்கலாம். எனக்கும் சம்பளம் ஜாஸ்தி ஆயிடுத்து. பேங்க்ல ஆறாயிரம் ரூபா கட்ட வேண்டாமாம். வட்டி குறையறதாம். ஐயாயிரத்து நானூறு ரூபா கட்டினா போதுமாம்."

"அடிசக்கை அதுல ஒரு அறுநூறு மிஞ்சறதா. நான் ஏதாவது நகை வாங்கிக்கட்டுமா."

"அவசரப்படாத. குழந்தைங்களுக்கு ஃபீஸ் கட்டணுமோன்னோ. அவா பெரிய படிப்பு படிக்கறாளோன்னோ."

"அப்போ. நான் சரஸ்வதி பூஜைய ஃபங்ஷனா வைக்கறேன். சரஸ்வதி பூஜைய விழாவா கொண்டாடறேன்."

"பண்ணேன்."

சரஸ்வதி பூஜையும் அதற்கு அடுத்த நாள் விஜயதசமியும்

அந்த வீட்டில் விமரிசையாகக் கொண்டாடப்பட்டன.

சரஸ்வதி பூஜையன்று கூடுதலாக இருபது ரூபாய் பண வைத்து அந்த டீச்சருக்கு தரப்பட்டது. விஜயதசமியின்போ குழந்தைகள் அதிகம் சேர்ந்தார்கள். ஜோரஸாய் அவர்கள் வீட் ஹாலில் நாற்பது குழந்தைகள் பாடினார்கள். நூற்றியிருப பெண்மணிகள் அவர்கள் பாடுவதை கேட்டார்கள்.

"ஹா.. அடுக்குமாடியே மாறிப்போயிடுத்து. இப்போதா ஒரு சரஸ்வதி பண்டிகையை நான் நிறைவ கொண்டாடிரேது."

பலபேர் அவளிடம் வந்து பாராட்டி கை குலுக்கினார்கள்

அவள் கணக்குப் பார்த்தாள்.

இரண்டாயிரத்து எழுநூற்றிஐம்பது ரூபாய் கா சேர்ந்திருந்தது.

அவள் புருஷன் அவளை அணைத்துக்கொண்டு பாராட்டினான்.

"என் கழுத்துக்கு நகை வேணும்."

ராத்திரி அவனை கட்டிக்கொண்டு அவள் கொஞ்சினாள்

"நான் உனக்கு ரெண்டாயிரம் ரூபா தரேன்."

"எப்படி.. திடீர்னு ரெண்டாயிரம். எங்கேயிருந்து முளைச்சது."

"புதுசா ஒரு ஸ்கூட்டர் கம்பெனி. ஆறு டெலிபோன் கனெக்ஷன் வேணும்னு கேட்டான். ரெண்டு சேங்ஷன் ஆகியிருந்தது. நாலு கூடுதலா வேணும்னான். நான் கையெழுத்து போட்டா கிடைக்கும். நான் வேற நாலு பேருக்கு கொடுத்திருந்ததை மெல்ல உருவி அவனுக்கு சேர்த்துட்டேன். ரெண்டாயிரம் ரூபா சாலிடா கொடுத்தான்."

"ஐயோ.. இதுல தப்பு வராதே."

"வராது."

"வேலை ஒண்ணும் போகாதே."

"போகாது."

"எப்படி இவ்ளோ திடமா சொல்றேள்."

"புதுசா லைன் போட்டுண்டிருக்கா. பத்தாயிரம் டெலிபோன் வரப்போறது. அது வந்துடுத்துன்னா எல்லாருக்கும் கூப்ட்டு கூப்ட்டு கொடுக்கலாம். அது அந்த கம்பெனிகாரனுக்குத் தெரியாது. நான் சொல்லலை."

"அப்போ அந்த ரெண்டாயிரமும் எனக்கு கொடுத்துடறேளா."

"உனக்கு இல்லாத வேற யாருக்குடி. எடுத்துக்கோ."

"நீங்களும் எடுத்துக்கோங்கோ."

அவள் அவனைப்புரட்டி தன்மீது போட்டுக் கொண்டாள்.

தன்னிடமிருந்த பழைய நகைகள் இரண்டை விற்றாள்.

தம்பியிடம் அறுநூறு ரூபாய் கடன் வாங்கினாள்.

"உங்க ரெண்டு குழந்தேளுக்கும் நன்னா பாட்டு சொல்லித் தரேன். எனக்கு ஒரு உதவி பண்ணுங்கோ. ஒரு வருஷ சம்பளத்தை கொஞ்சம் முன்னாடி கொடுங்கோ. எனக்கு ஒரு முக்கியமான செலவு இருக்கு" என்று ஒருவரிடம் கெஞ்சிக் கேட்டாள்.

நாலரை பவுனுக்கு ஒரு ஹாரம் அடுத்த வாரம் அவளால் வாங்க முடிந்தது. வாங்கிய நகையை கொண்டு போய் ஆயிரம் கண்ணியின் மார்பில் பூட்டி அழகு பார்த்தாள்.

'ஒண்ணுமே இல்லாத இந்த நாய்க்கு என்ன அழகா ஹாரம் வாங்கிக் கொடுத்திருக்க. இது போறாதுடி. இன்னும் வேணும். நாளைக்கு என் பிள்ளைகளுக்கு கல்யாணம் ஆனா மருமகள் முன்னாடி ஒண்ணுமே இல்லாத நான் நிக்கமுடியுமா. இதோ பையன் டென்த் வந்துட்டான். இன்னொருத்தன் நைன்த். இன்னும் பத்து வருஷத்துல இதுங்களுக்கு நல்லபடியா கல்யாணம் பண்ணிடுவேன் உன் ஆசிர்வாதத்தால. அப்போ நான் பங்கரையா நிக்க முடியுமா. பத்து வருஷத்துல கொஞ்சம் கொஞ்சமா எனக்கு சேர்த்து தரப்படாதா. முப்பது நாப்பது பவுனா சேரப்படாதா. அன்னிக்கு தேதிக்கு முப்பது நாப்பது அல்பமா இருக்கும். அம்பது பவுன்னு வச்சுக்கோயேன். ஒரு அம்பது பவுன் நகை. நூறு புடவை எனக்கு வேணும். இது கொடுத்தா தப்பா. இது உன்னால கொடுக்க முடியாதா.'

அவள் கெஞ்சி கேட்டுக் கொண்டாள்.

பூ உதிர்ந்தது.

போறும்டி. இது போறும்டி. நீ கொடுக்கறேன்னு சொல்லிட்டியோன்னோ. இது போறும்டி.

அந்தப் பாட்டு டீச்சருக்கு சின்னச் சின்ன விஷயங்களில் மனம் ஆனந்தப்பட்டு அவளை உற்சாகமூட்டிற்று. கோயில் சுற்றி வீட்டிற்கு வரும்போதே ஆயிரம்கண்ணியைப்பற்றி ஒரு பாடல் எழுதினாள். வீட்டிற்கு வந்து அதை ராகத்தோடு பாடி முழுவதுமாய் எழுதி வைத்துக் கொண்டாள். நன்கு பாடுகிற மூன்று குழந்தைகளுக்கு அந்தப்பாட்டை சொல்லிக் கொடுத்தாள். சொல்லிக் கொடுக்க சொல்லிக் கொடுக்க இன்னும் அந்தப்பாட்டில் மெருகேறியது. ஒரு தீபாவளி தினத்தன்று, பாடம் சொல்லிக் கொடுத்த குழந்தைகள் கனீர் என்று காலை வேளையில் அவள் இயற்றிய பாடலைப் பாட, அந்தப் பகுதி மக்கள் மிக ஆவலாகக் கேட்டனர்.

"அற்புதமான பாட்டா இருக்கே. நீங்க எழுதினதா.. நீங்க எழுதினதா" என்று அவளிடம் கை குலுக்கினார்கள்.

"எல்லாம் அவ அருள். அவ போடற பிச்சை " என்று அவையடக்கமாக அவள் சொன்னாள்.

ஆயிரம்கண்ணியை ஒருமுறை பார்த்துக் கொண்டாள்.

'உனக்கு பிடிச்சருக்கா பாட்டு' என்று கேட்டாள்.

மறுபடியும் பூ உதிர்ந்தது.

புருஷனை பயிற்சிக்காக வேறொரு மாநிலத்திற்கு அனுப்பினார்கள். ஆறுமாதம் அங்கு தொலைதொடர்பு பற்றிய பயிற்சி அவருக்குத் தரப்பட்டது.

இனிமேல் டெலிபோன்கள் பூமிக்கு அடியில் ஓடாது. வானத்தில் உள்ள செயற்கை கோளுடன் இணைக்கப்படும். அந்த செயற்கை கோள் எப்படி இயங்குகிறது தெரியுமா என்று சொல்லிக் கொடுத்தார்கள்.

அவன் கெட்டிக்காரன். கடும் உழைப்பாளி. எதையும் புரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் உள்ளவன்.

நான் வெறும் டிப்ளமோ ஹோல்டர். தபால்ல பி.ஏ. பாஸ் பண்ணவன். எனக்கே இது இத்தனை சுவையா புரியறதே. எம்புள்ள இன்ஜீனியரிங் படிச்சா என்ன உசரத்துக்கு போகலாம்.

அவன் கற்பனை செய்தான்.

பிள்ளைகளை நன்கு படிக்க வைக்க வேண்டும் என்று உறுதி பூண்டான். உள்ளுக்குள் கைகூப்பி ஆயிரம் கண்ணியை வேண்டிக் கொண்டான்.

என் குழந்தைங்களை நன்னா முன்னுக்கு கொண்டு வா. உன்னுடைய விழாவை நான் நடத்தறேன்.

ஒவ்வொரு வருஷமும் உன் வசந்த விழாவிற்கு இந்த டெலிபோன் இன்ஜீனியர் ஏகப்பட்ட உதவிகள் செய்வான் என்று சபதம் செய்தார்.

அவருக்குள் ஒரு பூ மலர்ந்தது.

அவரைப்போல பல மத்தியதர வர்க்கத்து ஆண்கள் தங்கள் வாழ்க்கையில் முன்னேற ஆயிரம்கண்ணிக்கு தங்களை அர்ப்பணித்துக் கொண்டார்கள். அந்த பாட்டு டீச்சரைப் போல பல பெண்கள் தங்கள் மனம் குளிரவும், வீடு மலரவும் ஆயிரம் கண்ணியை போற்றித் துதித்தார்கள்.

யாருமே வராமல் ஒற்றைதீபம் மிளிர உட்கார்ந்து கொண்டிருந்த ஆயிரம்கண்ணி விதவிதமான உடைகள், விதவிதமான பூக்களால் அலங்கரிக்கப்பட்டு பல அற்புதமான விழாக்கள் கொண்டாடப்பட்டு இன்னும் கம்பீரமானாள்.

அந்தக் கோயிலின் வலது சாலையில் பல அடுக்கு மாடி வீடுகள் கட்டப்பட்டன. அடுத்தடுத்த தெருவிலும் அடுக்குமாடி வீடுகள் கிளர்ந்தெழுந்தன.

பஸ் நிறுத்தத்தில் மாலை வேளையில் பஸ் நிற்கும்போது அதிலிருந்து இருபது, இருபத்தைந்து பேர்கள் கீழே இறங்குவார்கள்.

ஒரேயொரு கார் மட்டும் போகின்ற அந்தக் குறுகலான

பாதையில் ஆண்களும், பெண்களும் பேசிக்கொண்டு நடப்பார்கள். மாணவர்களும், மாணவிகளும் உரக்கக் கூவி பேசிக் கொண்டும், பாடிக்கொண்டும் போவார்கள். அந்தத் தெரு எல்லா நேரமும் உயிர்ப்போடு இருந்தது. வாசலில் பெரிய கோலங்கள் போடப்பட்டிருந்தன. எல்லார் வீட்டிலும் சின்ன சின்னதாய் விசேஷங்கள் நடந்தன. கோவிலுக்கு அருகே வீடுகள் இருந்ததால் பக்தி மணம் கூடவே கமழ்ந்தது.

"சத்யமூர்த்தி என்கிற சத்யாவாம். ஆயிரம்கண்ணி தெருவாம்."

"என்னடி இது. நம்ம தெருலேர்ந்தே என் பொண்ணுக்கு எவனோ ஜாதகம் அனுப்பியிருக்கானே. யாரது.. சத்யா. டொண்டி செவன். பனாலால் பிளாஸா. ஹ... அந்த நீல நிற அடுக்கு மாடி."

அவர்கள் அந்த ஜாதகத்தை பொருத்திப் பார்த்தார்கள்.

"எம். சி. ஏ. டாடா கன்சல்டன்ஸி. பதினெட்டாயிரம் ரூபா சம்பளம். யாரு சத்யா. எனக்கு தெரியலையே."

"அப்படித்தான் இருக்கணும். வரதும் தெரியாத, போறதும் தெரியாத படிப்பு மட்டுமே முக்கியம்னு இருக்கற பையனா இருப்பான். ரெண்டாங்கெட்டானா இருந்தா எல்லாருக்கும் தெரிஞ்சுருக்கும்."

"வேற யாருன்னு விசாரிப்பா."

காமாட்சி தைரியமாக அப்பாவிடம் சொன்னாள்.

"முதல்ல ஜாதகம் பொருந்தியிருக்கான்னு பார்ப்போம். அது சரியா இருந்தா மேற்கொண்டு விசாரிப்போம். சரியா."

அப்பா, பெண்ணுக்கு பதில் சொல்ல பெண் உடனே சரியென்று தலையாட்டினாள்.

அவர்கள் குடும்பம் அப்படிப்பட்டது. அங்குள்ள யாரும் உணர்ச்சி வசப்படுவதில்லை. இதுதான் வேண்டுமென்று கங்கணம் கட்டிக்கொண்டு முரட்டுத்தனமாய் எதுவும் பேசுவதில்லை. எதுவும் செய்வதில்லை. தனக்கு எது நல்லதோ அதை தன் தகப்பனார் தனக்கு செய்வார் என்ற நம்பிக்கை அந்தக் காமாட்சிக்கு இருந்தது. தான் என்ன சொல்கிறோமோ அதை தன் மகள் தட்டாமல் கேட்பாள் என்ற நம்பிக்கை காமாட்சியின் தகப்பனுக்கு இருந்தது. காமாட்சியின் அம்மா இன்னும் ஒருபடி அவர்களைவிட கெட்டிக்காரி.

"ஜாதகம் பொருந்தியிருக்கான்னு பாருங்கோ. வேண்டாங்கலை. அதே நேரத்துல பையன் நல்லவனா இருந்தால் ஏதாவது பண்ணி முடிச்சுடறது நல்லதில்லையா."

ஜாதகம் என்கிற காகிதத்தை நம்புவதைவிட நேரடியாய் ஒரு பிள்ளையின் மனசை தெரிந்து கொள்வது நல்லது என்று

அவள் நினைத்தாள்.

"சரி. எப்படித் தெரிஞ்சுப்ப."

"வேலைக்காரின்னு ஒருத்தி எதுக்கு இருக்கா. அதுவும் நம்ம வீட்ல, பன்னெண்டு வருஷம் வேலை செய்யறவோ. நமக்காக எது வேணாலும் பண்ணுவோ. நான் சுசீலாவ அனுப்பப் போறேன்."

சுசீலா அந்தக் குடும்பத்திற்கு வேலைக்காரியாய் போனபிறகு சோறு ஒரு பிரச்சினையாகவே இல்லை. அந்த அம்மாள் முதுகு ஒடிய வேலை வாங்குவாள். இதைத்துடை, அதைத்துடை. அதைப் பெருக்கு, இதைப்பெருக்கு என்று இடைவிடாது விரட்டுவாள். ஆனால், வீட்டிற்குப் போகும்போது "நீ சாப்பிட்டியாடி. ரெண்டு குழந்தேளுக்கும் என்ன எடுத்துண்டு போற. இந்தா இந்த ரசம் எடுத்துக்கோ. குழந்தேளுக்கு வேணும்னே கூடுதலா சர்க்கரைப் பொங்கல் வச்சேன் இதையும் எடுத்துக்கோ. உன் புருஷன் வேலைக்கு போயிண்டிருக்கானோன்னோ. போறும் ரெண்டு மூணு பசங்களோட நிறுத்திக்கோ. டாக்டர்கிட்ட போ. நீ காசு கொடுக்காத. நூத்தி அம்பது ரூபா நான் தரேன். நேரடியா டாக்டர்கிட்ட தரேன். குடும்பக்கட்டுப்பாடு பண்ணிக்கோ." பல்வேறு விதங்களில் ஆலோசனை சொன்னாள்.

"என் தம்பி ஒருத்தன் தண்ணி விக்கறான்டி. அவன்கிட்ட உன் புருஷனைப்போய் வேலைக்குப் போகச்சொல்லு. உண்மையா உழைச்சா மடமடன்னு மேல வந்துடலாம்."

மினரல் வாட்டர் விற்கின்ற தம்பிக்கு ஒரு உண்மையான ஊழியன் தேவைப்பட்டது. இரண்டு பேரையும் கோர்த்து விட அவர்கள் இரண்டு பேருமே ஒருவரையொருவர் பற்றிக் கொண்டு பலம் பெற்றார்கள்.

சுசீலாவிடம் ஒன்பது பவுன் நகைகள் இருந்தன. அந்தம்மாள் உடுத்திய கல்லுகல்லான நல்ல புடவைகள் இருந்தன.

"அவ்ளோதானே. யாரு சத்யமூர்த்தின்னு விசாரிச்சுட்டு வரணும். அதை என்கிட்ட விடு. மொத்தமும் புட்டு எடுத்துட்டு வந்துடறேன்."

"என் பேர் சொல்லக்கூடாது."

"என் பேரே வெளிய தெரியாது. அப்புறம்தானே உன் பேர்."

சுசீலா புடவை கொசுவத்தை நீவிக்கொண்டு அந்த சத்யா வீ[illegible]ட்டதனை நோக்கிப் போனாள்.

சத்யாவுக்கு போஸ்ட்பாக்ஸ் நம்பர்தான் தெரியும். நம்ம வீட்டுக்கு அவருடைய ஜாதகம் வந்திருக்குன்னு தெரியாது. அதனால நம்ம வீட்டைப்பத்தி பேசினாலும் ஒண்ணும் தப்பாகாது."

போஸ்ட் பாக்ஸ் என்றால் என்ன என்பதை சுசீலாவிற்கு காமாட்சியின் அம்மா விளக்கி கற்றுக் கொடுத்தாள். சுசீலா ஆயிரம்கண்ணியின் கோயிலுக்குப் போய் ஒருமுறை சுற்றிவிட்டு, விழுந்து நமஸ்கரித்துவிட்டு அதைத் தாண்டியிருக்கின்ற குடியிருப்புக்குப் போனாள்.

அட... நம்ம மர்கதம் வேலை செய்யற வீடு என்று தெரிந்து கொண்டாள்.

வீட்டு வாசலுக்குப் போய் "மரகதம் இருக்குதாம்மா.." என்று கேட்டாள்.

அந்நேரம் மரகதம் இருக்கமாட்டாள் என்று அவளுக்கு நன்கு தெரியும்.

"இல்லையே. கார்த்தால வந்தா போயிட்டா."

"சாயந்தரம் வரமாட்டாளாம்மா."

"அவ எப்படி ஒருவேளைதானே வரா. சாயந்தரம் ஒண்ணும் பெரிய வேலை இல்லையே. துணி தேய்க்கறதுக்கும், வீடு பெருக்கறதுக்கும்தான் நான் வச்சுண்டிருக்கேன். சாயந்தரத்துக்கு உண்டான பாத்திரங்களை நானே அலம்பிக்கறேன். கார்த்தால வந்து கொஞ்சம் பத்து பாத்திரமெல்லாம் தேய்ச்சு தருவா. அதனால எனக்கொண்ணும் சாயந்தரத்துல வேலை இல்லை."

"அப்புறம் ஏன் இங்க என்னை வரச்சொல்லுச்சு."

"தெரியலையே."

அவள் அலுப்போடு சுவற்றில் சாய்ந்து கொண்டாள்.

"நீ யாரு."

"நான் சுசீலாம்மா. அந்தப் பக்கத்துல வேலை செய்யறேன்."

"எவ்ளோ சம்பளம் கொடுக்கறாங்க உனக்கு."

அந்த அம்மாள் ஆவலோடு விசாரித்தாள்.

"சம்பளம் ஒண்ணும் பெருசா இல்லைம்மா. சாப்பாடு கொடுத்துருவாங்க. தினமும் மூணு சப்பாத்தி போட்ருவாங்க. எனக்குன்னு கூட குருமாவோ, குழம்போ, ரசமோ கொடுப்பாங்க. மோர்மிளகாய், அப்பளம் அத்தனையும் கொடுப்பாங்க. நமக்கு சாப்பாடுதானே முக்கியம்னு அங்கேயே ஒட்டிகிட்டிருக்கேன்."

"வேலை நிறைய இருக்குமா."

"காலையில உள்ளுக்குள்ள போய் அடைஞ்சேன்னாக்க மூணு மணி நேரம் வெளிய வரவே முடியாது. தினம் எல்லா மேஜையும் துடைக்கணும். தினம் வீடு மெழுகணும். தினம் தூசு தட்டணும்னு சொல்லுவாங்க."

"மறுபடியும் கேட்கறேன் நல்ல சம்பளமா."

"கொடுக்கறாங்கம்மா. இருநூறு ரூபா."

"இருநூறு ரூபாயா."
"சோறு போட்டு இருநூறு ரூபா."
"நீங்க எவ்ளோம்மா தறீங்க."
பேச்சு வளர்ந்தது.
"அதுவா, அது என் பிள்ளை. நாலு வாரம் முன்னாடி அவன் போட்டோ குமுதத்துல வந்திருந்ததே."
அவள் குமுதத்தைக் காட்டினாள்.
'நன்கு உழைப்பவளுக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது' என்று அவன் பேட்டியளித்திருந்தான். அவன் வெளிநாடு போக ஆசைப்படுவது பற்றியும் அவள் தெரிந்து கொண்டாள். அந்த வீட்டிலுள்ள மற்றோர்கள் பற்றிய விவரங்களையும் சேகரித்துக் கொண்டாள். அந்த வீடு எப்படி இருக்கிறது என்று பார்த்துக்கொண்டாள். இங்கே வந்து காமாட்சியின் அப்பாவிடமும், மாமாவிடமும் விளக்கிச் சொன்னாள்.
"கமலஹாசன் அட்டைப்படம் போட்ட குமுதமா. ஐய்.. நம்ம வீட்ல இருக்கே."
காமாட்சி உள்ளுக்குள் தாவிப் போனாள். அறையைப் புரட்டிப் போட்டாள். அந்தக் குமுதத்தை எடுத்தாள்.
சத்யா ஒரு பக்கம் முழுவதும் அடைத்துக்கொண்டு கம்பீரமாக நின்று கொண்டிருந்தான். அந்தக் கட்டுரையை அந்த வீடு முழுவதும் படித்தது.
"என்ன ஜாதகம் பார்க்கறேள். முடிச்சுடுங்கோ அந்த இடத்தை. இவ சொல்றதப் பார்த்தா நன்னாயிருக்கே. ஒரு தம்பி, ஒரு தங்கை, ஒரு அண்ணா, அண்ணாவுக்கு கல்யாணம் ஆயிடுத்து."
"ஜாதகம் பார்த்துடுங்கோ."
அப்பா விடாப்பிடியாக முரண்டு பிடித்தார்.
"ஜாதகம் பொருந்தலேன்னாக்க மனசு சங்கடப்படும்."
"அது பொருந்தினாத்தான் மத்த விஷயங்கள் பொருந்தும். ஜாதகத்தைப்பத்தி உனக்கு தெரியாது."
"ஆயிரம் கண்ணிகிட்ட பூ போட்டு பார்த்துடுவோம்."
"அதை நீ பாரு. எனக்கு ஜாதகம் பார்த்தே ஆகணும்."
"உடனே எடுத்துண்டு ஓடாதீங்கோ. இன்னும் அந்தப் பையனை விசாரிப்போம்."
அம்மா எதனாலேயோ அப்பாவிடம் கைகூப்பிக் கேட்டுக் கொண்டாள். அப்பாவுக்கு அம்மாவின் பிடிவாதம் ஆச்சரியமாக இருந்தது.
"என்னன்னு நினைச்சுண்டு ஜாதகம் வேண்டாம்னு சொல்ற."
"முதன்முதல்ல குழந்தைக்காக விளம்பரம் பண்ணோம். எடுத்தவுடனே முதல்ல வர ஜாதகமே ரொம்ப நல்ல ஜாதகமா

இருக்கு."

"அதை விடும்மா நீ. நான் வந்து மேல விழுந்து கல்யாணம் பண்ண சொல்லலை. ஆயிரம்கண்ணிகிட்ட பூ போட்டு சிகப்புப்பூ, வெள்ளைப்பூ வச்சு என்ன பண்ணட்டும் அப்படின்னு கேட்போம். சிகப்புப்பூ வந்ததுன்னா கல்யாணம். வெள்ளைப்பூ வந்ததுன்னா வேண்டாம்."

"அவ்ளோதானே. மறுபடியும் சொல்றேன் அது உன் இஷ்டம். ஜாதகத்துல பத்துக்கு எட்டுப் பொருத்தமாவது இருக்கணும். ஏழு இருந்தாக்கூட சரின்னு சொல்வேன். யோனிப்பொருத்தம் இல்லைன்னா கல்யாணம் பண்ணமாட்டேன்."

"இதெல்லாம் எனக்குத் தெரியாதுன்னா."

"எனக்குத் தெரியும். அதனால சொல்றேன்."

அப்பா வேகமாகப் பேசினார்.

காமாட்சி, அப்பாவையும் அம்மாவையும் பார்த்துக் கொண்டிருந்தாள்.

சுசீலாவிடம் "எனக்கு அவரை நேரா பார்க்கணும்போல இருக்கு. ஹெல்ப் பண்ணு சுசீலா."

கெஞ்சி கேட்டுக்கொண்டாள்.

"நிச்சயமா பண்றேன். எனக்கொரு நூறுரூபாய் கொடேன்."

சுசீலா கை நீட்டினாள்.

அவள் வீட்டுக்குள் ஓடி பர்ஸ் பிரித்து நூறு ரூபாய் எடுத்து சுசீலாவின் கைகளில் அழுத்தினாள். சுசீலாவும், அவளும் தெருவிலுள்ள எல்லாக்கடைகளுக்கும் ஏதோ வாங்குவதற்காக ஏறி இறங்கினார்கள்.

"இதோ பார். அவங்க அம்மா போறாங்க பார்."

சுசீலா சொல்ல, அவள் நிதானமாக மிக அழகாக வேறு எதையோ பார்ப்பது போல் பார்த்தாள். அந்தப் பெண்மணியின் கம்பீரமான நடை அவளுக்கு சந்தோஷத்தையும், பயத்தையும் ஒரு சேரக்கொடுத்தன.

"அடேங்கப்பா.. அம்மாவே இவ்வளவு டக்கரா இருக்கான்னா, பையன் இன்னும் நன்னாயிருப்பான் இல்ல."

"போட்டோல தெள்ளத்தெளிவா தெரியலை. நேரா பார்த்தாதான் மனசு ஆறும்."

"அவர் அம்மா ஜாடையா, அப்பா ஜாடையா."

"அது யாருக்குத் தெரியும். நீதான் போட்டோ பார்த்தியே."

"ரெண்டும் கலந்தாப்போல இருக்குன்னு நினைக்கறேன்."

"ஆமாம். கலந்தாப்போலதான் இருக்கு."

சுசீலா பதில் சொன்னாள்.

அவர்கள் இப்பொழுது அவன் வீட்டிற்கு எதிரே உள்ள கடையில் அரிசி விலை, பருப்புவிலை, ஹார்லிக்ஸ் விலை

என்றெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

அவன் மோட்டார் சைக்கிளில் போவதை சுசீலா கவனித்து அவளை கூப்பிடுவதற்குள் அவன் கடந்து விட்டான்.

அவன் ஆயிரம்கண்ணி கோவிலுக்கு நேரேபோய் வண்டியை நிறுத்துவதை தொலைவிலிருந்து பார்த்தார்கள். அருகே போவதா. வேண்டாமா என்று தயங்கினார்கள்.

கோயிலுக்கு அருகேயுள்ள பூக்கடையில் போய் நின்றார்கள்.

"போய் பார்க்கலாம் வரியா."

சுசீலா பரபரத்தாள்.

"இல்லை."

"ஏன்."

"ஒருவேளை அவர் என்னைப் பார்த்துட்டா நல்லாயிருக்காது. நான் அவரை கவனிச்சுகிட்டிருக்கறதே தெரியக்கூடாது. என் முகத்தை அவர் பார்க்கவேகூடாது."

"என்ன பண்ணலாம்னு சொல்ற."

"இங்க எங்கேயாவது ஒளிஞ்சிருந்து பார்க்கணும். எங்க ஒளிஞ்சுக்க முடியும்."

அந்தக் கடையில் பூ மட்டுமில்லாது விளக்குகளும், பால் பாக்கெட்டும், கற்பூரமும், தொட்டில் பொம்மையும் வைத்திருந்தார்கள். அருகே உள்ள இடத்தை செருப்புக்கு ஏலம் எடுத்து பாதுகாப்புச் செய்திருந்தார்கள். கடையை நடத்தி வந்த பெண்மணி அவளைப் பார்த்து ஸ்நேகமாகச் சிரித்தாள்.

"பேர் காமாட்சிதானே."

"ஆமாம். உனக்கு எப்படித்தெரியும்."

"என்னை மறந்துட்டியா" என்று கேட்டாள்.

"ஞாபகம் இல்லையே."

"நம்ம ரெண்டு பேரும் சில்ரன்கார்டன்ல படிச்சோமே. நாலாவது, அஞ்சாவது, ஆறாவது.."

"ஆமாம்.. உன் பேர்."

"மகேஸ்வரி."

"ஆங்.. தெரியும். நாலாவது ரோ. மூணாவது ஸீட், இல்லை."

"ஆமாம்."

"நாலாவதுல என்னமோ மொட்டை போட்டுட்டு வந்து பசங்கெல்லாம் கேலி பண்ணாங்க இல்ல."

"எல்லாம் ஞாபகம் வச்சுருக்கியே. அதுக்கப்புறம் மூணு தடவை மொட்டை போட்டேன்."

"அதான் முடி ஜம்முனு இருக்கு உனக்கு."

சட்டென்று காமாட்சி, மகேஸ்வரியை பாராட்டினாள்.

"ஏன் ஒரு மாதிரி ஆயிட்ட." என்று கேட்டாள்.

"கல்யாணம் ஆயிடுச்சு இல்ல. ரெண்டு பெத்துட்டேன் இல்ல."

"ஏய்.. கல்யாணம் ஆகி ரெண்டு குழந்தையா உனக்கு."

"ஆமா.. நீங்களெல்லாம் காலேஜீக்கு போயிட்டீங்க. நான் கல்யாணம் பண்ணி மாமியார் வீட்டுக்கு போயிட்டேன். பதினேழு வயசுலயே கல்யாணம் பண்ணிட்டாங்களே. டென்த் பாஸ் பண்ணேன். தாலி ஏறிடுச்சு."

"இது உன் கடையா."

"ஆமாம். நாங்கதான் ஏலத்துல எடுத்திருக்கோம்."

"அது சரி. ஒரு சின்ன ஹெல்ப் பண்ணணும்."

"என்ன.."

"அந்த ரூமுக்குள்ள நான் கொஞ்சம் ஒளிஞ்சுக்கவா."

"எதுக்கு."

"இங்க ஒருத்தர் வருவாரு. அவர்கிட்ட நின்னு நீ பேச்சு கொடுத்தா நான் பார்க்க வசதியா இருக்கும்."

"லவ் பண்றியா."

"இல்லை. அவங்க எங்க வீட்டுக்கு ஜாதகம் அனுப்பியிருக்காங்க. அவர் யாரு எப்படின்னு ஒருதடவை பார்த்துட்டாக்க எங்க வீட்ல பேச்சு எடுக்கறபோது நான் வேணும், வேணாம்னு சொல்லிடுவேன்."

"எனக்கு யார்னு தெரியலையே."

"சுசீலா நின்னு அடையாளம் காட்டுவோ."

"இதோ இந்த மோட்டார் சைக்கிள்ல போனாரே.. இவரா. இவரு சத்யா."

"உனக்குத் தெரியுமா."

"நல்லா தெரியுமே. அவங்கம்மா தினம் பால்கவர், பூ வாங்குவாங்களே. அவங்கம்மா வர முடியாதபோது இது வாங்கிட்டு போகுமே. கல்யாணம் கட்டப்போறியா."

"தெரியலை மகேஸ்வரி. ஆனா, அந்தப் பேச்சு வரதுக்கு முன்னாடி என் மனசுக்கு பிடிச்சுருக்கான்னு பார்க்கணும். ஒரு தடவை பார்த்துட்டா போதும். மனசு சொல்லிடும் இவர் வேணுமா, வேணாமான்னு."

"எனக்குப் புரியுது. வா, உள்ள வந்து உட்கார்ந்துக்க."

அவள் தான் வைத்திருந்த ஸ்டூலை எடுத்து ஒரு கதவுக்குப் பின்னே போட்டாள். அந்தக்கதவை லேசாகச் சார்த்தினாள்.

அவன் வெளியே வந்தான். கோபுரம் பார்த்து வணங்கினான். மோட்டார் சைக்கிளில் ஏற முற்படும்போது மகேஸ்வரி அவனை கையசைத்து கூப்பிட்டாள்.

அவன் அருகே வந்தான்.

"என்னா பாலும் வாங்கலை. பூவும் வாங்கலை. தடுக்குனு

உள்ள போயிட்டீங்க."

"காலையில அம்மா வாங்கியிருப்பாங்களே."

"வாங்கின மாதிரி தெரியலையே. அதான் உங்களை கூப்பிட்டு கேட்கறேன்."

"அப்படியா. அம்மா வாங்கிட்டாங்கன்னு நினைச்சுதான் நான் வாங்காம போனேன்."

அவன் பதினைந்து ரூபாய் காசு கொடுத்தான். பூவும் பாக்கெட் பாலும் கொடுக்கப்பட்டன. பாக்கெட் பாலை எடுத்துக் கொண்டு மறுபடியும் உள்ளே போனான்.

"என்ன.. பார்த்துட்டியா."

"இருக்கட்டும். மறுபடியும் வரட்டும். இன்னொரு தடவை பார்த்துக்கறேன்."

ரூமுக்குள்ளிருந்து காமாட்சி பரபரத்தாள். சுசீலா வாய்விட்டுச் சிரித்தாள். மகேஸ்வரிக்கும் சிரிப்பாக இருந்தது. அதேசமயம் இப்படி உதவி செய்வது பெருமையாக இருந்தது.

ஆடுபோல் இழுத்துக்கொண்டு போய் யாரையோ தாலி கட்டச்சொல்லி பிறகு அவன்தான் கணவன் என்று அவளுக்குச் சொன்னார்கள். ஆனால், இது வித்தியாசமாக இருக்கிறது. இதுவும் கல்யாணம்தான். ஆனால், கல்யாணத்திற்கு முன்னால் தனக்கு வேண்டும், வேண்டாம் என்று ஒளிந்திருந்து ஒரு சுயம்வரம் இந்தப் பெண் செய்கிறாள். எல்லாம் ஆயிரம்கண்ணியின் அருள்.

மகேஸ்வரியின் முகம் சந்தோஷத்தில் மலர்ந்தது. ஒரு நல்ல உதவியை, ஒரு நல்ல பெண்ணுக்குச் செய்கிறோம். தன்னுடைய பழைய தோழிக்குச் செய்கிறோம் என்று சந்தோஷம் ஏற்பட்டது.

கோயிலின் பின்புறம் இருந்த நாகர் சன்னதியில் பால் பிரித்து ஊற்றிவிட்டு பூவை நாகர் மீது போட்டுவிட்டு அவன் வலம் வந்தான். குழாயில் கை அலம்பிக் கொண்டான். மெல்ல நாகரை நோக்கி கை கூப்பினான்.

'எனக்கு நல்ல இடத்துல நல்ல பொண்ணாப் பார்த்து கல்யாணம் பண்ணிக்கொடு. அம்மா பொண்ணு பார்க்கறா. அம்மா சாதாரண மனுஷி. நீ எல்லாம் தெரிஞ்சவோ. இந்தக் கோவிலின் உண்மையான சக்தி இங்க இருக்குன்னு சொல்றாங்க. அம்மா அடிக்கடி சொல்வோ. நீ எல்லா உதவியும் செய்யற தெய்வம்னு சொல்வோ. நீ பேசறவோன்னு சொல்வோ. என்கூடப் பேசேன். எனக்கு நல்ல பொண்ணா கல்யாணம் பண்ணி வைக்கறயா.'

சற்றுத் தொலைவில் நின்று கைகூப்பினான்.

ஒரு பத்து வயதுப்பெண் ஓடிவந்தாள். குனிந்து அந்த நாகரை வணங்கினாள்.

'ஹை.. முல்லைப்பூ' என்று உரக்கக் கத்தினாள். இரண்டு பக்கமும் சுற்றிமுற்றிப் பார்த்தாள். சட்டென்று அந்த முல்லைப்பூவை எடுத்து சுருட்டி கைக்குள் வைத்துக் கொண்டாள். அவனுக்கு லேசாக தூக்கி வாரிப்போட்டது. ஏய்.. திருடுகிறாயா என்ற குரல் தொண்டைவரை வந்தது. சிரமப்பட்டு அடக்கிக் கொண்டான். அந்தப் பெண் மிரட்சியோடு அவனைப் பார்த்தது.

"இந்தப்பூவை எடுத்துக்கலாங்களா" என்று அவன் அனுமதியை திடீரென்று கேட்டது. அவன் மெல்லச் சிரித்தான்.

"உனக்குத்தான். எடுத்துக்கோ." என்று இனிமையோடு சொன்னான்.

அந்தப் பெண்குழந்தை சந்தோஷமாக அந்தப்பூவை முகர்ந்து பார்த்து தலையில் வைத்துக் கொண்டது. துள்ளி ஓடி மறைந்தது.

வெறும் பால்மட்டும் வடிகின்ற நாகத்தைப் பார்த்து கைகூப்பினான்.

அந்தப்பூவை நீ எடுத்துகிட்டியா. உனக்கு அந்தப்பூ பிடிச்சுருக்கா. உனக்கு பிடிச்ச பூவை தினம் நான் போடறேன். எனக்கொரு நல்ல மனைவியை கொடு.

மறுபடியும் வேண்டிக் கொண்டான். திரும்பினான். செருப்பை அணிந்து கொண்டான்.

நாலடி தூரத்தில் அவன் செருப்பு அணிவதை கதவோர சந்தில் இருந்தபடி காமாட்சி பார்த்தாள்.

பெரிய கண்கள். கூர்மையான நாசி. பரட்டைத்தலை. மழுமழு ஷேவ் செய்த முகம். வாலிபப் பையன்போல் இல்லாது அலுவலக அதிகாரிபோல் இருந்தான்.

"சத்யா, உங்கம்மா பால் வாங்கிண்டு போயிட்டாங்களேம்பா. நான் தெரியாத சொல்லிட்டேன்."

மகேஸ்வரி மன்னிப்பு கேட்பதுபோல் பேசினாள்.

"அதனால என்ன. அம்மனுக்குதானே தரோம். நான் கொடுத்தேன். சந்தோஷமா ஆத்தா வாங்கிகிட்டா." என்று முகம் நிறைய சிரிப்போடு சொன்னான்.

"ஏதோ ஃபாரின் போறதா சொன்னாங்க."

"இல்லையே. நான் இங்கதான் இருக்கேன்."

"ஃபாரின் போகப்போறியா."

"வேலை கிடைச்சா போகலாம்."

"நீ நிச்சயமா ஃபாரின் போவ. ஆத்தா என்னமோ என்னை சொல்ல சொல்லுது."

"ரொம்ப தேங்க்ஸ் மகேஸ்வரி. வரட்டுமா."

அவன் மெல்ல நடந்து மோட்டார் சைக்கிள் ஏறி சுழன்று திரும்பி மறுபடியும் மகேஸ்வரியைப் பார்த்து புன்னகை

செய்துவிட்டு தாண்டிப் போனான்.

அவளுக்குள் ஏதோ ஒரு நிம்மதி பூத்துக் குலுங்கியது.

அவன் போனதும் காமாட்சி எழுந்து வந்தாள்.

அவள் உடம்பு முழுவதும் காற்றில்லாத அந்த அறைய வியர்த்திருந்தது. முகம் முழுவதும் வியர்வை பூத்திருந்தது

"யப்பா.. எப்படி குளிச்சாப்போல இருக்கு பாரேன்."

கண் சிமிட்டினாள்.

"என்னா உனக்கு பிடிச்சுருக்கா" என்று கேட்க காமாட் வெட்கத்தோடு சரி என்று தலையசைத்தாள்.

சுசீலாவும், அவளும் வீடு நோக்கி வந்தார்கள்.

"அம்மா. நான் அந்த சத்யாவை பார்த்தேன். டக்க இருக்காம்மா" என்று வெட்கமின்றி அம்மாவிடம் சொல் அம்மாவும், பெண்ணும் கிசுகிசு என்று பேசிக் கொண்டார்க

"என்னமோ தோன்றதுடி.. இது சரியா வரும் சொல்லிட்டு. உங்கப்பா ஜாதகம் பார்த் சொதப்பிடுவாரோன்னு பயமா இருக்கு."

"நீ ஏன் ரெண்டு நாள் டைம் கேட்ட."

"அதுக்குள்ள ஆயிரம்கண்ணிகிட்ட போய் பூ போட்டு பார்த்துடலாமேன்னு."

"அதுக்கு ரெண்டு நாள் டைம் என்னம்மா. இப்ப போயேன்."

"நீயும் வறியா."

"இல்லைப்பா. எனக்கு பயமா இருக்கு. நீ வந்து எனக் ரிசல்ட் சொல்லு."

காமாட்சியின் அம்மா இறங்கிப் போனாள். சுசீலா வீ பெருக்கத்துவங்க காமாட்சி மேல்மாடிக்குப் போனா மேல்மாடியிலிருந்து சத்யாவின் வீடு எங்கிருக்கிறது என் பார்த்தாள்.

அதோ, அந்தக் கட்டிடம்தான். அந்தக் கட்டிடத்தின் முத மாடிதான். இங்கிருந்து பார்க்கும்போது இரண்டாவ மூன்றாவது மாடி தெரிகிறது. முதல்மாடி தெரியவில்லை.

அந்த வீட்டை ஒரு மெல்லிய காதலும் காமமும் கலந் கிறக்கத்தோடு பார்த்துக் கொண்டிருந்தபோது சட்டென் மூளையின் இன்னொரு பகுதி விழிப்படைந்தது.

என்ன இது. என்ன பேசிக் கொள்கிறாய். என்னவிதம் நடந்து கொள்கிறாய். என்ன ஆயிற்று உனக்கு. சத்யா ய புருஷனா, காதலனா. என்ன திடீரென்று வீடு பார்த்து ஏக் பெருமூச்சு விடுகிறாய். நீ யாரை திருமணம் செய்து கொள் வேண்டுமென்று தீர்மானிப்பது உன் பெற்றோ அவர்களுக்குத் தெரியும். பத்தாம் வகுப்பு பள்ளிக்கூட பெண்போல ஏன் கிறங்கித் தவிக்கிறாய்.

திருமணம் என்பது ஆயிரம் காலத்துப் பயிர். ஆயிரம் காலத்துப் பயிர் என்றால் என்ன விஷயம் தெரியுமா. தலைமுறை.. தலைமுறை.. தலைமுறையாக விதை நெல்லிலிருந்து விதை நெல், விதை நெல்லிலிருந்து நெல் என்று பல நூறு தலைமுறைகள். ஒரு தானியம் வளர்வதைப் போல ஒரு சமூகத்தின் பழக்க வழக்கங்கள் வளர்கின்றன. சமூக பழக்க வழக்கத்தின் மிக முக்கியமான எடுத்துக்காட்டு திருமணம். திருமணத்தின் நடைமுறை.. கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்று அங்கு நடந்து விடமுடியாது. இதோ இன்று காலையிலே உள்ளங்கையில் சோறு வைத்து குழம்பு ஊற்றி சாப்பிட்டாயே அந்த சோற்றுக்கு, அந்த அரிசிக்கு ஆரம்பம் எது. யார் எப்படி எங்கு முளைத்த தானியம் அது. அதன் முதல் வித்து என்ன. மூன்றாவது வித்து என்ன. முப்பதாவது வித்து என்ன. முன்னூறாவது வித்து என்ன. உன் கையில் இருப்பது எத்தனையாவது வித்து. அதேபோல நீ யாருடைய மகள். எந்தப் பரம்பரை. உன் மூதாதையர் யார். அவர் ஒழுக்கம் என்ன. பழக்கம் என்ன. இப்படிப் பல்வேறு விஷயங்கள் கலந்தது உன் வாழ்க்கை.

இத்தனை நாள் எத்தனையோ மனிதர்கள் எதிரே ஆட்டம் போட்ட பிறகும் மௌனமாய் இருந்தாய். இன்று என்னாயிற்று. யாரையும் நம்பாதே. எளிதில் நம்பாதே. குறிப்பாய் ஆண்களை நம்பவே நம்பாதே. உயரமும், அகலமுமாய் இருக்கிற எத்தனையோ ஆண்கள் உன்னைச் சுற்றிச்சுற்றி வந்தபோது சாதாரணமாக இருந்தாய். இப்பொழுதென்ன ஆகிவிட்டது. அமைதி.. அமைதி.. அமைதி. உனக்கென்று உண்டானது உனக்கே கிடைக்கும். கவலை வேண்டாம். எங்கேனும் பல் இளித்து இழிவுபட்டு நிற்காதே.

அவள் மனம் அவளை எச்சரித்தது. அவள் சட்டென்று துள்ளுகின்ற மனதை அடக்கி தன் புத்தியை நிமிர்த்தினாள்.

ஆனாலும், மனதின் ஒரு ஓரம் சத்யா.. சத்யா.. என்ற ஒரு மெல்லிய குயில் கூவல் ஓடிக் கொண்டுதான் இருந்தது.

"அந்தப் புள்ளைய பத்தி மகேஸ்வரிகிட்ட சுசீலா விசாரிச்சாளாம். மகேஸ்வரி இந்த மாதிரி விசாரிச்சாங்கன்னு சொல்லி செண்பகத்துகிட்ட சொன்னாங்களாம். செண்பகம் கஸ்தூரிகிட்ட சொல்ல கஸ்தூரி எனக்கு சொல்லிச்சு."

அவர்கள் எல்லோரும் வீட்டுவேலை செய்பவர்கள். மத்தியதர வர்க்கத்திலிருந்து சற்றுகீழே இருப்பவர்கள். அதிகம் படிப்பறிவில்லாத அதிகம் சுகபோகங்கள் இல்லாத சாதாரண மக்கள். ஆனால், உலகம்பற்றி அவர்களுக்கு மிகமிக நன்றாகத் தெரியும். மனிதர்கள்பற்றி அவர்கள் எடைபோட்டு இறக்கியிருந்தார்கள். வாழ்வது எப்படி என்று அவர்கள்

வாழ்விலிருந்து கற்றுக்கொண்டு மற்றவர்களுக்கும் கற்றுக் கொடுத்தார்கள். வீட்டுக்கு வீடு வாசப்படி. எல்லார் வீட்டிலும் குளியல் அறை என்று மனிதர்களின் தன்மையை தெரிந்தவர்கள்.

"அப்படியா. சத்யாபத்தியா விசாரிச்சாங்க. சொல்லு. எல்லார்கிட்டயும் சொல்லு. அதுமாதிரி தங்கமான ஒரு புள்ள கிடைக்கறது கஷ்டம்."

"அந்தம்மா எப்படி."

"எந்தம்மா."

"சத்யாவோட அம்மா."

"நல்ல பொம்பளைதான், கொஞ்சம் அடாவடியாய் பேசும். தடாலடியா நடந்துக்கும். பெரிய படிப்பு படிச்சுட்டு அப்பா சொல்றபடியே தாலிகட்டி பெருசா கல்யாணம் நடந்தது. மூணு பசங்க. ஒரு பொண்ணு. அது புருஷனுக்கே நல்ல சம்பாத்தியம். இப்போ ரெண்டு பசங்க வேற சம்பாதிக்க ஆரம்பிச்சுடுச்சு. எப்போ பார்த்தாலும் இங்கிலீஷ்லதான் பேசிகிட்டிருக்கும். ஐயருங்க வேற எப்படியிருப்பாங்க சொல்லேன். அப்படித்தான் அந்த அம்மாளும்."

"கல்யாணம் பண்ணலாமாங்கறதுக்காக கேட்டேன்."

"பண்ணலாம். நல்லா பண்ணலாம். நிறைய இடத்துக்கு போயிட்டு வந்துகிட்டிருக்காங்க. வீட்ல அந்தப் பேச்சுதான் எப்போவும்."

"இன்னும் செட் ஆகலையா."

"ஒண்ணு செட்டாகற மாதிரி இருந்தது. புள்ள வேணாம்னு சொல்லிட்டான்."

"ஏன்."

"அந்தப் பொண்ணு சுடிதார் போட்டுகிட்டு வந்துதாம்."

"ஏன். இப்போதான் எல்லாரும் போடறாங்களே. அது என்ன தப்பா."

"பொண்ண பார்க்க வரும்போதே சுடிதார் போடறாளே. கல்யாணத்துக்கு அப்புறம் பேண்ட்டை கழட்ட மாட்டேன்னு, மாறமாட்டேன்னு சொல்லிட்டா எனக்கு கஷ்டமாச்சே அப்படின்னு விட்டுட்டான்."

"அப்போ, அடக்க ஒடுக்கமா கேட்கறானா பொண்ண."

"பையன் ரொம்ப பக்திப்பா. அவனுக்கு வர பொண்ணும் பக்தியா இருக்கணும். பாட்டு பாடணும். கோலம் போடணும். பொங்கல் வைக்கணும்னு சொல்றான்."

"அதே நேரத்துல இங்கிலீஷும் படிச்சுருக்கணுமாக்கும்."

"ஆமாம். இங்கிலீஷ் படிச்சா பொங்கல் வைக்கக்கூடாதா. கோலம் போடக்கூடாதா. நல்லா இருக்கா நீ பேசறது."

"எனக்கு புரியுது."

"அப்படின்னா அந்த வீட்டுப் பொண்ணுதான் ரொம்ப கரெக்ட்."

"யாரது."

"காமாட்சின்னு பேர்."

ஒருவள் விவரித்தாள். மூன்றுபேர் சுற்றி நின்று கேட்டார்கள்.

அந்தப் பகுதியிலுள்ள மத்தியதர குடும்பத்தினர் ஒவ்வொருவருடைய அசைவும் அந்த வேலைக்கார பெண்களுக்கு தெரிந்தே இருந்தன. நல்லதையும் கெட்டதையும் அவர்கள் வேகமாகப் பரிமாறிக் கொண்டார்கள். அவர்கள் அறியாத ரகசியங்கள் அங்கு ஏதும் இல்லை.

மகேஸ்வரிக்கெல்லாம் காதலிக்கின்ற வாய்ப்பே வாழ்க்கையில் ஏற்படவில்லை. பதினேழு வயதில் நிச்சயம் செய்து, பதினெட்டு வயதில் திருமணமாகி, பத்தொன்பது வயதில் குழந்தை பெற்றுவிட்டாள்.

புருஷனுக்கு மாநகராட்சியில் மேஸ்திரி வேலை. சில சமயம் வருமானம் அதிகம் வந்தது. சில சமயம் சம்பளப்பணம் மட்டுமே வந்தது. இன்னும் நிரந்தரமாய் வாழ்க்கைத்தரம் உயர்வதற்கு உண்டான வழிமுறைகள் என்ன என்று அவள் யோசித்தபோது, இந்தக் கோவிலில் செருப்பு ஏலமும், கடை ஏலமும் எடுப்பதற்கு யோசனை வந்தது. லட்ச. ரூபாயில் ஆரம்பித்த அந்த ஏலம்... ஐநூறு, அறுநூறாக வளர்ந்து லட்சத்து பதினெட்டாயிரம் ரூபாயில் முடிந்தது. ஆரம்பத்தில் பயமாக இருந்தாலும் மகேஸ்வரி பதினாலு மணிநேரம் கடையில் நின்று காசு வசூலித்ததால் நல்ல லாபம் கிடைத்தது. கடை வைத்து கறாராகப் பேசினால் போதாது. இனிமையாக நடந்து கொண்டால்தான் இங்குள்ள மக்களுக்கு ஈடுபாடு வரும் என்பது புரிந்து, கடைமீது பிடிப்பு வரவேண்டும் என்று ஆசைப்பட்டு எல்லோரிடமும் சகஜமாகவும், வேகமாகவும் பேசினாள்.

"விளக்குத்தட்டு தொலைஞ்சு போச்சா. அவ்ளோதானே. இதுக்கு போய் ஏன் இவ்ளோ வருத்தப்படறீங்க. அது பழைய தட்டுதான். போனாப்போகுது போங்க. நான் வேற தட்டு வாங்கிக்கறேன். கொஞ்சம்கூட கூச்சப்படாத தினம் வந்து விளக்கு போடுங்க. அது உங்களுக்கும் நல்லது. உங்க குடும்பத்துக்கும் நல்லது."

பெரிய மனுஷிபோல பேசினாள்.

அந்த இனிமையான வார்த்தை அந்தப் பெண்மணியை நிரந்தர வாடிக்கையாளராக்கியது.

"அம்மா.. ஆடி மாசம்மா. பூ கொடுத்து பூ வாங்கிக்கோங்கம்மா. அம்மனுக்கு கொண்டுபோய் பூ

கொடுங்கம்மா. உள்ள வந்து கொடுக்கற பூவை வாங்கி தலையில வச்சுக்கோங்க. நல்லாயிருப்பீங்க."

அவளுக்கு வளமான குரல். ஒருவரை நோக்கி பேசினாலும் ஒன்பதுபேர் பத்துபேர் கேட்டார்கள். அதில் நான்குபேர் அல்லது ஐந்துபேர் அவள் குரலுக்கு மயங்கி பூ வாங்கினார்கள்.

"முழம் ரெண்டு ரூபான்னு பூ தரச்சொல்லு. உடனே துட்டு கேட்கக்கூடாது. மறுநாள் காலையிலதான் தருவேன்."

அதே சந்துகளில் இருக்கும் பெண்களிடம் அவள் பேரம்பேசி முழம் இரண்டு ரூபாய் என்று பந்து பந்தாக வாங்கி பத்து ரூபாய்க்கு மூன்று முழம் என்று கொடுத்தாள். சில சமயம் சில இடங்களில் இரண்டே முக்கால் முழம்தான் அளந்தாள். எண்ணெய் விளக்குகளும், கற்பூரமும் அமோகமாக விற்பனை ஆயின. ஆறு மாதத்திலேயே லட்சத்து பதினெட்டாயிரம் தொட்டு விட்டார்கள். இனி விற்பது அனைத்தும் லாபம்தான். ஆனால், அதை வெளியே காட்டிக்கொள்ளாமல் இருந்தார்கள். அடுத்த வருடமும் எப்படியாவது ஏலம் பிடித்துவிட வேண்டுமென்று கவனமாக இருந்தார்கள். அடுத்த வருடம் போட்டி அதிகம் இருக்குமென்று அவர்களுக்கு தெரிந்திருந்தது. அதற்காக கூடுதலாய் காசு சேர்த்து தயாராக இருக்கவும் மகேஸ்வரி திட்டமிட்டாள். எதிர்பாராத விதமாய் மாநகராட்சி மேஸ்திரியாக இருக்கும் அவளுடைய புருஷனுக்கும் மேல் வருமானங்கள் வந்தன. வெறும் மஞ்சள் கயிற்றில் திருமாங்கல்யத்தை கோர்த்துக்கொண்டிருந்த மகேஸ்வரிக்கு அவன் தடித்த தாலிச்சங்கிலியும், நான்கு கை வளையல்களும் கொடுத்தான். மேலும் காதுத்தோடும் அவள் காசு சேர்த்து போட்டுக்கொண்டாள்.

அவள் அங்கு பூக்காரியாகவே இல்லை. இரண்டு பையன்களை வைத்து வியாபாரம் செய்கின்ற முதலாளி அம்மாவாகவே இருந்தாள். ஆனால், கடையிலேயே இருந்தாள். காசிலேயே குறியாக இருந்தாள்.

அன்றைக்கு ஆவணி அவிட்டம். அந்தணர்கள் பூணூல் மாற்றும் நாள். ஆனால், மகேஸ்வரிக்கு அது தெரியவில்லை. அப்படியொரு பண்டிகை இருக்கிறதென்று தெரியும். ஆனால் அன்று இருக்கிறது என்று தெரியாது. நெற்றியில் சந்தனக்கீற்றும், இடுப்பில் பட்டுவேட்டியின் மேலே பட்டும் போர்த்தி புதிய பூணூலோடு சத்யா கோயிலுக்குள் நுழைந்தபோது அவளுக்கு தூக்கிவாரிப்போட்டது.

'என்னா இது, கல்யாணம் ஆயிடுச்சா. இல்ல, நிச்சய தார்த்தம் ஆகியிருக்கும். யாரு பொண்ணு, தெரியலையே.'

மனம் கேள்வி கேட்டுக்கொண்டது.

சத்யா அருகில் வந்தவுடன் "என்னா நிச்சயமாயிடுச்சா" என்று கேட்டாள்.

சத்யாவுக்குப் புரியவில்லை. ஏதோ சரியென்று தலையசைத்தான்.

"அதே பொண்ணுதானே" என்று கேட்க,

மறுபடியும் "என்ன கேட்கறீங்க" என்று கேட்டான்.

"கல்யாணம் நிச்சயமாயிடுச்சா."

"யாருக்கு."

"உங்களுக்கு."

"இல்லையே."

"ஆமான்னீங்க."

"என்னமோ கேட்டீங்க தலைய ஆட்டிட்டேன்."

"அப்போ அந்தப் பொண்ணோட இன்னும் நிச்சயம் ஆகலையா."

"எந்தப் பொண்ணோட."

"காமாட்சியோட."

"யார் காமாட்சி."

"உங்களுக்கு தெரியவே தெரியாதா."

"அவருக்கு என்னா தெரியும்."

பக்கத்திலிருந்து நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த வேலைக்காரி உரக்கச் சொன்னாள்.

"என்ன சொல்றீங்கன்னே எனக்குப் புரியலை."

"நீங்க ஏதோ கல்யாணத்துக்கு அப்ளிகேஷன் போட்டாப்போல."

"அப்ளிகேஷனா."

"அது என்னா சொல்றதுன்னே எனக்குத் தெரியலை."

"ஜாதகம் கொடுப்பாங்க."

"ஆமா, ஜாதகம் கொடுத்தாப்போல, காமாட்சி வீட்டுக்கு அது போயிட்டாப்போல, காமாட்சி வந்து நீங்க யாருன்னு கேட்டாப்போல, இங்க உட்கார்ந்து நீங்க போறதயும், வரதயும் வேடிக்கை பார்த்தாப்போல."

"யாரு காமாட்சி."

"அதோ அந்த பச்சை போர்டு போட்டிருக்குதே அந்த வீட்ல இருக்காங்க. செகண்ட் ஃப்ளோர்."

'இதே தெருவில் வீடா. ஆயிரம்கண்ணி.. ஆயிரம்கண்ணி.. எனக்கொரு நல்ல மனைவி வேண்டுமென்று கேட்டேன். உன் சன்னிதானத்திலிருந்தே உனக்கு சேவை செய்பவராகவே எனக்குத் தருகிறாயா. சந்தோஷம்.'

"பொண்ணு நல்லாயிருக்குமா."

"ஐயோ, தூக்கலாயிருக்கும்."

"தூக்கலாயிருக்கும்னா என்னான்னு தெரியலையே."

"உடம்பு, பார்வை, பேச்சு, அழகு எல்லாம் தூக்கலா இருக்கும்."

"இதோ பாருங்களேன். தூக்கல்னா என்ன. எனக்குப் புரியலை."

"எடுப்பா இருக்கும்னு அர்த்தம்."

"நான் கேட்கறேன். பொண்ணு அழகா இருக்குமா."

"எடுப்பா இருக்கும்னு சொல்றேன். அழகா இருக்குமான்னு கேட்கறீங்களே."

"எனக்கு இங்கதான் புரியலை."

"கட்டுமஸ்தா இருக்கும். கெட்டிக்காரத்தனமா பேசும். நல்லா சிரிக்கும். எல்லார்கிட்டேயும் சகஜமா பழகும்."

"கோயிலுக்கு வருமா."

"அடிக்கடி வரும்."

"கோலமெல்லாம் போடுமா."

"அது தெரியாது. கோலம் போடாத யார் இருக்காங்க. எல்லாருக்கும்தான் கோலம் போடத்தெரியும். ஆனா, இது அங்கப்பிரதட்சணம் பண்ணி பார்த்திருக்கேன்."

"எங்க."

"இங்க."

"கோயில்ல அங்கப்பிரதட்சணம் பண்றாங்களா."

"காலையில பண்ணுவாங்களே பார்த்ததில்லையா."

"நான் காலையில கோயிலுக்கு வந்ததே இல்லை. எப்போவும் சாயந்தரம்தான் வருவேன்."

"நான் வந்து ரெண்டு தடவை அங்கப்பிரதட்சணம் பண்ணியிருக்கேன்."

"எதனால."

"சும்மா நல்லபுருஷன் வேணும்னு பண்ணியிருக்கோம்."

மகேஸ்வரி உற்சாகத்தோடு பேசினாள்.

"அது இல்ல. அவங்க தங்கச்சிக்கு உடம்பு சரியில்லாம இருந்தது. பரிட்சை வந்துடுச்சு. அது பரிட்சை எழுத முடியாத போயிடுமோன்னு ஒரு பயம் வீட்ல எல்லாருக்கும். இல்ல, இல்ல, நான் அங்கப்பிரதட்சணம் பண்றேன்னு வேண்டிகிச்சு. மறுநாளே உடம்பு சரியாப்போயிடுச்சு. பரிட்சை எழுதி நல்லபடியா பாஸ் பண்ணிடுச்சு. அதனால இந்தப் பெரிய பொண்ணு அங்கப்பிரதட்சணம் பண்ணிடுச்சு."

அருகே இருக்கிற வேலைக்காரி விவரமாய்ச் சொல்ல. அவன் நெகிழ்ந்து போனான்.

"மேடம்.." என்று மகேஸ்வரியை அருகே கூப்பிட்டான்.

"என்ன."

மகேஸ்வரி பின்னடைந்தாள். அவளை மேடம் என்று முதன்முதலில் கூப்பிட்ட ஆண் சத்யாதான்.

"பொண்ண பார்க்கணுமே" என்று அடிக்குரலில் கேட்டான்.

"கூட்டிகிட்டு போயெல்லாம் காண்பிக்க முடியாது. தப்பாயிடும்."

"ஐயோ, நான் அப்படி காண்பிக்க சொல்லலை."

"சாயந்தரம் வரும்."

"சாயந்தரம் எத்தனை மணிக்கு வரும்."

"யாருக்கு தெரியும். இங்க வந்து உட்கார்ந்துகிட்டிருங்க. அது வரும்போது சொல்றேன். உள்ள போய் உட்கார்ந்துக்கோங்க. பார்த்து உங்களுக்கு பிடிச்சுருந்தா செய்துக்கோங்களேன்."

"இன்னிக்கு சாயந்தரம் வரட்டுமா."

"வாங்க. இருட்டின பிறகே வாங்க."

அவன் அந்திப்பொழுதில் வந்தான். இன்று காமாட்சி வருவாளா என்று அவர்களுக்குத் தெரியவில்லை. காமாட்சி வரவேண்டுமே என்று அவர்கள் நினைத்தார்கள். ஆயிரம் கண்ணியை வேண்டினார்கள்.

வெறுமே உட்கார்ந்து டி.வி. பார்த்துக் கொண்டிருந்த காமாட்சிக்கு கோவிலுக்கு போனால் என்ன என்று தோன்றியது.

"அம்மா நான் கோவிலுக்குப் போகப் போறேம்மா."

துள்ளி எழுந்தாள்.

"நானே சொல்லணும்னு நினைச்சேன். போயிட்டு வா. வெறுமனே போகாத. விளக்கு போட்டுட்டு வா. வாசல்ல இருக்கறவோ அந்த வனஸ்பதி விளக்குதான் விக்கறா. நீ அவகிட்ட அகலும், திரியும் வாங்கிக்கோ. நம்ம வீட்லேர்ந்து சின்ன பாட்டில்ல நல்லெண்ணெய் எடுத்துண்டு போ. தீப்பெட்டி எடுத்துண்டு போ. விளக்குலேர்ந்து விளக்கு ஏத்தாத. தீப்பெட்டி வச்சு ஏத்து."

"தூபஸ்டிக் எடுத்துக்கட்டுமா."

"எடுத்துக்கோயேன். வாசனையா இருக்கட்டுமே. ரெண்டா எடுத்துக்கோ."

அவள் எண்ணெய் பாட்டிலை கையில் எடுத்துக்கொண்டு போக விருப்பப்படாமல் ஒரு சின்ன பிளாஸ்டிக் கூடையில் வைத்துக் கொண்டாள்.

அவளுக்கு நாலாம் நம்பர். பிள்ளையார் பூஜை நல்லது என்று யாரோ எப்பொழுதோ சொல்லியிருந்தார்கள். ஆயிரம்கண்ணி வேப்பமரத்திற்கு அடியில் உட்கார்ந்து பிள்ளையார் ஸ்தோத்திரமான காரிய சித்திமாலையை படித்தால் என்ன என்று தோன்றியது.

நானா ஏதாவது கனவு காண்றதுக்கு பதிலா, என் வாழ்க்கை

எந்தக் கனவும் இல்லாமல் பளிச்சுனு நல்லபடியா இருக்கணும்.. அப்படின்னு நீ வரம் கொடு.

உள்ளே வேண்டிக்கொண்டு காரிய சித்திமாலையை கையில் வைத்துக்கொண்டாள்.

புடவையா, சுடிதாரா என்று யோசித்தாள்.

நைட்டியை கலைந்துவிட்டு புடவையை உடுத்திக் கொண்டாள். சுவாமி படத்திலிருந்து பூவை எடுத்து தலையில் வைத்துக் கொண்டாள். கண்ணாடி முன்பு நின்று தன் அழகு பார்த்துக் கொண்டாள். கல்யாணப் பொண்ணே வந்து சபைக்கு நமஸ்காரம் பண்ணிக்கோம்மா.

அவள் பார்த்த பலநூறு கல்யாணக்கூட்டக் குரல் ஞாபகம் வந்தது.

'பெரியவா எல்லாரும் கல்யாணப் பொண்ண ஆசிர்வாதம் பண்ணுங்கோ.'

மறுபடியும் அதே குரல் தொடர்ந்தது.

அவள் நகர்ந்து சமையல் அறைக்கு அருகே இருந்த பூஜை அறையை நோக்கி நமஸ்கரித்தாள். பூஜை அறையிலிருந்து அவள் தாயார் வெளிவர, அந்த நமஸ்காரம் அவள் தாயாருக்குப் போயிற்று.

"என்னடி... திடீர்னு என்னை நமஸ்காரம் பண்ற."

"பூஜை ரூமுக்கு பண்றேம்மா."

"சரி.. சரி.. சௌக்கியமா இரு."

அம்மா ஆசிர்வதித்தாள்.

குழந்தை நெகுநெகுவென்று வளர்ந்திருப்பது அவளுக்கு சந்தோஷத்தை கொடுத்தது.

'இவளுக்கு நல்லபடியா கல்யாணம் ஆகணும். ஆயிரம்கண்ணி நான் வரேன். உன் சன்னதிக்கு வந்து வேண்டிக்கறேன்.'

அவளுக்குள்ளும் பிரார்த்தனை ஓடிற்று.

அம்மாவை நமஸ்கரித்த கையோடு காமாட்சி, கோயில் நோக்கி நடந்தாள்.

"வருது.. வருது.. அந்தப் பொண்ணு வருது."

அகலும், திரியும் வாங்கி நகரும் பெண்ணை அவன் கதவுக்குப் பின்னாலிருந்து ஆச்சரியமாகப் பார்த்தான்.

'ப்பா.. செம ஃபிகர்' என்று முதல்வரி மனதில் ஓடியது.

'ரொம்ப அழகா இருக்காளே.'

பாராட்டத் தோன்றியது.

'முகத்துல ஒரு அமைதி இருக்கு. தெளிவு இருக்கு. நல்லாயிருக்கே இந்தப் பொண்ணு. மனசுக்கு ரம்மியமா இருக்காளே.'

அவன் படபடப்பாய் எழுந்து நின்றான்.

அவள் கடைவிட்டு நகர்ந்தாள். அவன் மந்திரித்துவிட்ட கோழிபோல அவளை பின் தொடர்ந்தான்.

மகேஸ்வரி சிரித்துக் கொண்டாள். வேலைக்காரியும் கண் சிமிட்டினாள்.

யாரோ பார்க்கிறார்கள் என்று காமாட்சிக்குத் தோன்றியது. ஆனால், ஒரு கோவிலில் பார்க்காமல் இருப்பார்களா. நிறைய பேர் பார்ப்பார்கள். அதற்கெல்லாம் தலையை திருப்பிக் கொண்டு யார் பார்ப்பது என்று தேடமுடியுமா. நாம் நம வேலையைச் செய்வோம்.

அவள் விளக்கேற்றி, பூ வாங்கிக்கொண்டு அந்தப் பூவையும் தலையில் சூடிக்கொண்டு ஒன்பது வரை வலம் வந்தாள். அவன், அவளைத் தாண்டிப் போனான். அவள் பின்பக்கம் போனான். அவளுக்கு முன்னே நடந்து போனான். விலகி நின்று அவள் தாண்டும்போது கவனித்தான்.

உள்ளுக்குள் அது சந்தோஷமாக இருந்தது.

'பக்கத்துல இதே தெருவுல ப்பா.. இவ்ளோ அழகான பொண்ணா. இத்தனை நாள் கவனிச்சதே இல்லையா. ஃபேமலி நன்னாயிருந்தா கல்யாணம் பண்ணிக்கலாம். ஆயிரம்கண்ணி.. ஆயிரம்கண்ணி.. இவதான் எனக்கு பொண்டாட்டியா. இவளை நான் கல்யாணம் பண்ணிக்கலாமா.'

• கணீரென்று மணி அடித்தது. சாயங்காலப் பூஜை துவங்கியது.

அவன் ஆண்கள் பக்கம் நிற்க, அவள் பெண்கள் பக்கம் நின்றாள். சட்டென்ற ஒரு அசைவில் அவன் நிற்பதைப் பார்த்துவிட்டாள். அவளுக்கு தூக்கிவாரிப்போட்டது. அவன் ஆயிரம்கண்ணியையே பார்த்துக் கொண்டிருந்தான். அவளுக்கு உடம்பு வியர்த்தது. கண்களில் லேசாய் கிறக்கம் ஏற்பட்டது.

'ஐயோ.. இவன் ஏதாவது பார்த்துட்டானா என்னை' உள்ளுக்குள் ஒரு பதைப்பு ஏற்பட்டது.

சத்யா தன் மனதை கருவறையிலேயே சிடத்தியிருந்தான். நீ பார்த்து எனக்கு நல்ல மனைவியாகக் கொடு என்று வேண்டிக்கொண்டான்.

'எனக்கு இந்தப் பொண்ணு பிடித்திருக்கிறது. இவள் நல்ல மனைவியா என்பது எனக்குத் தெரியாது. ஆனால், நீ இவளை உன் சன்னதியில் அறிமுகம் செய்திருக்கிறாய். தேவையில்லாமல் இதைச் செய்யமாட்டாய். நீ அறிமுகம் செய்த பெண்ணை நான் நன்கு பார்த்தேன். சந்தோஷமானேன். சொல்.. இவளை திருமணம் செய்து கொள்ளட்டுமா. சொல்.'

அவன் உள்ளுக்குள் இருக்கின்ற சிலையோடு பேசத்துவங்கினான்.

"செய். செய். யார் வேண்டாங்கறா. தாராளமா செய்" என்று யாரோ சொல்ல அவன் திடுக்கிட்டு நிமிர்ந்தான். தரையை யாரோ ஒருவர் துணியினால் துடைத்துக் கொண்டிருந்தார். கோவில் முழுவதும் காலடி தடங்கள்பட்டு அழுக்காக இருந்ததை அவர் துடைக்க முயற்சித்துக் கொண்டிருந்தார். துடைக்க முயற்சித்தவரை இன்னொருவர் பாராட்டிக் கொண்டிருந்தார். ஆனால், அந்த வார்த்தை செய். தாராளமா செய் என்று சொல்லுகிற வார்த்தை தனக்கு விழுந்ததாய் சத்யா எடுத்துக் கொண்டான். திரும்ப அவளைப் பார்த்தான்.

அவள் பயந்துபோய் கருவறையைப் பார்த்தாள்.

'கடவுளே.. என்னது இது. என்னை பார்க்கறான். சிரிச்சா மாதிரி தோணித்தே: சிரிச்சானா. தெரியலையே. ஏய்.. நீயா ஏதாவது பார்த்து பயந்துண்டிருக்காத. சாதாரணமா இரு. நார்மலா நடந்துக்கோ.'

அவளும் மனம் குவித்தாள்.

ஆள் நன்னாயிருக்கார். மனசு நன்னாயிருக்கா. புத்தி நன்னாயிருக்கா. அந்தக் குடும்பம் நன்னாயிருக்கா. எனக்குத் தெரியாது. நீ பார்த்து பண்ணி வை.

சொல்லு. நான் அவனை கல்யாணம் பண்ணிக்கட்டுமா சொல்லு. எனக்கு ஏதாவது சொல்லு.

"ஏங்க இது யாருது சர்க்கரைப் பொங்கல் இங்கயே வச்சுட்டுப் போயிட்டீங்களே."

ஒரு எவர்சில்வர் தூக்கு முழுவதும் இருந்த சர்க்கரைப் பொங்கலை ராமசுப்பு தூக்கி நின்றபடி கேட்டான். யாரும் பதில் சொல்லவில்லை. மறுபடியும் கேட்டான்.

"அந்த நீல புடவை கட்டிண்டிருக்காங்களே. அந்த அம்மாவுது." என்று சொன்னார்கள்.

ராமசுப்பு அதை தூக்கிக்கொண்டு வந்தான். அந்த வரிசையில் மூன்றுபேர் நீலப்புடவை கட்டிக் கொண்டிருந்தார்கள். முதலில் நிற்பவளை பார்த்தபோது இவள் சர்க்கரைப் பொங்கல் கொடுப்பவளாகத் தெரியவில்லை. இரண்டாவது ஒரு பெண் கண்மூடி நின்றிருந்தாள். அவளையும் தாண்டலாம் என்றபோது, சட்டென்று கண் திறந்தாள். நீங்கதானா என்றபோது ஆமாம் என்று தலையசைத்தாள்.

"இந்தாங்க வாங்கிக்கோங்க" என்று தூக்கை கையில் கொடுத்தான்.

எதைக் கேட்டான். என்ன ஆமாம் என்று சொன்னோம். இது என்ன சர்க்கரைப் பொங்கல் தூக்கு என்று ஆச்சரியப்பட்டாள்.

உள்ளிருந்து நெய்யும், வெல்லமும் கலந்த வாசனை வீசிற்று.

"இது என்னுது இல்ல" என்று மறுபடியும் ராமசுப்புவிடம் தூக்கை கொடுக்கப் போனாள்.

"எனக்குத் தெரியாது. இங்க தூக்கை வச்சுட்டாக்க எவ்வளவு நேரம் உள்ளயே இருக்கறது. யாருதுன்னு கேட்டு கொடுத்துடுங்கோ."

அவள் தூக்கை எடுத்துக்கொண்டு விவரம் புரியாமல் நாலாபக்கமும் பார்த்தாள். அந்தத் தூக்கு யாருடையது என்று அவளுக்குத் தெரியவே இல்லை.

"உங்களுது இல்லையா. அப்போ என்னா பண்றது. உங்ககிட்ட கொடுத்துட்டாங்களா. என்னா பண்றீங்க இங்க. இருக்கற சர்க்கரைப்பொங்கலை வரவங்க எல்லாருக்கும் கொடுத்துருங்க. அவ்ளோதான்."

அவள் சர்க்கரைப் பொங்கலை உருட்டி எல்லோருக்கும் தொடுக்கத் துவங்கினாள். பலபேர் முண்டி அடித்தார்கள். க்யூல நில்லுங்க என்று யாரோ அதட்டியதும் வரிசையானார்கள். அந்த வரிசையில் அவனும் நின்று கொண்டான். கடைசி விழுது சர்க்கரைப் பொங்கல் அவன் கைக்குப் போயிற்று. அவன் வாங்கிக்கொண்டு நன்றி சொன்னான். அவள் வெட்கப்பட்டாள்.

"யாருதோ தெரியலை சர்க்கரைப்பொங்கல். நான் எல்லாருக்கும் கொடுத்துண்டிருக்கேன்" என்று மெல்லிய குரலில் சொன்னாள்.

அவள் என்ன சொன்னாள் என்று காதுக்கு விழவில்லை. ஆனால், ஏதோ பிரியமாகப் பேசுகிறாள் என்று பட்டது. "தேங்க்யூ" என்று அவன் சொன்னான். அவன் சொன்னதற்கும், அவள் பதிலுக்கு ஏதோ சொன்னாள். ஆனால், அவனுக்கு அதுவும் காதில் விழவில்லை. காதுகள் அடைத்து விட்டிருந்தன.

சர்க்கரைப் பொங்கல் இருந்த நடுமூன்று விரல்களை கட்டைவிரலால் வழித்து சிறிதளவு வாயில் விட்டுக் கொண்டான். போய் கையலம்பினான். தூக்கு அனுப்பினாள். தூக்கை கோவிலில் கொடுத்து விடலாம் என்றபோது யாரோ ஒருவர் வேகமாக அவளுக்கருகே வந்தார்.

"இதிலிருந்த சர்க்கரைப்பொங்கல் என்னாச்சு."

"கொடுத்துட்டேன்."

"யாருக்கு."

"போற வரவாளுக்கு."

"இது என் தூக்கு. நான்தான் சர்க்கரைப்பொங்கல் நைவேத்யம் பண்ணேன்."

"மன்னிச்சுக்கோங்கோ. நான் எவ்வளவோ சொன்னேன்.

என் கையில கொடுத்துட்டாங்கோ."என்று அந்த நாற்பது வயது ஆளைப் பார்த்துச் சொன்னாள்.

"நல்லது அதனால என்ன. அம்பாளுடைய உத்தரவு அதுப்படிதான் நடக்கறது." கையிலிருந்து தூக்கு வாங்கிக் கொண்டார். காணாமல் போனார்.

அவனும் கை கழுவ வந்தான். சிரித்தான்.

"என் பேர் சத்யா" என்றான்.

அவள் "அப்படியா" என்று வியந்தாள்.

"என் பேர் காமாட்சி" என்றாள்.

அவர்கள் இரண்டு பேரும் அந்த சன்னதியை சேர்ந்து சுற்றினார்கள்.

"இந்த தெருவுலதான் இருக்கீங்களா."

"ரொம்ப வருஷமா இருக்கோம்."

"நாங்க இப்போதான் ரெண்டு வருஷத்துக்கு முன்னாடி இந்த ஃப்ளாட் வாங்கினோம்."

"படிச்சுருக்கீங்களா."

அவள் தன் படிப்பைச் சொன்னாள்.

"தினம் கோவிலுக்கு வருவீங்களா."

"வருவேன். சாயந்தர வேலையிலதான் வருவேன்."

"அப்படியா நானும் சாயந்தர வேலையிலதான் வருவேன்." அவனும் சொன்னான்.

அவர்கள் இன்னொருமுறை சுற்றினார்கள். இப்பொழுது அதிகம் பேசாமல் இருந்தார்கள்.

நின்று கருவறை நோக்கி நமஸ்கரித்தார்கள்.

அவள் மெல்ல வெளியே கிளம்பினாள். அவன் பின் தொடர்ந்தான்.

"நாளைக்கு சாயந்தரம் வருவீங்களா."

தைரியத்தை வரவழைத்துக் கேட்டுக்கொண்டான்.

"ஆமாம். ஆறரைலேர்ந்து ஏழுக்குள்ள வருவேன்."

"சரி" என்று அவன் பதில் சொன்னான்.

அவள் "தேங்க்யூ" என்று சொன்னாள். நடந்து தன் வீடு நோக்கிப் போனாள்.

அவன் மெல்ல மோட்டார் சைக்கிளை உதைத்து கிளப்பினான். அவன், அவளைத் தாண்டிக் கொண்டு தன் வீடு பக்கம் போனான். நின்று திரும்பி அவள் வருவதைப் பார்த்தான். உள்ளுக்குள் நுழைந்தான்.

மகேஸ்வரி சகலமும் பார்த்துக் கொண்டிருந்தாள்.

காமாட்சி வீட்டு வேலைக்காரி சுசீலாவிடம் சகலமும் சொல்ல வேண்டுமென்று அவளுக்குள் பரபரப்பு ஏற்பட்டது.

பவழமல்லி மரத்தடியில் அவர் நாற்காலிபோட்டு அமர்ந்திருந்தார் அவன் அவரைத் தாண்டி கொண்டு

போனான். வண்டியை நிறுத்திவிட்டு திரும்ப அவரைப் பார்த்தான். ஒல்லியாய் உயரமாய் மெல்லிய தாடியோடு அவர் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருப்பதை வியப்போடு பார்த்தான்.

யாரது என்பதுபோல் அவர் முகபாவனை மாறியது.

"என் பேர் சீனுவாசன். ரிட்டையர்டு போஸ்டல் கிளார்க். இங்க செகண்ட் ப்ளாக் பர்ஸ்ட் ஃப்ளோர்ல குடித்தனம் வந்திருக்கோம். இந்த இடம் குளுகுளுன்னு இருக்கு. அதான் சேர் போட்டுண்டு உட்கார்ந்திருக்கலாமேன்னு."

"இல்லை ஸார். எறும்பு கடிக்கும். பவழமல்லிக்கு எறும்பு வரும் ஸார். சிகப்பு எறும்பு வரும். காத்தடிச்சா பொலபொலன்னு பூவோட எறும்பும் உதிரும். அது சின்ன எறும்பு. இந்த இடம் சரியில்லை ஸார். ஒரு தடவை இங்க வண்டியை நிறுத்திட்டு படாதபாடுபட்டேன். தொடையெல்லாம் கடிச்சுடுத்து." அவன் சொல்ல அவர் வாய்விட்டுச் சிரித்தார்.

"ஸார்.. எடுத்துக்கோங்கோ."

அவன் பையிலிருந்து விபூதி, குங்குமம் எடுத்து நீட்டினான். அவர் எடுத்துக் கொண்டார்.

"எந்த கோவில்."

"இங்க ஆயிரம்கண்ணி."

"எங்க இருக்கு."

"இந்தத் தெரு முனைல இருக்கு ஸார்."

"அப்படியா. ஆயிரம்கண்ணின்னா காளிகோயிலா."

"தெரியலை ஸார். அம்மன் மட்டும் இருக்கும்."

"அப்போ காவல் தெய்வமா இருக்கும்."

"இல்லையே ஸார். நல்ல கோயில். இன்ஜினியரிங் சேர்ந்து பரிட்சைக்கு போறபோது கொஞ்சநேரம் அங்க உட்கார்ந்துட்டு போவேன். நன்னா எழுதலாம். கெமிக்கல் இன்ஜினியரிங் பாஸ் பண்ணதே அவ அருளாலதான் ஸார்."

"இன்னும் கொஞ்சம் குங்குமம் கொடு தம்பி."

அவன் பொட்டலம் பிரித்தான். அவர் குங்குமத்தில் கை வைத்தார். மெல்ல எடுத்து முகர்ந்து பார்த்தார். நெற்றியில் இட்டுக் கொண்டார். உச்சியில் வைத்துக் கொண்டார்.

"கோரைப்பல் இருக்கோ" என்று ஆழ்ந்து யோசித்தபடி கேட்டார்.

"தெரியலையே ஸார்."

"எப்படிப்பா தெரியலைங்கற."

"நான் தூரத்துல இருந்துதான் பார்க்கறேன். கோரைப்பல் இருக்கா என்னன்னு தெரியலை. பார்க்க அழகா இருக்கும். பேசறாமாதிரி இருக்கும். சிலசமயம் அலங்காரம் ரொம்ப

நன்னாயிருக்கும்."

"போய் பார்த்துட்டா போச்சு."

சீனுவாசன் சத்யாவிடம் கை குலுக்கிவிட்டு கோயில் நோக்கி நடந்தார்.

அவருக்கு அறுபத்து மூன்று வயது. தபால் இலாகாவில் குமாஸ்தாவாக இருந்து ஓய்வுபெற்று மூன்று வருடமாயிற்று. அவருக்கு இரண்டு பெண்கள். இரண்டு பையன்கள். எல்லோருக்கும் திருமணமாகி விட்டது. இரண்டு பெண்களும், ஒரு பிள்ளையும் தேசத்தின் மூலைக்கொன்றாய் இருக்க மூத்தபிள்ளை வீடு வாங்கியிருந்தான்.

இரண்டு படுக்கையறைகள் கொண்ட பெரிய போர்ஷன். இரண்டு அறை போர்ஷன் வாங்க முற்பட்டபோது அவர்தான் கூட ஐந்து லட்சரூபாய் கொடுத்து மூன்று அறை வாங்கும்படிச் சொன்னார்.

"கடைசி வரைக்கும் உன்கூட இருந்துடறேண்டா. உனக்கு ஒண்ணும் ஆட்சேபணை இல்லையே" என்று கேட்டார்.

அவனுடைய மனைவியை விசாரித்தார். அவர்கள் இருவரும் சந்தோஷமாக ஒப்புக் கொண்டதால் அவர்களோடு இருந்துவிட்டார். அவர் மனைவிக்கு பேரன்மீது கொள்ளை ஆசை. அவனுக்கு சோறுபோடுவதும், அவன் புத்தகங்களுக்கு அட்டை போடுவதும், அவனுடைய துணிகளை துவைப்பதுமான வேலைகளில் அவள் தன்னை ஈடுபடுத்திக் கொள்ள புருஷனும், மனைவியும் வேலைக்குப் போய் வந்தார்கள்.

"சமையல் வேலையிலயே கஷ்டமான விஷயம் காய்கறி நறுக்கறதுதான். நீங்க நறுக்கி வச்சுட்டா போதும். அரைமணி நேரத்துல முடிச்சுடுவேன்." என்று மருமகள் சொல்ல, காய்கறி நறுக்கி வைத்து அரிசி களைந்து குக்கரில் போட்டு குக்கர் மூன்று முறை சத்தமிட்டபிறகு அடுப்பை அணைத்து சாதத்தை அவர் மனைவி இறக்கி விடுவாள். சாம்பாரோ அல்லது ரசமோ, கூட்டோ அல்லது கறியோ மருமகள் செய்து முடித்துவிட குடும்பமே சுற்றி உட்கார்ந்து சந்தோஷமாக சாப்பிடும். விதம்விதமாக வடாமும், வத்தலும் சாப்பிடுவதற்கு அவருடைய மூத்தபிள்ளைக்குப் பிடிக்கும். அதற்காகவும் அவருடைய மனைவி மெனக்கெடுவாள்.

"வறுத்ததை ரொம்ப சாப்பிடாதடா. தொப்பை போட்டுரும்" என்று சொல்ல அவன் கேட்கமாட்டான்.

"எல்லாரும் உன்னை மாதிரியே ஒட்டின வயிறா இருக்க முடியுமா."

"ஒட்டின வயிறுதாண்டா ஆரோக்கியம். சாக்கு மூட்டை

மாதிரியா இருக்கறது."

ஞாயிற்றுக்கிழமைகளில் அவனுக்கு வற்றல் குழம்பு சாப்பிட வேண்டும்.

"வ்த்த குழம்பு சாப்பிடாதடா, அது ஒரு கேவலமான பண்டம்."

சீனுவாசன் சீறுவார்.

அவன் காதுகொடுத்து கேட்கமாட்டான். அவர் மனைவியோ மகன் என்ன சொல்கிறானோ அதை வேதவாக்காக எடுத்துக் கொண்டு ஓடுவாள்.

"ரொம்ப உப்புடா அது. இவ்வளவு உப்பு, உறைப்புமா சாப்பிடக்கூடாது. நம்ம உடம்புல ஏற்கனவே ஏகப்பட்ட உப்பு இருக்கு. இன்னும் உப்பாவே சாப்பிட்டா ரத்த ஓட்டம் அதிகப்படும். ரத்த ஓட்டம் அதிகப்படுத்தினா ஜீரணம் பாதிக்கும். ஜீரணம் பாதிச்சா புத்தி பேதலிக்கும். கோபம், பொய் சொல்லுதல், ஏமாற்றுவது, கள்ளத்தனம், ஆத்திரம், பொறாமை போன்ற விஷயங்கள் அதிகம் உப்பு சாப்பிடுவதால் ஏற்படும். வடாம் உப்பு, அப்பளம் உப்பு, வத்தக்குழம்பு உப்புன்னு எவ்வளவு சாப்பிடுவ."

"என்ன சாப்பிடணும்கற."

"வெறும் காய். வேகவச்ச காய். உப்பில்லாத சாப்பாடு."

"நான் என்ன எருமைமாடா அப்படி சாப்பிடறதுக்கு."

அவர் பதிலுக்குக் கத்துவார். அவர்கள் வீட்டில் வாக்குவாதம் என்று வந்தால் அது உணவு பற்றிதான் வரும். அவர் மனைவி ஒருமுறை உணவு பற்றி தயவுசெய்து பேசாதீர்கள். அவரவர்க்கு உண்டான விதி அவரவரை வழிநடத்தும் என்று சொல்ல அவர் வாய் மூடிக்கொண்டார்.

"மாமா நீங்க சொல்றது ரைட். ஆனா, அது உங்க பிள்ளைக்கு உறைக்காது. நிறைய சம்பாதிக்கறதே நல்லா சாப்பிடறதுக்குன்னு அவருக்கு தோணிப்போச்சு. அவரை சுத்தி ஒரு பெரிய சோத்துப்பட்டாளம் இருக்கு. அவங்களுக்கு பொழுது போகலைன்னா சோறு பத்திதான் பேசறாங்க. பிராமணாள் போஜனப்பிரியாள்னு சொல்றாங்க. கீழ இருந்த விதைகளைப் பொறுக்கி சாப்பிடறவன்தான் பிராமணன்னு இவங்களுக்கு தெரியவே இல்லை. தனக்கா உடம்புக்கு வந்து, தானா தளர்ந்துபோய், தானா அவஸ்தைப்பட்டு புரிஞ்சுக்க வேண்டிய விஷயம். நீங்க சொன்னா புரியாது. நீங்க சொல்றபடி சாப்பாட்டை நான் மாத்திட்டேன். காய்கறியாகூட இல்லை. காய்கறி ஜூஸாதான் சாப்பிடறேன். ரெண்டு டம்ளர் காய்கறி ஜூஸ். ஒரேயொரு சப்பாத்தி போறும்."

மருமகள் அளவாக, அழகாக, தெளிவாக திடமாக இருந்தாள். அவளைப்பார்க்கும் போதெல்லாம் இவள் ஒரு

தேவதை என்ற நினைப்பு சீனுவாசனுக்கு எழும். மாமனாரை பார்க்கும்போதெல்லாம் அந்தப் பெண்ணுக்கு இவர் ஒரு முனிவர் என்று தோன்றும். வெண்மை நிறக்குடுமியும் மெல்லிய தாடியுமாய் அவர் நடந்துபோகும்போது பல பே அவருக்கு எழுந்து நின்று எதனாலேயோ வணக்கம் சொல்வார்கள். அவர் வணக்கம் சொல்வதற்குக் காரணம் அவ வேலை செய்த இடம்.

இளம் வயதில் பல இடத்தில் வேலைக்காக பரிட்சை எழு தொலைபேசி நிறுவனத்திலிருந்துதான் முதல் அழைப்பு வந்தது.

"ஐயையோ போஸ்டல் டிபார்ட்மெண்ட்லயா. சென்ட்ர கவர்மெண்ட்லயா சேரப்போற. மொத்த வாழ்க்கையு நாசமாப்போயிடும்."

சொந்தக்காரர்கள் சீறினார்கள்.

"ஏன், என்ன நாசமாப்போயிடும்."

அவர் வியப்போடு கேட்டார்.

"ஒரு வேலையும் இருக்காதா."

"பைத்தியம் பிடிச்சு போயிடுவ. சேலன்ஜே இருக்காது. நீ உயர்ந்த ஜாதிக்காரன். உனக்கு ஒரு சலுகையும் கிடையாது மத்தவங்களுக்கு சலுகைய வாரி வழங்குவா. வேலையே தெரியாதவன் உன் தலைமேல உட்கார்ந்துட்டிருப்பான். நீ பேய்முழி முழிச்சுண்டிருப்ப. பிறகு சம்பளம்னு அம்பது ரூபாயா. அறுபது ரூபாயா. நீ பரிட்சை எழுதி பாஸ் பண்ணாலு மிஞ்சி மிஞ்சி பன்னெண்டாயிரம் ரூபாய்க்குமேல உன்னா தாண்ட முடியாது. தனியார் கம்பெனியில போ. முப்பதாயிர நாப்பதாயிரம்னு சம்பளம் கிடைக்கும். வீட்டுவாடகை ஆஸ்பிட்டல் செலவு, பள்ளிக்கூட செலவு, தீபாவளி போன அப்படின்னு நிறைய கொடுப்பான். ஏரோப்ளேன்ல போகலாம் ஃபைவ்ஸ்டார் ஹோட்டல்ல தங்கலாம். குடும்பத்தோட வெளிதேசத்துக்கு டூர் போகலாம். ஓயாத உழைக்கலாம். பெரி மரியாதை இருக்கும்டா. அதை விட்டுட்டு அரசாங் உத்தியோகஸ்தனா போறியே. இது தப்பாச்சே."

தனக்கு அரசாங்க உத்தியோகம் கிடைக்கவில்லை. த பையனுக்கு கிடைத்துவிட்டது என்று குதூகலத்தி இருந்தார். எவன் சொன்னாலும் இந்த வேலையை விடாதே என்று விசாகப்பட்டினத்திற்கு அனுப்பினார். அங்கு போ பிறகுதான், அங்கு வேலையே இல்லை என்று தெரிந்தது.

வேலையை ஆர்வமாக எடுத்து செய்கிறபோ அடுத்தவருக்கு அது பாரமாக இருந்தது.

"இது கவர்மெண்ட் உத்தியோகம். நீ மட்டும் கொ கட்டிப்பறக்கலாம்னு நினைக்காத. கொடி ஏத்த விடமாட்டே

எவன் கஷ்டப்பட்டு வேலை செய்தாலும் ஓரமா உட்கார வச்சுடுவோம். நீ தடால் புடால்னு செய்து கொடுத்துடுவ. அதேமாதிரி என்னை செய்ய சொல்லுவான். பைத்தியமா எங்களுக்கு செய்யறதுக்கு. ஒரு நாளைக்கு ஒரு வேலை ரெண்டு வேலை பார். செய்ய முடியலைன்னா உட்காந்துக்க." என்று சக ஊழியர்கள் மிரட்டினார்கள். மேஜையில் தாளமிட்டுப் பாட்டு பாடினார்கள். வட்டமாக உட்கார்ந்து கொண்டு அரசியல் பேசினார்கள். தொழிற்சங்க விவாதங்கள் நடத்தினார்கள்.

அரசாங்க சம்பந்தமாக பல பரிட்சைகள் எழுதினார். புள்ளிவிவரத்துறைக்கு அவரை தூக்கிக்கொண்டு போய் உட்கார வைத்தார்கள். அப்பொழுதும் வேலை அதிகம் இல்லை. சவால் என்று எதுவுமே இல்லை. பேசிப்பேசி கெட்டுவிடப் போகிறோம் என்ற பயம் ஏற்பட்டது. எனவே, தன்னை நிலை நிறுத்திக்கொள்ள, அவர் தீவிரமான மூச்சுப் பயிற்சியிலும், மந்திர ஜபத்திலும், தியானத்திலும் ஈடுபட்டார்.

கங்கைக்கரை ஓரமாக ஒருநகரில் அவருக்கு அதிகாரியாய் உத்தியோகம் கிடைத்தது. அவருக்குக்கீழ் இருந்தவர்கள் பற்பலச் சலுகைகள் காரணமாக பதவி உயர்வு பெற்றார்கள். அவருக்கே அதிகாரியாக வந்தார்கள். ஆனால், பிரச்சினையை தீர்ப்பது எப்படி என்று தெரியாமல் முழித்தார்கள். அவரிடம் வந்து மரியாதையாகக் கேட்டார்கள். விவரம் சொல்லிக் கொடுத்தார். அந்த அதிகாரிகள் அவரை மரியாதையாக வைத்துக் கொண்டார்கள். அவரை தனிமையில் இருக்க விட்டார்கள். பெரிய ஹாலின் ஓரத்தில் தனியாக உட்கார்ந்து கொண்டு பகல் முழுவதும் மந்திரஜபம் செய்து கொண்டிருப்பார். ஒரு வாரம் லீவு போட்டுவிட்டு கங்கைக் கரையோரம் போய் அங்குள்ள சாதுக்களை சந்தித்துவிட்டு வந்தார். பல்வேறு விஷயங்கள் தெரிந்து கொண்டார். தனக்குள் மூழ்குவது பற்றியும், ஆடாமல் உட்காருவது பற்றியும் அங்கே அறிந்து கொண்டார். வெள்ளை வேட்டி, மேலே ஒரு துவைத்த சட்டை, தோளில் அங்கவஸ்திரம். அவர் உடை மாறிப்போனது.

பலநாட்கள் உபவாசம் இருந்ததால் உடம்பு உறுதிப்பட்டது. அவருடைய சம்பளத்தில் அவர் மனைவி அழகாக குடித்தனம் செய்தாள். அரசாங்கத்தில் கிடைத்த குவார்ட்டர்ஸில் பூஜைகள் செய்து பிரபலமானாள். அவளுடைய குழந்தைகளுக்கு பட்சணம் வேண்டுமெனில் அந்த குவார்ட்டர்ஸில் உள்ளவர்கள் பிறந்தநாளை ஞாபகம் வைத்துக்கொண்டு, "உங்க பிறந்த நாளைக்கு சர்க்கரைப் பொங்கல் பண்ணினேன். உங்க பிறந்த நாளைக்கு லட்டு

பண்ணினேன்." என்று சொல்லி அவர்களிடம் கொடுத்து காசு வாங்கிக்கொண்டு, தன் குழந்தைகளுக்கும் வேண்டுமென்ற பட்சணம் எடுத்து வைத்து விடுவாள்.

"நான் நிறைய சம்பாதிக்கலைன்னு உனக்கு வருத்தம் உண்டா."

ஒருமுறை சீனுவாசன் கேட்க, அவள் 'இல்லை' என்று தலையசைத்தாள்.

"உங்களால உண்டான முயற்சியை நீங்க பண்றேள். நம்ம குழந்தைகள் நம்மளமாதிரி காசுக்கு கஷ்டப்படாத இன்னும் சௌகரியமா, சந்தோஷமா இருக்கணும்னு எனக்கு ஆசை. நம்மகிட்ட அஞ்சுரூபா, பத்துரூபா கேட்காத நமக்குன்னு ஐநூறும், ஆயிரமும் தரும்படியா அதுகள் வளர்ந்துடுத்துன்னா அதுதான் பெரிய சந்தோஷம். அதுதான் நம்முடைய வெற்றி."

அந்த வெற்றியை அவர்கள் எளிதில் அடைந்தார்கள். சாதிக்க வேண்டியது எதுவும் இல்லை என்கிறமாதிரி நிறைவு பெற்ற சீனுவாசன் ஆயிரம்கண்ணி கோயிலை நோக்கி நடந்தார்.

பவழமல்லிச் செடிலேர்ந்து எறும்பு உதிருங்கறான். அப்போ உட்காரத்துக்கு இந்தப்பக்கம் சரியான இடமில்லை. கோயிலுக்குள்ள போய் உட்கார்ந்துக்கலாமோ என்கிற எண்ணம்தான் அவருக்கு முதலில் ஏற்பட்டது.

அவர் கோயிலுக்குள் நுழைந்தார். ஒருமுறை சுற்றி வந்தார்.

அட, கோயில் சுத்தமா இருக்கே.. குளுகுளுன்னு இருக்கே.. அந்த உற்சவர் சன்னதிக்கு நேர வேப்ப மரத்துக்குக் கீழ துண்டு போட்டு உட்கார்ந்தா என்ன.

அவர் தரையிலே துண்டு மடித்துப் போட்டார். உட்கார்ந்து சுவர்மீது சாய்ந்து கொண்டார். கருவறையிலுள்ள அவள், ஆயிரம்கண்ணி சிரித்தாள்.

ஒன்பது வயது பெண்குழந்தை ஒருத்தி இடுப்பில் ஒருவயது பெண்குழந்தையோடு அவருக்கெதிரே வந்து நின்றாள்.

"தாத்தா பாரு.. தாத்தா பாரு."

ஒரு வயது குழந்தை அழுது கொண்டிருந்தது.

ஒன்பது வயது குழந்தை, அந்த ஒருவயது குழந்தையை சமாதானப்படுத்திக் கொண்டிருந்தாள். சீனுவாசனைப் பார்த்து அந்த ஒரு வயதுக் குழந்தை அமைதியாய் நின்றது.

"பார்த்தியா.. தாத்தா தாடி வச்சுருக்காங்க. பார்த்தியா.."

அந்தக் குழந்த்த இன்னும் அருகே வந்தது.

சீனுவாசன் அந்த இரண்டு குழந்தைகளையும் பார்த்துச் சிரித்தார்.

"ஏன் தாத்தா.. இந்த சாமியை கும்பிடணுமா. அந்த சாமியை கும்பிடணுமா."குழந்தை கருவறையையும் உற்சவமூர்த்தியையும் சுட்டிக்காட்டி கேட்டது.

"ரெண்டு சாமியையுமே கும்பிடலாம்."

"முதல்ல எந்த சாமியை கும்பிடணும்."

"முதல்ல உள்ளுக்குள்ள இருக்கற சாமியை கும்பிட்டுட்டு. அடுத்தது இந்தப்பக்கம் இருக்கற சாமியை கும்பிடணும்."

அந்தக் குழந்தை பேசிய பாஷையிலேயே சீனுவாசன் பேசினார்.

சட்டென்று உள்ளே ஏதோ பொறி தட்டியது.

நாம் இருவரையுமே வணங்கவில்லையோ என்று தோன்றியது.

விருட்டென்று எழுந்தார்.

அட.. உட்கார இடம் பார்த்து உட்கார்ந்து விட்டோம். இது வெறுமே உட்காரும் இடமா. பூஜைக்குண்டான இடமில்லையா. எவ்வளவு முட்டாள்தனமாக வந்து உட்கார்ந்து கொண்டேன். இந்தச் சிறு பெண்ணல்லவா வந்து கண் திறந்து விட்டாள்.

அவள் தலையைத்தடவி கண்ணில் ஒற்றிக் கொண்டார். வேகமாக நடந்து கருவறை எதிரே நின்று கைகூப்பினார்.

ஆயிரம்கண்ணி மறுபடியும் சிரித்தாள்.

"கருவறைக்குள்ளேயும் போகலாங்களா."

உள்ளுக்குள்ளே நாலைந்துபேர் கைகூப்பி நிற்பதைப் பார்த்துவிட்டு சீனுவாசன் கேட்டார்.

"போகலாங்களே. அஞ்சு ரூபா டிக்கெட்."

ஐந்து ரூபாய் டிக்கெட் வாங்குகிறபோது யோசித்தார்.

வேண்டுமா. கருவறைக்குள் போய் சுவாமியை தரிசனம் செய்ய வேண்டுமா. சட்டை போட்டுக் கொண்டிருக்கிறோம். குளிக்காமல் வந்திருக்கிறோம் என்று சிந்தித்தார். ஆனால், இவள் காவல் தெய்வம்தான். மகனுக்கு தாய்போல, மக்களுக்கு நெருக்கமானவள்தான். அதிக ஆசாரங்கள் இல்லாத தெய்வம்தான். போனால் ஒன்றும் தவறில்லை என்று தோன்றியது. ஆனால், ஐந்து ரூபாய் கொடுத்து பார்க்க வேண்டியது அவசியமா என்று யோசித்தார்.

ராமசுப்பு வெளியே நின்றிருந்தான். உள்ளுக்குள் காளிதாசன் இருந்தார். காளிதாசன் உரத்த குரலில் யாரையோ திட்டுவது அவன் காதில் விழுந்தது. அனேகமாக மணியடிக்கிற கன்னியப்பனைத்தான் காளிதாசன் திட்டுகிறான் என்பதாக யூகித்தான்.

"உள்ளேயிருப்பவள் காளியா. அம்பாளா."

ராமசுப்புவிடம் போய் சீனுவாசன் கேட்டார்.

ராமசுப்ரமணியம் என்ன என்று மறுபடியும் கேட்டான்.

"உள்ள இருக்கறது உக்கிரமானதா அல்லது சௌலப்பியமான சொரூபமா."

வடமொழி வார்த்தைகள் கலந்து ராமசுப்ரமணியத்திடம் பேசியது. பேசியவர் அந்தணர் என்று ராமசுப்ரமணியத்திற்கு தெரிவிக்கப்பட்டது.

விஸ்வநாதனைத் தாண்டி, காளிதாசனைத் தாண்டி தன்னை ஒருவர் மதித்து கேள்வி கேட்கிறார் என்று ராமசுப்ரமணியத்திற்கு சந்தோஷமாக இருந்தது. தான் இங்கு வரும் பக்தர்களிடம் நல்லபடி பேசி தனக்கென்று ஒருபக்தர்கள் குழு ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். தன்னிடம்தான் அர்ச்சனைத்தட்டை பக்தர்கள் தரவேண்டும். அப்படி ஒரு சிறிய பிரிவை உண்டாக்கிக்கொள்ள வேண்டுமென்று ராமசுப்ரமணியம் விரும்பினான். அதை சில வாரங்களாக செயல்படுத்தத் துவங்கியிருந்தான்.

வெள்ளைச்சட்டையும், வெள்ளை வேட்டியும், வெள்ளை தாடியுமாய் ஒருவர் வந்து கேட்டபோது இவரையும் மடக்கிப் போட்டால் நல்லது. இவர் மூலமாக பல பக்தர்கள் கிடைப்பார்கள் என்ற எண்ணம் ராமசுப்ரமணியத்திற்கு ஏற்பட்டது.

"அம்பாள் தோற்றம்தான் உக்கிரம். ஆனா, ரொம்ப மிருதுவானவள். வரப்பிரசாதி. எப்படி உக்கிரம்னு சொல்றேள்."

"கோரைப்பற்கள் இருக்கு. எதிர சிம்மவாகனம். ஈஸ்வர சன்னதி இல்லை. தனியா உட்கார்ந்துட்டிருக்கா."

"தனியா உட்கார்ந்துட்டிருக்கான்னாலே அவ தபஸ்வின்னுதானே ஆறது."

"கோரைப்பற்கள் இருக்குன்னா எப்படி அமைதியானவள்னு சொல்றேள்."

"அமிர்த குடமும், அக்கமாலையும் வச்சுண்டிருக்கா. அக்கமாலை வச்சுண்டிருக்கற எந்த தெய்வமும் கோபப்படாது. அது தபஸ்ல இருக்கு. வெறுமன நமஸ்காரம் பண்ணா போறும். உனக்கு என்ன வேணுமோ.. அது அவளா கொடுத்துடுவா. கேட்கணும்கறதோ, சங்கல்பம் பண்ணிக்கணும்கறதோ இல்லை. எனக்கு இதைக்கொடு, நான் அதைத் தரேன்ற பேச்சே இல்லை. நீங்க வந்து நின்னு கை கட்டினா போதும். உங்ககிட்ட என்ன குறை இருக்குன்னு தெரிஞ்சு அந்த குறையை நிவர்த்தி பண்ணுகிறவள் ஆயிரம்கண்ணி. ஒருதடவை வந்து பார்த்துட்டேள் இல்ல. நீங்க எங்க போனாலும் உங்க பின்னால வந்து நிப்போ. ஒரு தடவை அவகூட ஸ்நேகமாயிட்டா போதும். எப்போவும் சுத்திண்டிருப்போ. எப்போ குரல் கொடுத்தாலும் ஓடி வந்துடுவோ."

"அழகா இருக்கு அம்பி நீ பேசறது. இப்படி உங்கள மாதிரி இருக்கறவா பேசினா போதும் நிறைய ஜனங்கள் கோவிலுக்கு வந்துடுவா."

"இல்லை ஸார். இன்னும் வரணும்."

"போன தலைமுறையில இருக்கற அர்ச்சகர்கள் சரியா நடந்துக்காத ரொம்ப அலட்டலா நடந்துண்டதாலதான் கோயில் வருமானம் கம்மியா இருந்தது. இந்தத் தலைமுறை அர்ச்சகர்கள் ரொம்ப நன்னா நடந்துக்கறா. நாமும் பக்தர்களும் சமம் அப்படின்ற ஒரு எண்ணம் ஏற்பட்டுப் போச்சு. ஐயர்னா உயர்ந்த ஜாதிக்காரன் அப்படிங்கற எண்ணம் நின்னு போயி அவனும் நம்மை மாதிரி மனுஷன்தான் அவனுக்கு வேலை கோவில் வேலை. எனக்கு வேலை வயல் வேலை அப்படின்னு அமைதியாயிட்டாங்க."

"ஸார். நீங்க அழகா சொல்றேள்."

"நடுவுல ஒரு காலகட்டம் பார்ப்பான் ஒழிகன்னு வந்துதே அது நல்லதுக்குன்னுதான் தோணித்து."

"எப்படி ஸார்."

வியப்போடு ராமசுப்ரமணியன் அவரைப் பார்த்துக் கேட்டான்.

"பார்ப்பான் ஒழிக அப்படின்னு ஒரு பெரிய எதிர்ப்புக்குரல் வந்ததாலதான் பிராமணர்களுக்கு தன்னுடைய சுய ஜாதி கர்வம் ஒழிஞ்சுது. அதைப்பத்திய அலட்டல் குறைஞ்சது. அவன் சாதாரணமா ஆரம்பிச்சான். அவன் சாதாரணமா அடங்கிப் போனபிறகு அந்த எதிர்ப்பும் அடங்கிப் போயிடுத்து. பார்ப்பானை ஒழிச்சா இந்து மதத்தை ஒழிச்சுடலாம்னு சொன்ன அந்தக் கணக்கு தப்பாயிடுத்து. இந்துமதம் பலமாயிடுத்து. எல்லா கோவில்லயும் என்ன கூட்டம். கடவுள் இல்லைன்னு சொன்னவன்தானே பார்ப்பான் ஒழிகன்னு சொன்னான். கடவுள் ஒழியலை. ஒழிக்க முடியலை. மாறாய் அதிகமாயிடுச்சு. ஏகப்பட்ட கோவில், எல்லாக் கோவில்லயும் நல்ல விசேஷங்கள். ஆடிமாச விழாவெல்லாம் உண்டா."

"உள்ள ஆள் நுழைய முடியாது ஸார். அப்படியொரு கூட்டம். அப்படியொரு கும்பல். அப்படியொரு பொங்கப்பானை. புகை இருக்கும். இப்போதான் முதல் தடவை வறீங்களா."

பிரியமாகக் கேட்டான்.

அவர் ஆம் என்று தலையசைக்க கிராதிக்கதவு திறந்து அவரை கூட்டிக்கொண்டு போனான். ஆயிரம்கண்ணிக்கு அருகே நிற்க வைத்தான். கற்பூர ஆரத்தி காட்டினான்.

சட்டென்று சீனுவாசனுக்கு நெஞ்சு அடைத்தது. தொண்டைக்குழி எழும்பி சுழன்றது. கண்கள் நிலைகுத்தி

நின்றன. காதுகளில் ரீங்காரம் கேட்டது. மூளை வெறுமே ஆகியது. மூச்சில் தடுமாற்றம் ஏற்பட்டது. நாக்கு உள்ளுக்குள் இழுக்க ஆரம்பித்தது. வயிறு குழைந்தது. கால்கள் நடுங்கின. கைகள் கும்பிட முடியாமல் தோய்ந்தன.

என்ன இது. என்ன மாற்றம் இது.

அவளையே பார்த்துக் கொண்டிருந்த அவளிடமிருந்து ஒரு பெரும் புன்னகை வந்தது. அற்பப்பதரே என்பதுபோல் ஒரு கேலியான புன்னகையாக இருந்தது. மறுபடியும் நெஞ்சு அழுத்தி அடைத்தது.

அவர் பயந்தார். வெளியே போய்விடவேண்டுமென்று நினைத்தார். ஆனால், சட்டென்று அவர் புத்தி சுதாரித்துக் கொண்டது. ஒரு நல்ல கருவறை இப்படிப்பட்ட நிகழ்வுகளை ஏற்படுத்தும். உள்ளே குடியிருக்கிற சக்தி என்னுடைய சக்தியை தொடும்போது என் சக்தி பயந்து சுருண்டு பின்வாங்குகிறது. நல்லது. தொடு.. தொடு.. தொடு.

அவர் கைகூப்பி தலைகுனிந்தார். கொஞ்ச நேரம் மூச்சு அடக்கப்பட்டது.. அடக்கிய மூச்சு சீறியபடி தலைநிமிர வெளியே வந்தது. மூச்சு உள்ளிழுத்து வெளியேவர அவர் நாடித்துடிப்பு சரியாகியது. இருதய அழுத்தம் சட்டென்று நீங்கியது. நெற்றிப்பொட்டிலிருந்து வேதனை விலகியது. நாக்கு சரியாயிற்று. வயிறு திடமாயிற்று. கால்கள் அழுத்தமாக நின்றன. கைகளை மறுபடியும் உயரத்தூக்கி வணங்கினார்.

என்னைத் தொட்டாயா எனக்குப் புரிந்தது. நல்லது. தூர்கை. வனதுர்கை.

அவர் உதடுகள் வனதுர்கை மந்திரத்தை உச்சரிக்கத் துவங்கின.

**ஐம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் தும் உத்திஷ்ட புருஷி கிம்**
**ஸ்வபீஷி பயம்மே சமுபஸ்திதம் யதி சக்யம்**
**அசக்யம் வா தன்மே பகவதி சமய சமய ஸ்வாஹா.**

முதலில் உரக்கச் சொல்லி பிறகு உதடுகள் அசையச் சொல்லி, பிறகு தனக்குள்ளே சொல்லத்துவங்கினார்.

அட, வனதுர்கா மந்திரத்தை சொல்கிறாரே, நன்றாக இருக்கிறதே. அக்ஷரம் பிசகாமல் சொல்கிறாரே. விஷயம் தெரிந்தவராக இருப்பார் போலிருக்கிறது. சாக்த உபாசகர் போலிருக்கிறது. அதனால்தான் முகத்தில் ஒரு தெளிவு. கண்களில் ஒரு பிரகாசம். லேசாய் ஒரு திமிரும் இருக்கும்போல் இருக்கிறது. வேறு என்னவெல்லாம் பாடம் செய்திருப்பாரோ தெரியவில்லை. இவரை ஸ்நேகப்படுத்திக்கொண்டால் நல்லது என்று அவனுக்குள் தோன்றியது.

தொலைவிலிருந்த காளிதாஸன் குங்குமம் கொடுத்தபடியே இவர்கள் இருவரையும் பார்த்தான்.

யாரது என்று சைகையில் கேட்டான்.

தெரியாது என்று ராமசுப்பு உதடுபிதுக்க, ஆறேழு பேருக்கு குங்குமம் கொடுக்காமல் சீனுவாசனை நோக்கி வேகமாக நடந்து வந்தான். அந்த ஆறேழு பேருக்கு நடுவே உத்தண்டி என்கிற ஓட்டல் அதிபரும் இருந்தார். அவருக்கு சுருக்கென்று கோபம் வந்தது.

"என்னா இந்தப் பார்ப்பான் குங்குமம் கொடுக்காத போறான். திமிர் இல்ல."

"உள்ள ஒரு ஐயரை பார்த்துட்டான். அதனாலதான் இந்த ஐயரு ஓடறான். ஐயருக்கு ஐயரு ஸ்நேகிதம்." என்று உத்தண்டிக்கு பக்கத்தில் இருந்தவர் சொல்ல அவருக்கு கோபம் தலைக்கேறியது.

"என்ன செய்யறது. குங்குமம் வாங்காம போயிடலாமா."

"இல்லீங்க. குங்குமம் வாங்கிட்டுதான் போகணும். நமக்கு அவன்மேலதானே கோபம். ஆத்தாமேல கோபம் இல்லையே. வரட்டும், டேய்.. இங்க வாடா."

அவர் உரக்க கருவறை நோக்கி காளிதாசனைக் கூப்பிட காளிதாசன் சீனுவாசனோடு பேசத்துவங்கினான். ராமசுப்ரமணியம் திரும்பி அவரை நோக்கி வந்தான். "கூப்பிட்டீங்களா" என்றான்.

அலட்சியம் செய்தவன் அப்பால் போய்விட, இன்னொருவன், கூப்பிட்ட குரலுக்கு வந்து பவ்யமாக இருப்பது உத்தண்டிக்கு கோபத்தைக் குறைத்தது.

"குங்குமம் கொடுக்காம போயிட்டாரு அந்த ஐயரு. எதுனா அறிவிருக்கா."

"அப்படியா. குங்குமம் கொடுக்கலையா. இருங்கோ நான் தரேன்."

அவன் வேகமாக கடந்து போனான். திரும்ப நின்று உத்தண்டியைப் பார்த்தான்.

உத்தண்டி முகத்தில் ஒரு பணக்காரக்களை இருந்தது. ஒரு கோபம் இருந்தது.

ஒரு தட்டு எடுத்து கற்பூரம் ஏற்றி அம்மனுக்குக் காண்பித்தான். ஓரமாகக் கிடந்த மாலை ஒன்றை எடுத்துக் கொண்டான். வேகமாக நடந்து வந்து விபூதியை எடுத்து அவர் நெற்றியில் இட்டான். குங்குமத்தில் பொட்டு வைத்தான். அவர் கைகளில் பொட்டலங்கள் கொடுத்தான். கழுத்தில் மாலை போட்டான்.

"சௌக்கியமா இருக்கணும்" என்று சொல்ல, பைக்குள் கைவிட்டு நூறுரூபாய் நோட்டு எடுத்து அவன் தட்டில் உத்தண்டி போட்டார். சட்டென்று அந்த நூறு ரூபாய் எடுத்து உள்ளங்கைக்குள் மடக்கி பிறகு வேட்டிக்குள் சொருகிக்

கொண்டான்.

தட்டில் விழுந்த பணம் பொதுப்பணம். அர்ச்சகர்கள் மூவரும் பிரித்துக்கொள்ள வேண்டும் என்றொரு கணக்கு இருந்தது. ஆனால், ராமசுப்ரமணியம் அந்த நூறுரூபாய் நோட்டை அமுத்திக் கொண்டான். பக்கத்திலிருந்தவர் பத்து ரூபாய் போட அதை எடுத்துக் கொண்டு மறுபடியும் கருவறைக்கு வந்தான். பத்து ரூபாயை எடுத்து கிண்ணத்தில் போட்டான். அவன் பத்து ரூபாய் கொண்டு வருவதும் கிண்ணத்தில் போடுவதும் காளிதாசனால் கவனிக்கப்பட்டன.

"ஒஹோ.. இந்தப்பக்கம் வந்து நாலுநாள்தான் ஆகறதா. ரொம்ப சந்தோஷம். அடிக்கடி வாங்கோ. மாமாக்கு நவாக்ஷரி வரைக்கும் தெரியுமாம். வருஷ கடைசியில ஷோடசி அபிஷேகம் பண்ணிக்கப்போறாராம். பெரிய சாக்த உபாசகராம்" காளிதாஸன் மிக ஸ்நேகமானவன்போல ராமசுப்ரமணியத்திடம் பேச, ராமசுப்ரமணியம் அப்படியா என்று தலையசைத்தான். கண்கள் உத்தண்டியையும் கவனித்துக் கொண்டிருந்தன.

உத்தண்டிக்கு மாலையும், குங்குமமும் ஸ்பெஷலாகக் கிடைத்தாலும் அந்தக் காளிதாசன் நகர்ந்து போனதின் கோபம் தீரவில்லை. உள்ளுக்குள் உறுத்தலாகவே இருந்தது.

"கோயில் நல்ல கோயில்தாம்ப்பா. ஐயருங்கதான் தப்பு. கொஞ்சம் அடக்கி வைக்கணும்" என்று சுற்றிவரும்போது நண்பர்களிடம் சொல்ல எதற்கெடுத்தாலும் தலையாட்டும் நண்பர்கள். இதற்கும் தலையாட்டினார்கள். நான்காம் சுற்று வரும்போது சீனுவாசன் அந்த மரத்தடியில் மின்சார விசிறிக்கும் கீழ் அமர்ந்திருந்தார். அவருக்கருகே உத்தண்டியும் வந்து உட்கார்ந்து கொண்டார். கோயிலில் உட்கார்ந்து போவது என்பது ஒரு மரபு. இங்கே மின்விசிறியும் இருக்கிறது. இந்த ஐயரும் இருக்கிறார். இந்த ஐயரின் மூலமாக அந்த காளிதாசனை விசாரிக்கலாம் என்று ஆரம்பித்தார்.

பெறுநர் :

திரு. மோகனசுந்தரம்,
கோவில் நிர்வாக அதிகாரி,
ஆயிரம்கண்ணி திருக்கோயில்.

பொருள் :

பக்தர்களை கோவில் அர்ச்சகர்கள் அவமானப் படுத்துவதும், புறக்கணித்துப் பேசுவதும்.

பல்வேறு காலகட்டங்களில் வந்த பெயரில்லாத விதம்விதமான புகார்கள்.

இங்குள்ள புகார்களை நன்கு ஊன்றி படித்து உங்கள் கோயில் அர்ச்சகர்களை கண்காணித்து புகார்கள் உண்மையா

என்பது பற்றி உடனடியாக ஆணையருக்கு நீங்கள் எல்லா தகவல்களும் தரவேண்டியது. ஆயிரம்கண்ணி கோவில் அந்தணர்கள் ஒருவேளை தவறாக நடந்திருந்தால் அவர்களுக்கு உடனடியாக எச்சரிக்கை கடிதம் கொடுக்க வேண்டியது. எச்சரிக்கை கடிதம் கொடுத்து நகலை ஆணையருக்கு அனுப்ப வேண்டியது என்று உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டிருந்தன.

கடைசியாக கோயிலில் உள்ள உண்டியலை திறந்து எண்ணுகின்ற தேதி குறிப்பிடப்பட்டிருந்தது. அறநிலையத் துறையிலிருந்து வரும் பதினாறு பேருக்கு காலையில் சிற்றுண்டியும், பிறபகலில் உணவும், மாலை போகும்போது காபியும் தரவேண்டும் என்ற கட்டளையும் அதில் இருந்தது.

மோகனசுந்தரம் படபடப்பானார்.

ஆயிரம்கண்ணி மறுபடியும் சிரித்தாள்.

"நாலாயிரம் ரூபாய் புடவைய எண்ணூறு போட்டு எடுத்துகிட்டார் பார்த்தியா."

"யாரு."

"யாரு.. நம்ம நிர்வாக அதிகாரிங்கதான்."

"ஏலத்துலதானே விடணும்."

"ஏலத்துல விட்டாமாதிரி எழுதிகிட்டாரு."

காளிதாசன் தகப்பனார் விஸ்வநாதசிவாச்சாரியார் கோயிலின் பின்புறத்தில் கன்னியப்பனோடு ரகசியம் பேசினார்.

"அப்படியா."

கன்னியப்பன் அதிசயப்பட்டதுபோல் நடித்தான். ஆனால், அவன்தான் எண்ணூறு ரூபாய்க்கு எடுத்துக் கொள்ளலாம் என்று மோகனசுந்தரத்திடம் புடவையைக் காட்டினான். "இருநூறு ரூபா போதும் ஸார். எதுக்கு எண்ணூறு ரூபாய்."

எண்ணூறு ரூபாய் என்று கணக்கு எழுதியபோது அவன் அவருக்கு ஆதரவாகப் பேசினான்.

"சரி. ஐயரே நம்ம ஈ.வோ.தானே அதனால என்ன."

"நம்ம ஈ.வோதானே அப்படின்னு சொல்றியா.. நீ கேட்டுப்பாரு. ஒரு புடவை வேணும் என் பொண்டாட்டிக்கு. சல்லீசா கொடு அப்படின்னு கேட்டுப்பாரு. ஆயிரம் சட்டம் பேசுவான். நம்மளையே போட்டுக்கொடுப்பான். என்னைப் பத்தி எவனோ மொட்டை கடுதாசி எழுதியிருக்கானாம். அதை என்னான்னு இவன் விசாரிக்கப் போறானாம். வந்து விசாரிக்கட்டும். அன்னிக்கு நடக்கற ரகளைய பாரு."

"அப்படியா எந்த பேமானி எழுதினது."

"அதுக்கு ஆயிரம் பேர் இருக்கான்."

"உங்களைப்பத்தி எழுதறதுக்கு என்னா இருக்கு."

கன்னியப்பன் ஆவலாகக் கேட்டான்.

"குங்குமம் கொடுக்கலை. குங்குமம் கொடுத்தா விபூதி கொடுக்கலை. விபூதியோட வேப்பிலை கொடுக்கலை. ஏதாவது சொல்லுவானுங்க. உடம்பு முழுக்க கண்ணு கண்ணு அம்மை போட்டிருக்கு. அந்த குழந்தைய தூக்கி அம்மா காலுங்கீழ் போடணும்னு ஒருத்தி வரா. இப்போ வராதம்மா வீட்டோடயே வச்சுக்கோ. மூணுதடவை தலைக்கு விட்டபிறகு வேப்பிலை கொத்தோட கொண்டுவா அப்படின்னு சொன்னேன்.

அவளுக்கு கோபம் வந்துடுச்சு. எனக்குத் தெரியாதா சமயபுரத்துல எத்தனை பேர் இப்படி படுத்திருக்காங்க அப்படின்னு சட்டம் பேசறா. சமயபுரம் வேற, இது வேற அப்படின்னு சொன்னா லெட்டர் எழுதி போட்டுடறா."

"ஆமா.. ஆமா.. வர வர ஜனங்களுக்கு ஆத்திரம் ஜாஸ்தியாப் போயிடுச்சு."

"பத்து ரூபா தட்டுல போட்டா சிவாச்சாரியார் உங்க முன்னாடி டான்ஸ் ஆடணும். கூப்பிட்ட குரலுக்கு ஓடி வரணும். இதுக்கு வேற ஆளைப்பாருடான்னுட்டேன்."

வாழ்க்கையில் எந்தப்பிடிப்புமே இல்லாமல் இருந்தபோது கன்னியப்பனுக்கு இந்தக்கோயில் வேலை கிடைத்தது. அவன் அம்மா பத்து தேய்த்துக் கொண்டிருந்த வீட்டில், அவளை அழைத்து இப்படி ஒரு வேலை இருக்கிறது என்று சொல்ல அவன் அவர்கள் குறிப்பிட்ட அலுவலகத்திற்குப்போய் பல நாட்கள் நடையாக நடந்து, வாசலில் நின்று அவர்கள் ஏவிய பணியைச் செய்து ஆறேழு மாதம் கழித்து இங்கு தற்காலிக வேலையாக நியமிக்கப்பட்டு நான்கு வருடங்கள் கழித்து நிரந்தரப்பணியில் நியமிக்கப்பட்டான்.

வேலை நிரந்தரமானபிறகு திருமணம் செய்து கொண்டான். அவன் திருமணம் செய்துகொண்ட பிறகு அம்மா வேலைக்குப் போவதை நிறுத்திக்கொண்டாள். சம்பளம் அதிகமில்லைதான். ஆனாலும், அரசாங்க உத்தியோகம்.

கோயிலுக்கு சர்க்கரைப் பொங்கலும், வெண்பொங்கலும் தினந்தோறும் யாராவது செய்வார்கள். சுண்டல், வடை என்று போடுவார்கள். வெறும் பட்டை சாதம்கூட சில நாட்களில் கிடைக்கும். எனவே, பட்டினி கிடக்க வேண்டியது என்பது அறவே இல்லாமல் போயிற்று. சோற்றுக் கவலை ஒழிந்ததோடு மட்டுமில்லாமல் அவ்வப்போது இனாமாக காசுகளும் கிடைத்தன. பணக்காரர்களுக்கு வழிவிட்டால், கார் கதவு திறந்துவிட்டால், அவர்கள் கைக்கூடையை வாங்கிக் கொண்டால், அந்த வீட்டிற்கு பிரசாதங்களை கொண்டுபோய் கொடுத்தால் அவர்கள் இனாம் கொடுப்பார்கள்.

அவன் பணி நிரந்தரமான அன்று, அவன் அம்மா அவனுக்கு மூன்று கட்டளைகள் கொடுத்தாள்.

"இதோ பார் கோயில்ல வேலை செய்யற. அதுவும் அம்மன் கோயில்ல வேலை செய்யற. அதனால ஒரு நாளும் குடிக்காத. சூது ஆடாத. பொண்டாட்டியத்தவிர வேற பொம்பளைய ஏறெடுத்தும் பார்க்காத. நல்லா சாப்பிடு. நீயும் நானும் நல்லா சாப்பிடணும். நம்ம குடும்பம் நல்லா சாப்பிடணும்னுதான் ஆத்தா அந்த வேலை வாங்கி கொடுத்திருக்கா. அவ சொத்தை திருடாத. எவ்வளவு முடியுமோ அத்தனை பாதுகாப்பா இருந்து அவ சொத்தை காப்பாத்து. இதான் உனக்கு வேலை. எல்லாருக்கும் கிடைக்கற பாக்கியமாடா இது. உனக்கு கிடைச்சுருக்குடா. உபயோகப்படுத்திக்க. இந்த ஜென்மத்துல பெரிய பணக்காரனா ஆகறயோ இல்லையோ அடுத்த ஜென்மத்துல பெரும் பணக்காரன் ஆயிடலாம்."

அம்மா சொன்னது நல்லவேளையாக அவனுக்குப் புரிந்து போயிற்று. கோயிலுக்குண்டான வேலைகளைச் செய்வதில் கன்னியப்பன் துடிப்பாகவே இருந்தான். சில சமயம் காலை ஆறு மணிக்கு வந்தால் இரவு பன்னிரெண்டு மணிக்குத்தான் வீட்டுக்குப் போகமுடியும். மறுபடியும் ஆறு மணிக்கு வரவேண்டியிருக்கும். உழைப்பதுபற்றி அவன் கவலைப்படாமல், இந்த வேலையை சம்பளத்திற்கான வேலை அல்ல, சந்தோஷத்திற்கான வேலை என்று ஈடுபட்டு வந்தான். அப்படி ஈடுபடாதவர்களை அவன் கேலியாகவே பார்த்தான். அவனுக்கு வாழ்க்கை திருப்தியாக, சந்தோஷமாக இருந்தது. அதனாலேயே அவனிடம் குறும்புகள் இருந்தன. ஆளுக்குத் தகுந்ததுபோல் பேசி, கொம்பு சீவிவிட்டு இரண்டு பேர் முட்டிக்கொள்வதை வேடிக்கை பார்க்கின்ற ஒரு குணம் அவனுக்கு இயல்பாகவே இருந்தது. அந்தக்கோயில் வேலையில் அதை அவன் தீவிரப்படுத்திக் கொண்டான்.

"ஒரு கோயில்னா ஐயர்தான் முக்கியம். அங்க இருக்கற ஐயரையே அலட்சியம் பண்ணிட்டா அப்புறம் என்ன கோயில். என்னா நான் சொல்றது" என்று அவன் கேட்க விஸ்வநாத சிவாச்சாரியார் நெஞ்சை நிமிர்த்திக்கொண்டு மறுபடியும் கருவறைக்குப் போனார்.

'நகரு.. நகரு.. நகரு..' என்று கருவறையை சுற்றியுள்ளவர்களை அதட்டினார். பலபேருக்கு அது பிடிக்கவில்லை. கன்னியப்பன் சட்டென்று அலுவலக அறைக்குப் போனான்.

"ஸார், இந்த சிவாச்சாரியார் பேசறது ரொம்ப அதிகம். எங்கயோ அடிபடப்போறாரு. கோயிலுக்கு கெட்டப்பேர் வரப்போகுது. ஜனங்களை ரொம்ப மோசமா நடத்தறார் ஸார்.

நீங்க ஒரு தடவை எச்சரிக்கை பண்றது நல்லது."

"என்னாடா ஆச்சு உனக்கு, திடீர்னு வந்து அவரைப்பத்தி குறை சொல்ற."

"அவரு உங்களைப்பத்தி சொல்றாரே."

"என்ன."

அவன் பட்டுப்புடவையைப்பற்றி அவர் சொன்னதைச் சொன்னான். அவர் திடுக்கிட்டார்.

"அதான் சொன்னேன் வேணாம்னு. அம்மா கேட்டா கொடுங்க. அம்மா கேட்டா கொடுங்கன்னு என் தலையில கட்டின. நாலாயிரம் ரூபா புடவைய நீ சொல்றபடி இருநூறு ரூபா எடுத்துண்டிருந்தாக்க இந்நேரம் அது பெருசாயிட்டிருக்கும்டா. நான் எண்ணூறு ரூபா எழுதியிருக்கேன். எனக்கு அதுவே பயமாயிருக்கு."

"ஒண்ணும் பயப்படாதீங்க ஸார். யார் யாரோ என்னென்னமோ சாப்பிடறாங்க. நீங்க சும்மாவா எடுத்துகிட்டு போறீங்க. எண்ணூறு ரூபா கட்டிட்டுதானே புடவை எடுத்துகிட்டு போறீங்க. போங்க."

"நாலாயிரம் ரூபா புடவைடா."

"சும்மா பில் நாலாயிரம்னு போடுவான். அதுல டிஸ்கௌண்ட்டே முப்பது பர்ஸெண்ட் தராங்க. மூவாயிரம்தான் அதனோட விலை. மூவாயிரம் ரூபா புடவையில லாபம் போக அசல் பார்த்தீங்கன்னா ரெண்டாயிரம். ரெண்டாயிரம் ரூபா புடவைய எண்ணூறு ரூபாய்க்கு ஒருத்தர் ஏலத்துல எடுக்கக்கூடாதா. அது பெருசு இல்லையா. அது அநியாயமா. நீங்க ஏன் ஸார் பயப்படறீங்க."

"சிவாச்சாரியார் மேல விசாரணை நடத்தச்சொல்லி அரசாங்கத்துலேர்ந்து லெட்டர் வந்திருக்குடா."

"எடுத்துடுங்க ஸார். இல்லைன்னா அசிங்கமாத்தான் ஆகும்."

அன்று மாலை கோவில் சார்த்தும் வேளை மூன்று சிவாச்சாரியார்களையும் மோகனரங்கம் கூப்பிட்டு விலாசமில்லாத, பெயரிடப்படாத கடிதங்கள் வருகிறதென்றும், சிவாச்சாரியார்களைப்பற்றி புகார்கள் இருக்கிறதென்றும், வேறு எவரைப்பற்றியும் புகார்கள் இல்லாமல் அர்ச்சகர்கள்பற்றியே புகார்கள் வருவது தனக்கு வேதனை அளிக்கிறது என்றும் சொல்ல, "யார் காண்பிங்க. யார் புகார் எழுதியிருக்கா காண்பிங்க." விஸ்வநாதன் உரக்கக் கத்தினார். கோயிலில் உள்ளவர்கள் திரும்பிப் பார்த்தார்கள்.

"கத்திப் பேசாதீங்க. இது கோயில்."

"எனக்குத் தெரியும்.. நான் என்ன பண்றேன்னு. இது கோயில்னு எனக்கு சொல்லித்தரேளா. மூணுவேளை பூஜை

பண்றவன் நான்."

மோகனசுந்தரத்திற்கு அந்தக் கூச்சல் லேசான பயத்தைக் கொடுத்தது.

அவர் அமைதியாகவும், நிதானமாகவுமே பிரச்சினைகளை தீர்க்க எண்ணினார்.

"ஏன், கோவப்படறீங்க. மெல்லப் பேசுங்க."

விஸ்வநாதனிடம் பிரியமாகப் பேசினார். அந்தப் பிரியத்தை தொடை நடுக்கம் என்று விஸ்வநாதன் எடுத்துக் கொள்ள அவரிடமிருந்து வேகமாக சொற்கள் வந்து விழுந்தன. கோவிலைச்சுற்றி நடப்பவர்கள் நின்று, அவர் பேசுவதை கவனித்தார்கள்.

"மேல புகார் சொல்ற பொட்டக்கம்மனாட்டி அவன் பேரும் அட்ரஸும் போட்டிருக்கணும். பேரும் அட்ரஸும் போடலேன்னா அது புகாருன்னு நீங்க எடுத்துக்கப்படாது."

"நான் எடுத்துக்கலிங்க. அரசாங்கம் எடுத்துக்குது."

"அரசாங்கத்தையும் நான் பொட்டைன்னுதான் சொல்லுவேன்."

"நீங்க இப்படியெல்லாம் பேசக்கூடாது. வயசுல பெரியவங்க நிதானமா பேசுங்க. கோயில்ல கெட்டவார்த்தை பேசறீங்களே."

"என்னை குத்தம் சொல்லிட்டா நான் என்ன உங்க கால்ல விழுந்து நமஸ்காரம் பண்ணணுமா. எழுத்து மூலமா நேரடியா சரியான புகார் இருக்கணும்.. இல்லைன்னா நான் அப்படித்தான் கத்துவேன்."

அலுவலகத்தில் அவர் உரக்கக் கத்தியது சற்றுத் தொலைவில் உற்சவர் சன்னதிக்கு எதிரே கண்மூடி உட்கார்ந்து வாராஹிஜபம் செய்து கொண்டிருந்த சீனுவாசன் காதில் விழுந்தது.

யாரது இத்தனை ஆபாசமாக கோவிலில் பேசுவது என்று கண்திறந்தார். பேசுவது ஒரு அர்ச்சகர் என்றதும் அவருக்கு மெல்ல ஒரு கோபம் எழுந்தது. அந்தப் பேச்சை கவனிக்கத் துவங்கினார்..

"இந்தக் கோயில்ல ஆயிரம் தப்பு நடக்கறது. அதைக் கேட்கறதுக்கு ஆள் இல்லை. நான் நகருடான்னு சொன்னாக்க, அதுக்கொரு மொட்டை கடுதாசி வரும். அந்த மொட்டை கடுதாசியை வச்சுண்டு என்னை விசாரிப்பேளா. நீங்க விசாரிச்சது தப்பு. அது பெரிய குத்தம். சுவாமி குத்தம். சிவாச்சாரியார்னா என்ன சும்பன்னு நினைச்சுண்டிருக்கேளா. பார்ப்பான்னா பயந்து ஓடுவான்ற ஒரு எண்ணமா. இதெல்லாம் வேற எங்கேயாவது வச்சுக்கோங்க. நான் நல்லவனுக்கு நல்லவன். கெட்டவனுக்கு கெட்டவன்."

விஸ்வநாதன் உரக்கக் கத்தினார். சீனுவாசனுக்கு அந்த வார்த்தைகள் கோபத்தைக் கொடுத்தன. ஒரு கோயிலில் அதன் அர்ச்சகரே உரக்கக் கத்தினால், ஆபாசமாகப் பேசினால், அலட்டலாக நடந்து கொண்டால் அந்தக் கோயிலுக்கு என்ன மதிப்பு. என்ன மரியாதை.

விஸ்வநாதன், கன்னியப்பனைப் பார்த்துக்கொண்டே கருவறை நோக்கி நடக்க காலில் ஒரு பிளாஸ்டிக் பக்கெட் இடறியது.

அவர் நிலை தடுமாறினார். எதன் மீதோ முட்டிக்கொண்டு நிமிர்ந்தார். முட்டிக்கொண்ட இடம் வலித்தது. அவர் கோபம் தலைக்கேறியது.

"எந்த நாய் இங்க பக்கெட் வச்சது." திரும்பி வந்து பக்கெட்டை எட்டி உதைத்தார். பக்கெட் பறந்துபோய் சுவரில்பட்டு பளிச்சென்று இரண்டாகப்பிளந்து தரையில் விழுந்தது. இதுவும் மிக ஆபாசமாக இருந்தது. பக்கெட் எடுக்கவந்த அம்சவேணி திடுக்கிட்டு நின்றாள்.

அந்த பக்கெட்டை உதைத்தது அவளையே உதைத்தது போல் இருந்தது.

அம்சவேணி அந்தக் கோயிலில் பெருக்குகிறவள். அவளைப்போல இன்னும் மூன்றுபேர் பெருக்குகிறவர்கள் இருந்தார்கள். பத்து தேய்க்கக்கொடுத்து, சமையல் பாத்திரங்கள் தேய்க்கக்கொடுத்து, மொத்த கோவிலையும் பெருக்கி மெழுகி, தேவையானால் கோலம் போட்டு சுத்தமாக வைத்திருக்க அவளால் ஆனது அத்தனையும் அவர்கள் செய்வார்கள்.

பன்னிரெண்டு மணிக்கு கோவில் பகல் வேளையில் மூடுகிற நேரம் வேகமாகப் பெருக்கி, குழாய் பொருத்தி எல்லா இடங்களிலும் அடித்து நூல் துடப்பம்போட்டு அழுத்தித் தேய்ப்பார்கள். அது நான்கு மணிக்குள் காய்ந்துவிடும். மறுபடியும் ஒருமணி நேரத்தில் அழுக்காகிவிடும். இரவு ஒன்பது மணிக்கு மறுபடியும் பெருக்கி கழுவுவார்கள். காலையில் இன்னும் சுத்தமாக இருக்கும். நாள் கிழமைகளில் மட்டும் எல்லா விளக்குகளையும் புளிபோட்டு துலக்க வேண்டும்.

காலையில் வீட்டு வேலைகளை முடித்துவிட்டு நிதானமாக கோவிலுக்கு வந்தால் போதும். கோவிலில் கிடைக்கின்ற பிரசாதத்தை வயிறு நிறைய சாப்பிட்டு அங்கேயே மின்விசிறிக்கு அருகில் படுத்துக்கொண்டு, பிறகு வீட்டுக்குப் போய் குழந்தைகள் வருவதை கவனித்து, வீடு சுத்தம் செய்து, துணி தோய்த்து உலர்த்திவிட்டு, புருஷன் வந்ததும் சோறு

போட்டு எட்டுமணிக்கு மறுபடியும் கோயிலுக்கு வந்து பெருக்கத் துவங்கினால் ஒன்பதரை மணிக்கு டி.வி. பார்க்க வீட்டிற்குப் போய்விடலாம்.

ஒன்றுமே இல்லாததற்கு இந்தக் கோயில் வேலை மிக மரியாதை. சுமாரான காசு. நிறைய பிரசாதங்கள். நிறைய அபிஷேகமும் சுவாமி புறப்பாடும் ஹோமமும் செய்ய காசு கட்டுகிறவர்கள் இவள் போன்ற ஊழியர்களுக்கும் காசு கொடுப்பார்கள். சம்பளமாக வருகிற காசை அரிசியாக வாங்கிப் போட்டு விடுவாள். இனாமாக வருகிற காசை ஜாக்கிரதையாக சேர்த்து வைத்துக் கொள்வாள். மற்றதற்கு அம்சாவின் புருஷன் எலக்ட்ரிஷியனாக இருந்து சம்பாதித்தான்.

ஆயிரம்கண்ணி புண்ணியத்தில் வீடு எந்தக் கவலையுமில்லாமல் போய்க்கொண்டிருந்தது.

மூத்தது பெண். இரண்டாவது பையன். எனவே, கொஞ்சம் தங்க நகை சேர்க்க வேண்டுமே என்ற கவலைதான் அவளுக்கு இருந்தது.

இந்தக் கோயில் வேலையில் ஆளாளுக்கு வரும் கோபத்தை இவள் போன்ற பெருக்குகிறவர்களிடம்தான் காட்டினார்கள். இன்னிக்கு எவன் கத்தப்போறானோ, எதுக்கு கத்தப்போறானோ என்ற பயத்தோடுதான் அவள் தினந்தோறும் கோயிலுக்குள் நுழைவாள். அவர் பக்கெட்டை உதைத்தது தன்னையே எட்டி உதைத்தது போலத்தான் அவளுக்குப்பட்டது.

"ஐயா, சும்மா போக முடியலையா உன்னால. நீ எங்கயோ பார்த்து இதுல வந்து முட்டிகிட்டு இதை எட்டி உதைக்கற, உடைஞ்ச பக்கெட்டுக்கு யார் பதில் சொல்லுவா." கோபத்தில் அம்சவேணி கத்தினாள்.

"செருப்புப் பிஞ்சுடும். நாற நாய.. யாரைப் பார்த்து கைநீட்டி பேசற."

விஸ்வநாதன் பலம் கொண்ட மட்டும் கத்தினார்.

கோயில் திடுக்கிட்டு எழுந்து நின்றது. எல்லோரும் விஸ்வநாதனையே பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

"பக்கெட் வைக்கற இடமாடி இது. அறிவிருக்கா உனக்கு. சோறு திங்கறயா. வேற ஏதாவது திங்கறயா."

"கோவில்ல உட்கார்ந்து என்னென்னமோ பேசறீங்க."

யாரோ ஒரு மத்திமவயது உள்ளவர் விஸ்வநாதனை அடக்க முற்பட்டார்.

"பேசவேண்டா. உனக்கென்ன. உன் வேலையை பார்த்துண்டு போ."

"நன்னாவேயில்லை."

"நன்னாயில்லைன்னா ஒரு பெட்டிஷன் எழுதிப்போடறா. விஸ்வநாதன் கத்தறான் அப்படின்னு அரசாங்கத்துக்கு எழுதிப்போடு. ஒருத்தனும், ஒண்ணும் பிடுங்க முடியாது."

அவர் அசிங்கமாக இடுப்புக்குக் கீழ் சைகை செய்தார்.

கோவிலில் உள்ளவர்கள் திகைத்தார்கள். சீனுவாசனுக்கு கோபம் அதிகமாயிற்று.

மோகனசுந்தரம் மடமட வென்று தன் அலுவலகம் விட்டு வெளியே வந்தார்.

"என்னாங்க விஸ்வநாதன்.. என்ன பேசறீங்க. இது கோயிலா என்ன. உங்களால வாயை மூடிட்டு சும்மா இருக்க முடியாதா. கண்டமேனிக்கு பேசறீங்க. அந்தம்மா இந்த கோவில் ஸ்டாஃப். எதுனா பிரச்சினைன்னா எங்கிட்ட சொல்லுங்க."

"உங்ககிட்ட சொல்ல வேண்டிய அவசியமில்லை ஸார். அந்தம்மா தப்பு பண்ணாங்க நான் கேட்கறேன். இங்க யார் தப்பு பண்ணாலும் நான் கேட்பேன். கோவில் வலம் வர இடத்துல எச்ச பக்கெட், குப்பை பக்கெட் வைக்கக்கூடாது."

"அது எச்ச பக்கெட்டா. குப்பை பக்கெட்டா. தண்ணி வைக்கற பக்கெட். எட்டி உதைச்சு சுவத்துல அடிச்சு, பாருங்க ரெண்டா பொளந்து போச்சு."

"ஏன் ஸார் அதை எட்டி உதைச்சீங்க."

"வழியில வச்சா எட்டி உதைப்பேன்."

விஸ்வநாதன் நிர்வாக அதிகாரியிடம் வேகமாகப் பேசினார்.

நிர்வாக அதிகாரி மோகனசுந்தரத்திற்கு மறுபடியும் தயக்கம் ஏற்பட்டது. பெரிதுபடுத்துவதா வேண்டாமா. சட்டென்று உள்ளுக்குள் கரம் கூப்பினார்.

'தாயே.. நான் அமைதியாகவும், அன்பாகவும் இங்கே அலுவல்களை செய்ய ஆசைப்படுகிறேன். ஆனால், இது முடியாதுபோல் இருக்கிறது. மிக முக்கியமான இடத்திலிருந்து மிகத் தவறான ஒரு செய்கை நடந்து கொண்டிருக்கிறது. நான் என்ன செய்வது. என் கடுமையை நான் காட்டித்தான் ஆகவேண்டும். என்னை மன்னித்துக்கொள் தாயே.'

"இதுதான் கடைசி வார்னிங். இன்னொரு தடவை கத்தி பேசினீங்கன்னா.. உங்களை வேலையைவிட்டே சஸ்பெண்ட் பண்ணுவேன்."

அதிகார தோரணையோடு ஒருவிரல் நீட்டி விஸ்வநாத சிவாச்சாரியாரிடம் பேச இப்போது காளிதாசன் வெளியே வந்தான்.

"அப்புறம் பூஜைய யார் பண்ணுவா. உங்கப்பன் பண்ணுவானா."

காளிதாசன் கேட்டான்.

"அதைப்பத்தின கவலை உங்களுக்கு இல்லை. நீங்களும் தப்பா பேசறீங்க. இத்தோட நிறுத்திக்கோங்க."

"என்னடா தப்பு பண்ணிட்டார். வழியில பக்கெட்டை வச்சா எட்டி உதைக்கறது தப்பா. ஏன் வச்சேன்னு கேட்கறதுக்கு உங்களுக்கு துப்பு இல்லை. பொம்பளை என்ன பண்ணாலும் ரைட்டுன்னு ஒரு நிர்வாக அதிகாரி இருந்தா அதைவிட கேவலம் என்னடா உண்டு." என்று சொல்ல அந்த விஷயம் திசை திரும்பிப் போயிற்று.

அம்சவேணி கோபம் அடைந்தாள்.

"தப்பு செய்யறவங்களை கண்டிக்கறதுதான் என் வேலை."

"அம்சவேணி தப்புசெய்தா கண்டிக்கவே மாட்டாங்களா. அம்சவேணி இங்க பக்கெட் வச்சது ரைட்டா. அம்சவேணி என்ன பண்ணாலும் ரைட். நாங்க என்ன பண்ணாலும் தப்பா. இதென்ன நியாயம். என்னத்த மனசுல வச்சுண்டு இந்த மாதிரி நடக்கறீங்க."

பேச்சு அசிங்கமாய் திசைமாறிப்போக அங்குள்ளவர்கள் பலபேர் கலைந்து போனார்கள்.

"இனிமேல் கோவிலுக்கு வரக்கூடாதுப்பா. இப்படி ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விதமா சண்டை. ஒவ்வொரு விதமா கூச்சல். நமக்குள்ள ஆயிரம் பிரச்சினைகள். இங்க வந்து நிம்மதியா பேசலாம்னாக்க கத்து கத்துன்னு கத்தறாங்க. நான் இனிமே இந்தக் கோவிலுக்கு வரப்போறதில்லை. வேற கோவிலுக்கு போறேன். பக்கத்துலயே வீரபத்திரர் கோவில் இருக்கு. யாருமே வரமாட்டா. நான் பாட்டுக்க உட்கார்ந்துண்டு எதையாவது நினைச்சுண்டிருக்கலாம்."

ஒரு அம்மாள் தனக்குத்தானே பேசிக்கொண்டு போனாள்.

ஆயிரம்கண்ணி மெல்லச் சிரித்தாள். அந்தச் சிரிப்பில் கோபம் இருந்தது. அந்தக்கோபம் சீனுவாசனுக்குள் புகுந்து நிற்க, சீனுவாசனுடைய நெற்றி நரம்புகள் புடைத்தன. கன்னக்கதுப்புகள் அசைந்தன. காது சூடாயிற்று. கண்கள் கூர்மையாயின.

அவர் எழுந்தார். துண்டு உதறினார். தோளில் போட்டுக் கொண்டார். அந்த சண்டை நடக்கும் இடத்திற்கு அருகே போய் நின்று கொண்டார்.

விஸ்வநாதனையும், காளிதாசனையும் உறுத்துப் பார்த்தார்.

"ஒரு அந்தணன் கோவில்ல இத்தனை ஆபாசமா பேசக்கூடாது."

நிதானமாக சொற்கள் உதிர்த்தார்.

"போடா மயிரு.."

காளிதாசன் அவர் நெஞ்சில் கைவைத்துத் தள்ளினான்.

சீனுவாசன் நிலைதடுமாறி பொத்தென்று தரையில் விழுந்தார். அம்சவேணி ஓடிப்போய் அவரைத் தூக்கிவிட்டாள்.

"என்னங்கய்யா இது. கேட்பார் இல்லையா. நீங்க பண்றது தப்புன்னு ஒரு பெரியவர் வந்து சொல்றாரு. நெஞ்சுல கை வச்சு ஒரு சின்னப்பையன், ரெண்டாங்கட்டான், பொட்டை இப்படி பேசறானே. நல்ல ஜாதியில பிறந்தவன் அப்படித் தள்ளுவானா."

தள்ளாடி எழுந்த சீனுவாசனை சுவரோரம் நிற்க வைத்தாள்.

காளிதாசன் அவளை நோக்கி முன்னேறினான்.

"என்னடி .. யாரை பொட்டைங்கற."

பளீரென்று அவள் கன்னத்தில் அறைந்தான்.

அவள் கன்னத்தை பொத்திக்கொண்டு தடுமாறி சுவற்றில் முட்டிக்கொண்டாள்.

அம்சவேணியின் புருஷன் மிகக் கோபமானவன். எந்த இடத்திற்கு வேலைக்குப் போனாலும் சண்டையோடுதான் திரும்பி வருவான். ஆனால், அவன் அம்சவேணியின் மீது உயிரையே வைத்திருந்தான். புருஷனை அடக்கி ஒரு நெறிக்குக் கொண்டுவருவதே அம்சவேணியின் வாழ்க்கை குறிக்கோளாக இருந்தது. இப்பொழுது அவள் வாங்கிய அறை முற்றிலும் வேறுவிதமான சிந்தனையை அவளுக்குள் ஏற்படுத்தியது. இந்த அறையோடே அலறிக்கொண்டே ஓடிப்போய் அவன் எங்கே வேலை செய்கிறானோ அங்கு தலைவிரி கோலமாக நின்று அடிச்சிட்டாண்டா.. என்னை அடிச்சிட்டாண்டா.. என்னை அடிச்சு கொன்னுட்டாண்டா என்று அலறினால் போதும். அவன் எந்த ஆயுதம் கையில் கிடைக்கிறதோ அதை எடுத்துக்கொண்டு ஓடிவருவான். அவளை யார் அடித்தான் என்று சுட்டிக்காட்டுகிறாளோ அவனை அதே இடத்தில் கண்டம் துண்டமாக வெட்டுவான்.

சொல்லிவிடலாமா.. செய்து விடலாமா.. செய்து விடலாமா.. அம்சவேணி ஆத்திரத்தோடு முன்னும், பின்னும் அலைந்தாள். அப்படி அலையும்போது ஒரு கணம் கருவறையிலிருந்து ஆயிரம்கண்ணி அவளைப் பார்ப்பது அவள் கண்ணில்பட்டது. ஒரு கணத்திற்கும் குறைவான அந்த நேரத்தில் 'அம்சவேணி சும்மாயிரு' என்பதாய் ஒரு உத்தரவு வந்தது. அம்சவேணி சட்டென்று அமைதியானாள்.

'ஒருத்தன் போட்டு அடிப்பான். நீ பார்த்துகிட்டிருப்பியா.'

அவள் மறுபடியும் திரும்பி ஆயிரம் கண்ணியைப் பார்த்தாள்.

ஒரு கால் மடித்து ஒரு காலை தரையில் ஊன்றி நிற்கின்ற ஆயிரம் கண்ணி சட்டென்று அசைந்தாள். அம்சவேணி உற்றுப்

பார்த்துக் கொண்டிருக்கும்போதே இரண்டு கால்களையும் ஊன்றி எழுந்து வந்தாள்.

அம்சவேணிக்கு பயம் ஏற்பட்டது. சுருண்டு விழுந்தாள். அடிதாங்காமல் அவள் விழுந்து விட்டாள் என்று எல்லோரும் நினைத்துக் கொண்டார்கள். மயங்கி தரையில் விழுந்து விட்டாலும் அம்சவேணிக்கு ஆயிரம்கண்ணி நடந்து வருவது தெள்ளத் தெளிவாகத் தெரிந்தது. இன்னும் தெளிவாகத் தெரிவதற்கே தான் மயங்கி விழுந்து விட்டோம் என்பதும் புரிந்தது.

அம்சவேணியை தாண்டிக்கொண்டு புடவை அவள் முகத்தில் உரச ஆயிரம்கண்ணி சீனுவாசனுக்கு அருகே போனாள். சூலம் எடுத்து சுழலவிட்டு சீனுவாசன் நெற்றியில் ஆழப் பதித்தாள். சட்டென்று மறைந்து போனாள். யாரோ அம்சவேணியைத் தூக்கி முகத்தில் தண்ணீர் தெளித்தார்கள். அம்சவேணி புரண்டு எழுந்தாள். கருவறையை நோக்கி ஓடினாள். கைகூப்பினாள்.

'அம்மா.. அம்மா..' என்று வாக்கியம் வராமல் அழுதாள். சொல்ல முடியாமல் நன்றி சொன்னாள். சட்டென்று மனம் தெளிவாயிற்று. கைநீட்டி தன்னை அடித்தவனை ஆயிரம்கண்ணி சும்மா விடமாட்டாள். அவள் உயிரோடு இருக்கின்ற தேவதை. பேசும் தெய்வம். நல்லவரைப் போற்றுகின்ற நாயகி. வேகமாக நடந்துபோய் இரண்டான பக்கெட்டை எடுத்து குப்பைத் தொட்டியில் போட்டுவிட்டு. குத்துவிளக்கை புளியைக் கலந்து அழுக்கைத் தேய்க்க ஆரம்பித்தாள். யார் என்ன செய்தாலும், யார் என்ன சொன்னாலும், என் வேலை இது. நான் இதைச் செய்வேன் என்று தெள்ளத் தெளிவாய் தன் வேலையில் இறங்கினாள்.

அந்த நிர்வாக அதிகாரியின் நேரடி குமாஸ்தா குணாளன் திகைத்துப்போய் நின்றிருந்தார்.

"போலீஸுக்கு போன் பண்ணலாமா" என்று டெலிபோனைப் பிடித்து எண்களை அழுத்துவதற்காக காத்திருந்தான்.

அங்கே வேகம் குறைந்துவிட டெலிபோனை கீழே வைத்துவிட்டு அருகே வந்தான்.

"என்ன ஸார் பண்ணலாம். போன் பண்ணலாமா."

"பண்ணிட்டியா."

"பண்ணலை."

"நல்லவேளை விட்டுடு."

"இவர் யார் ஸார் வரவங்களை அடிக்கறாரு. வேலை செய்யறவங்களை கன்னத்துல அறையறாரு. இதைக்

கேட்கறதே இல்லையா."

"நான் இன்னிக்கு லெட்டர் எழுதி போட்டுடறேன்."

"நீங்க என்னிக்கு லெட்டர் எழுதிப்போட்டு என்னிக்கு ஆக்ஷன் எடுப்பாங்க."

"ஏன் போலீஸுக்கு போன் பண்ணலாம்னு சொல்றயா."

"பண்ணிடுங்க ஸார்."

"கோயில் பேர் கெட்டுப்போயிடும். இந்தக் கோயில்ல அடிதடி ஆச்சு அப்படின்னு இந்த ஊர் முழுக்க தெரியும். பட்டணம் முழுக்க பரவும். கோயிலுக்கு வரவங்க குறைஞ்சுடுவாங்க. அது நமக்கும் நல்லதில்லை. கோவிலுக்கும் நல்லதில்லை. நம்ம பேர் கெட்டுப்போனாக்கூட பரவாயில்லை. கோயில்பேர் கெட்டுப் போகக்கூடாது."

"நீங்க சொல்றது ரொம்ப கரெக்ட்."

பின்னால் நின்றிருந்த சீனுவாசன் மோகனசுந்தரத்தின் முதுகில் கைவைத்தார்.

"ஒரு அந்தணன் தவறு செய்தா அவனுக்கு அதிகபட்ச தண்டனை, மிக விரைவான தண்டனை கிடைக்கும்னு சாஸ்திரங்கள் சொல்றது. அவர் சீக்கிரம் அனுபவிப்பார். போலீஸ் வேண்டாம்" என்று சொல்லிவிட்டு விலகி வந்தார்.

மறுபடியும் துண்டை மடித்துக் கீழே போட்டார். உட்கார்ந்து கொண்டு கோபம் முழுவதும் தேக்கி நெஞ்சில் சுருட்டி வைத்துக் கொண்டார். மெல்லச் சிரித்தார்.

'நீ எங்க போயிருந்தாய். இதுவே சமயம் வா தாயி. எனக்கு பயமாக இருக்கிறது. வா.. உடனே வா.'

**ஐம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் தும் உத்திஷ்ட புருஷி கிம்**
**ஸ்வபீஷி பயம்மே சமுபஸ்திதம் யதி சக்யம்**
**அசக்யம் வா தன்மே பகவதி சமய சமய ஸ்வாஹா.**

என்று மந்திரத்தால் தெய்வத்தை அழைத்தார்.

அவருடைய கோபம் நடுநிலையாக இருந்தது. தன்னுடைய விருப்போ, தன்னுடைய வெறுப்போ இல்லாமல் தீயவர்கள் தண்டிக்கப்படவேண்டும் என்கிற குறிக்கோளாக இருந்தது.

அந்த மந்திரஜபம் உள்ளுக்குள் பல்கிப் பெருகியது. ஒரு சக்தியைக் கிளறியது.

எங்கப்பா எப்பேர்பட்ட வீரன்.

காளிதாசன் நினைத்துக் கொண்டான். ஆனால், ஏனோ விஸ்வநாத சிவாச்சாரியாருக்கு நடுவயிற்றில் ஒரு பயம் குழைந்து குழைந்து எழுந்தது. கைகால்கள் உதறத் துவங்கின. மிகப்பெரிய பலவீனம் ஒன்று அவர் உடம்புக்குள் இறங்கியது.



நாராயணசாமி முதலியாரின் புதல்வரான குமாரசாமி முதலியார் தன் தாயார் புனித்வதி அவர்கள் நினைவாக அவர் வசித்த இந்த வீட்டையும் முன்பக்க தோட்டத்தையும், பின்பக்க கொல்லைப்புறத்தையும் மரங்களோடு சேர்த்து ஆயிரம்கண்ணியம்மனுக்கு காணிக்கையாக கொடுத்த சாஸனம். ஸ்வஸ்தி ஸ்ரீ மலோலலாளிதம் நாளது தை மாதம் இருபத்தேழாம் திகதி என்று நீளமாக சாஸனம் போயிற்று.

நூறு வருடம் மனிதர்கள் வாழ்ந்த வீடு. தானம் கொடுத்து அம்பது வருடமாயிற்று. நூற்றைம்பது வருடமாக சின்னச்சின்னதாக பழுதுபார்க்கப்பட்டதே தவிர, குலைந்து வருவதை யாரும் கண்டுகொள்ளவில்லை. பழைய தென்னைமரம் ஒரு நல்ல மழையின்போது வேறோடு சாய்ந்து வீட்டின்மீது விழ அது பகல் பொழுதாக இருந்தபடியால் எவரும் காயமின்றி தப்பினார்கள். ஆனால், வீடு சிதிலமடைந்து விட்டது. மோகனசுந்தரத்திற்கு முன்னால் இருந்தவர், இந்த வீட்டை விற்றுவிடலாம் என்று அரசாங்கத்திற்கு எழுதிபோட்டார்கள். ஆனால், இந்த வீடு எந்தக்காரணம் கொண்டும் விறகப்படாது என்று சாஸனத்தில் ஒரு வரி இருந்தது. அந்த வரி நிச்சயம் சட்டச்சிக்கலை ஏற்படுத்தும். வேண்டுமென்றால் அந்த வீட்டை இடித்துவிட்டு அந்த இடத்தில் அடுக்குமாடி கட்டிடம் கட்டலாம் என்று சட்டத்துறை, அறநிலையத்துறைக்கு தெரிவித்திருந்தது. அறநிலையத்துறை அடுக்குமாடி கட்டிடம் கட்டுவதற்கு எவ்வளவு செலவாகும் என்று சொல்ல, அதற்கு அரசாங்கத்தின் இன்னொரு துறை ஒன்பது லட்ச ரூபாய் ஆகும் என்று அந்தத் தேதியும், வருடமும் குறிப்பிட்டு சொல்லியிருந்தது. இப்படிச் சொல்லியே பதினோரு வருடங்களாகி விட்டன.

ஒன்பது லட்ச ரூபாய்க்கு எங்கே போவது என்று அரசாங்கம் கைவிரித்து விட்டது. எனவே, அந்த வீடு இடிபாடுடைய வீடாகவே வெகுநாள் வைத்திருந்தார்கள்.

போலீஸுக்கு பயந்து ஒதுங்கியிருந்த ஒரு சாராய வியாபாரி, அங்கே அவனுக்குப் பிடித்த பெண்ணோடு குடித்தனம் செய்யத் துவங்கினான். வேறு எங்கேனும் பொதுமகளிர் கிடைத்தால் அங்கு கொண்டுவந்து சல்லாபித்தான். நண்பர்களோடு குடிப்பதற்கும், சீட்டாடுவதற்கும் அந்த இடம் வசதியாக இருந்தது. சீட்டாட்டத்தில் சண்டைவர, சண்டையில் பெண்கள் கலந்து

கொள்ள அது கத்திக்குத்தில் முடிந்தது. கத்தியால் குத்தப்பட்டவன் மருத்துவமனையில் இறந்து போனான். குத்தியவன் வட இந்தியாவுக்கு ஓடிப்போனான்.

"என்னா ஒரு இடத்தை இப்படி வச்சுருக்கீங்க. யார் இடம் இது" என்று விசாரித்து கோவிலை போலீஸ்காரர்கள் கடிந்து கொண்டார்கள். அப்போதிருந்த நிர்வாகஅதிகாரி அதன் கதவை மட்டும் ரிப்பேர் செய்து முன்பக்கம் சுவர் எழுப்பி தோட்டத்துப் பக்கம் கதவுகள் போட்டு அதற்குண்டான செலவை எழுதினார். கதவு திறந்தால் இடிபட்ட, பாழ்பட்ட மனைதான் தெரியும். அந்த வீட்டுக்கு நேர்பின்னே ஒரு ஆட்டோ கேரேஜ் இருந்தது. அந்த கேரேஜின் வாசல், வேறு தெருவில் இருந்தது. கேரேஜுக்கு இடதும் வலதும் வீடுகள் இருந்தன. கேரேஜிலிருந்து பார்த்தால் பின்னால் ஒரு பாழ் மனை இருப்பது தெரியவே தெரியாது.

"எவ்ளோ பெரிய இடம் காலியா வச்சுண்டிருக்காங்க பாருப்பா."

கேரேஜ் ஓனர் சொன்னான்.

"என் நீ எடுத்துக்க வேண்டியதுதானே."

அவனிடம் கார் ரிப்பேருக்குக் கொடுத்தவர் யோசனை சொன்னார்.

"எப்படி ஸார் கோயில் சொத்தாச்சே."

"அதனாலதான் சொல்றேன்.. நீ எடுத்துக்கோன்னு. எனக்குத் தெரியாதா அது கோயில் சொத்துன்னு."

"எப்படி ஸார் எடுத்துக்கறது."

"ஒரு கார் கொண்டு போய் டொம்முனு சுவத்துல இடி. சுவர் இடியும்."

"பிறகு."

"கார் கொண்டுபோய் உள்ள நிறுத்து."

"நிறுத்தின பிறகு."

"லாரி நிறுத்து. உன் பட்டறை சாமானெல்லாம் வச்சுக்கோ."

"அப்புறம்."

"மெல்ல அதைத்தாண்டி சுவர் எழுப்பிடு."

"எது தாண்டி."

"இதோ அந்த கொல்லைப்புறத்தை ஒட்டி அந்தக் கதவை அடைச்சு எழுப்பிடு. அறுவதுக்கு நூறடி அத்தனையும் உன்னுது."

"ஆறாயிரம் சதுரடி நிலமா."

"ஒண்ணும் கேட்கமாட்டாங்களா."

"உன்னை கேட்கும்படியா வச்சுக்காத."

"எனக்கு புரியலையே."

"வித்துருப்பா."

"எப்படிங்க."

"இது மொத்தமும் என் இடம் அப்படின்னு சொல்லி வித்துடு."

"பட்டா இல்லையே."

"கொஞ்சம் குறைச்சு வித்துடு."

"எப்படிங்க."

"காசு குறைச்சலா வித்தாக்க பட்டா இல்லாத, என்ன இல்லாதயும் வாங்கிப்பான்."

"ப்ளாட் எப்படிங்க விக்கறது."

"இந்த மாதிரி ஏடாகூடமான விஷயங்கள்ள வாங்கறதுக்குன்னே பார்ட்டி இருக்கு. அவங்க சமாளிச்சுப்பாங்க."

"ஒரு பார்ட்டி அனுப்புங்களேன். எவ்வளவு வரைக்கும் விக்கலாம்னு நினைக்கறீங்க."

"இந்த இடத்துல க்ரவுண்ட் பத்துலட்ச ரூபா. கேரேஜும் சேர்ந்து ரெண்டேகால் க்ரவுண்ட் இருக்கும். இருவத்தஞ்சு லட்சம் கூசாம கேட்கலாம். நாப்பது லட்சம்னு ஆரம்பி. பதினஞ்சு லட்சம் செக். பத்துலட்சம் கேஷ். வாங்கிட்டு போயிகிட்டேயிரு. தாம்பரம் பக்கம்போய் அங்க கடைபோடு. உன் திறமைக்கு லாரியில கைவச்சு வேலை செய்தீன்னா தபதபன்னு வரும். எல்லா கார்வச்சுருக்கறவனும் தாம்பரத்துக்கு அந்தப்பக்கம்தான் இருக்கறான்."

"தாம்பரம் ரொம்ப தொலைவுங்க."

"வேளச்சேரி. அதுகிட்டதானே."

"நீங்க பார்ட்டிய ஏதாவது பார்த்து அனுப்பறீங்களா."

"நிச்சயம் செய்யறேன்."

அந்த கேரேஜ் ஆளிடம் கார் கொடுப்பவர் வேறொரு மனிதரைச் சந்தித்தார்.

"ஆயிரம்கண்ணி கோயில் பக்கத்துல நான் ஏ க்ளாஸா ஒரு இடம் பிடிச்சுத்தரேன். நாப்பது, நாப்பதஞ்சு ரூபா. கண்ணை மூடிகிட்டு போவும். இருவத்தஞ்சு ரூபாய்க்கு முடிக்கறோம். எனக்கு ரெண்டு ரூபா தறியா."

"இடம் காட்டு."

"முதல்ல உனக்கு ஏரியா பிடிக்குதான்னு பாரு. என்கூட கார்ல வா. பின்ஸீட்டுல உட்கார்ந்துக்கோ. அங்கேயிருந்து நான் உள்ளுக்குள்ள போற தூரம்வரைக்கும் அந்த இடத்தினுடைய பரப்பளவு. கார்ல உட்கார்ந்த படியே பார். சரியா வந்துது இறங்கிடு. சரியா வரலை உள்ளயே உட்கார்ந்துக்கோ. உங்கிட்ட செல் இருக்குது இல்ல."

"இருக்குதே."

"நானும் செல் வச்சுருக்கேன். செல்லுல பேசிப்போம்."

"சரி."

அவர்கள் செல்லில் பேசிக் கொண்டார்கள்.

"இடம் நல்லாதாங்க இருக்கு. ஆனா, கோயில் சொத்து போலிருக்கே."

"அதெப்படி உனக்கு தெரியும்."

"இந்த வீட்டுக்கு பக்கத்து வீட்டுக்காரன் அதை இடப்பக்கமா இடிச்சு வளைச்சுக்கலாமான்னு பார்த்துகிட்டிருக்கான். நான் வளைச்சு தரேன் வாங்கிக்கறியான்னு எங்கிட்ட போன வருஷமே கேட்டான். வேணாம்னுதான் வந்துட்டேன். இப்போ அதே இடத்தை காமிச்சு கொல்லைப்புறமா இடிச்சு வச்சுருக்கறத சொல்றியே."

"யார்.. யார் அவன்."

"யாரா இருந்தா என்ன. வில்லங்கம் வர பார்ட்டி. இதுக்குள்ள போய் கை வச்சுட்டோம்னா இடப்பக்கமும், வலப்பக்கமும் இருக்கறவன் கண்டமேனிக்கும் எழுதி போட்ருவான். எனக்கு வேணாம்ப்பா."

"அப்படியா சொல்ற. தொடவே தொடாத. வேணா உனக்கு நான் ரெண்டு ரூபா தரேன். விட்டுட்டு நகர்ந்து ஓடியாந்துடு."

காருக்குள் இருந்தபடி பேச, இவர் அந்த இடத்தை அளந்தபடி தொலைவில் நின்று கொண்டிருந்தார்.

"நான் வேற கார் கொண்டு வரேன்." என்று சொல்லிவிட்டு காருக்கு வந்தார்.

அவன் காருக்கு நடந்து வருவதற்குள் நிலத்தைப் பார்த்தவனும், அவன் மனைவியும் பேசிக் கொண்டார்கள்.

"டப்புனு வளைச்சு போட்டுடலாம். நாமளே டைரக்டா அந்த கேரேஜ்காரன்கிட்ட பேசலாம். இவன் என்ன நடுவுல ரெண்டு ரூபா லவுட்டிகிட்டு போறது. ஆமா.. ஆமா இவனை தள்ளிடுங்க. நாம கேரேஜ்காரன்கிட்ட பேசி இதுல தகராறு வரும். என்னென்ன கம்ப்ளெயிண்ட் இருக்கு பாரு அப்படின்னு காண்பிச்சு கேரேஜிக்கு பத்து ரூபா, இதுக்கு அஞ்சு ரூபா, பதினஞ்சு ரூபாயில முடியட்டும்."

"பதினஞ்சு ரூபாய்க்கு தரமாட்டான்."

"இருபது ரூபாய்ல முடிப்பியா."

"பார்க்கலாம். இவனை முதல்ல தூக்கி வெளிய போட்டுடணும்."

"அடுத்த வீட்டுக்காரன் யாராவது தொந்தரவு பண்ணானா என்ன."

"யாரும் பண்ணலை. இவனுக்கு பேதி கொடுக்கறதுக்காக அப்படி சொன்னேன்."

அவன் திரும்ப காருக்குள் வந்து உட்கார, அவர்கள் மௌனமாக அந்த இடம்விட்டு வெளியே வந்தார்கள்.

"ரொம்ப நன்றி. நான் ஏதாவது தரணுமா."

அவன் பாக்கெட்டில் கைவிட்டான்.

"வேணாம்ணா.. உங்க அன்பு போதும்."

இடம் காட்டியவன் கைகூப்பினான். அவனை இறக்கிவிட்டு கார் பறந்தது.

"இடதுபக்கத்து வீட்டுக்காரன் இடிச்சு உள்ள புகுறணும்னு நினைச்சானா. அப்போ இவ்வளவு தூரம் உள்ள புகுந்த கேரேஜ்காரனை ஒண்ணும் சொல்லாத விட்டிருக்கானே. என்னா நியாயம் இது. கேரேஜ்காரன் இடதுபக்க வீட்டுக்காரன் தொந்தரவு பண்ணதாகவோ அல்லது சிலும்பினதாகவோ சொல்லவே இல்லையே. என்னமோ சூட்சுமம் இருக்குது. நம்மள நகர்த்த வேடிக்கை பார்க்கறானா. சரி. எதுக்கும் இடதுபக்க, வீட்டுக்காரனை பார்த்துட்டு வந்துடுவோம்."

"ஏங்க குடிக்க தண்ணி இருக்குங்களா. இதுவரைக்கும் ஓட்டிகிட்டு வந்த மோட்டார் சைக்கிள் டக்குனு இங்க ஆஃப் ஆயிப்போச்சு."

அவன் வியர்த்து வழிந்து அவர்கள் வீட்டு வாசற்படியில் உட்கார்ந்து கொண்டான். அவன் கையெல்லாம் எண்ணெயாக இருந்தது.

மோட்டார் சைக்கிளை உதைத்து உதைத்து முகம் வியர்த்திருந்தது.

"இருங்க தரேன்."

பெண்மணி ஓடினாள். உள்ளிருந்து ஒரு பையன் சொம்பு நிறைய தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தான். இரண்டு வாழைப்பழங்கள் தந்தான்.

"எதுக்கு தம்பி பழமெல்லாம்."

"இல்லைங்க. கோயிலுது. சாப்பிடுங்க. நான் ஸ்டார்ட் பண்ணித் தரட்டுமா."

"கொஞ்சம் லீக் ஆயிப்போச்சு. அதை விட்டாலே பெட்ரோல் எவாப்ரேட் ஆயி நல்லா ஸ்டார்ட் ஆயிடும். அதான் பேசாத இருக்கேன். இங்க கொஞ்சம் உட்கார்ந்துக்கறேன் தம்பி. தப்பா நினைச்சுக்காத."

"ச்சே.. ச்சே.. உட்காருங்க ஸார்."

"வேர்க்குது. என்ன பண்றது."

"உள்ள வந்து ஃபேன்ல உட்காருங்க ஸார்."

அவன் மறுபடியும் அழைக்க, அவன் தண்ணீர் குடித்து

விட்டு கைகளை பேப்பரில் துடைத்துக்கொண்டு வீட்டுக்குள் போய் காலரை பின்பக்கம் செலுத்தி ஃபேனுக்கு நேர்கீழே உட்கார்ந்தான்.

"நல்லா வச்சுருக்கீங்களே வீடு. பழங்காலத்து வீடு போல."

"ஆமாம். எங்க தாத்தாவோட அப்பாது."

"தெரியுது. நீங்க மருந்து சமாச்சாரமா படிக்கறீங்களா."

"ஆமாங்க. எப்படித் தெரியும்."

"உங்க முகம் சொல்லுது."

"எப்படி முகம் சொல்லும்."

"இதோ பாரேன். கரெக்டா எழுதின ஜாதகத்தைவிட முகத்துல இருக்கற ஜாதகம்தான் தெளிவானது. உண்மையானது. கட்டம்கூட தப்பு சொல்லும். தப்பா எழுதிட முடியும். முகத்துல தப்பா எழுத முடியுமா. மூஞ்சிலேர்ந்து ஜாதகம் கண்டுபிடிச்சடலாம்."

"ஆச்சரியமா இருக்குங்க." அந்த பையன் தாய்போல இருந்தவள் வியந்தாள்.

"பக்கத்துல இருக்கறது பாழ்மனையா"

"ஆமாங்க. இதையும் எப்படி சொல்றீங்க."

"இந்த வீட்டு வாஸ்துப்பிரகாரம் இடதுபக்க வீடு பாழ்மனையா இருக்கணும்."

"எதனால அப்படி சொல்றீங்க ஸார்."

"ஈசான்யம் மேல தூக்கி இருக்குது. அக்னி தாழ்ந்து இருக்கு."

"தப்பா ஸார்."

"உள்ள வந்து பார்த்தாதானே தப்பா ரைட்டான்னு தெரியும்."

அவர்கள் அவனை வலிய அழைத்துக்கொண்டு போனார்கள். அவன் வீட்டின் எல்லா பக்கமும் பார்த்தான். கொல்லைப்புறத்திலிருந்து கேரேஜ் பார்த்தான்.

"இதென்ன இது. இவ்ளோ தூரமா அந்த கேரேஜ்."

"இல்லீங்க. பெரிய அநியாயம். அந்த கேரேஜ் அந்த இடம் வரைக்கும்தான். இது கோயில் சொத்துக்குண்டான இடம். இந்தப்பாழ்மனையோட கொல்லைப்பக்கம், இடிச்சுகிட்டு உள்ள வந்துட்டு இங்க கார் நிறுத்தறான். கேட்டா இப்போ என்னுதுங்கறான். அந்தப் பெண்மணி பொருமினாள்.

கோயில் சொத்தை எடுத்தவன் யாராயிருந்தாலும் பாழாப் போயிடுவான். நல்லதா விளங்கினதே கிடையாது. அதுவும் ஆயிரம்கண்ணி. விளையாடறானா.. அடிச்சுத் தரையோட தேய்ச்சுடுவா ஆத்தா."

"அதைத்தான் நானும் சொன்னேன். எங்க வீட்டுக்காரரு

உள்ள பூந்துடலாமா. பூந்துடலும்மான்னாரு. வேணவே வேணாம். இருக்கற சொத்து நிலைச்சா போதும். தப்பு சொத்து கொண்டு வாராதீங்கன்னு சொல்லிட்டேன்."

"உங்க வீட்டுக்காரருக்கு எப்போ தோணிச்சு. நாலு வருஷத்துக்கு முன்னாடி தோணுச்சா."

"கரெக்டா சொல்றீங்க ஸார். அதெப்படி சொல்றீங்க. டக் டக் டக்னு அடிக்கறீங்க."

"இல்லை. அந்த பீரியட் கேதுவோட காலம். கேதுவோட காலத்துல குறுக்கா புத்திபோகும். மேற்கொண்டு என்னா படிக்கப் போறீங்க. தம்பி"

"தெரியலைங்களே. எதுனா கம்பெனியில வேலை தேடணும்."

"சட்டுனு கல்யாணம் பண்ணிக்கலாம்."

"இல்லீங்க தங்கச்சி இருக்குதுங்களே."

"எவ்ளோ வயசு."

"இருவத்தோரு வயசு ஆச்சுங்க."

"அதுக்கு எப்போ கல்யாணம்."

"தெரியலைங்க."

"நல்ல இடமா பார்த்துகிட்டிருக்கோம். காசு பணம் சேர்க்கணும். எங்க வீட்டுக்காரருக்கு அவ்ளோ வருமானம் இல்லை." அம்மா சொன்னாள்.

"இவ்ளோ பெரிய வீடு வச்சுருக்கீங்க. என்னா வருமானம் இல்லைன்றீங்க. மேல எழுப்பி வாடகைக்கு விடலாமே."

"அவ்ளோ எல்லாம் சாமர்த்தியம் போறாதுங்க. எதுனா வித்துடலாமான்னு இருக்கோம்."

"நிஜமாவா."

"ஆமாங்க. நேத்து வரைக்கும் இல்லை. இன்னிக்கு காலைலேர்ந்து அந்த யோசனை. வேணாம்மா விக்காதன்றா இவன்."

"தம்பி. ஒண்ணு புரிஞ்சுக்கோங்க. இந்த வீடு உங்கப்பா காலம் வரைக்கும் இருந்ததே பெரிசு. நீ இன்னொரு இருவத்தஞ்சு வருஷம் குடித்தனம் பண்றதுக்குண்டான யோக்கியதை இந்த வீட்டுக்கு இல்லை. உட்கார்ந்துடும். பக்கத்துல இந்த பாழ்மனை வச்சுக்கிட்டு நீ இங்க எப்படி குடித்தனம் பண்ணப்போற. உன் தங்கச்சிக்கு எப்படி கல்யாணம் ஆகும். கை அலம்பறவன் வந்து எட்டிப்பார்த்தான்னா நல்லாயிருக்குமா. அதுவும் கோயில் மனைன்னு சொல்ற. கோயில்மனை பக்கத்துல இருக்கக்கூடாதுப்பா. நல்ல விலைக்கு நான் வித்து தரட்டுமா."

"எவ்வளவு போகும்னு சொல்றீங்க."

"நீங்க நாலுபேர்கிட்ட விசாரிங்க. நீங்க விசாரிச்சதை விட ரெண்டு ரூபா கூட நான் வாங்கித்தாரேன்."

"அதெல்லாம் ஒண்ணும் இல்லைங்க. தெய்வம் அனுப்பின மாதிரி வந்து பேசறீங்க. எங்களுக்கும் காரியம் முடியணும்."

"இதை வித்துத்தரது மட்டுமில்லை. நங்கநல்லூர், ஆதம்பாக்கத்துல ஐயருங்க குடியிருக்கறதுக்கு நடுவுல நல்ல இடமா வாங்கித்தரேன். நீங்க, உங்க வீட்டுக்காரரு, புள்ள, மாட்டுப்பொண்ணு அவ்ளோதானே. மூணு பெட்ரூம் ப்ளாட் போதும். பெரியஹால், மூணு பெட்ரூம், உங்க மாப்பிள்ளை வந்துட்டு போனா தங்கறதுக்கு ஒரு அறை. உங்களுக்கு ஒரு அறை. போறாதா."

"நல்லபடியா போறுங்க."

"அங்கெல்லாம் தண்ணி கஷ்டமே கிடையாது. என்னா கொஞ்சம் தொலைவு. ஒரு டூ வீலர் வாங்கி வச்சுகிட்டா சல்லுனு போயிட்டு வந்துடலாம். நான் சொல்றேன். உங்க ஐயாகிட்ட சொல்றேன். அதான் மரியாதை. உங்ககிட்ட சொன்னா நான் வியாபாரம் ஆரம்பிச்சாப்போல ஆயிடும். வீட்டுப் பெரியவர் இல்லாத, ஒரு வியாபாரம் ஆரம்பிக்கக்கூடாது. நான் வரேங்க. தம்பி வரேன்ப்பா."

கைகூப்பி விடை பெற்றான்.

கீழே இறங்கி மோட்டர் சைக்கிளை உதைத்தான். சரக்கென்று மோட்டர் சைக்கிள் போயிற்று.

இத்தனை நேரம் ஓடாத மோட்டர் சைக்கிள் இப்பொழுது எப்படி ஓடுகிறது என்று அவர்கள் இருவருக்கும் கேட்கத் தோன்றவில்லை. அவர்கள் வேறு கனவில் இருந்தார்கள்.

சோம்பேறி நாயே என்னையாடா ஏமாத்தற. பக்கத்து வீட்ல இருக்கறவன் உள்ள நுழைவான்னு நினைச்சியா. நான் வலப்பக்க வீட்டுக்காரனையும் செக் பண்ணுவேண்டா.

ஒரு மணிநேரம் கழித்து வலப்பக்க வீட்டிற்கு வந்தான்.

"வீடு யாருதுங்க."என்று கேட்டான்.

"ஏன் என்ன சமாச்சாரம்."

வாசலில் இருந்த கிழவர் எழுந்து நின்றார்.

"நான் மாநகராட்சிலேர்ந்து வரேன். இந்த வீடு யாருது. யார் பேர்ல பட்டா இருக்கு."என்று கேட்டு கையில் வைத்திருந்த ஏதோ ஒரு பட்டாவை புரட்டி பார்த்தான்.

"இந்த வீட்டு சொந்தக்காரர் பேர் கிருஷ்ணமூர்த்தி. அவர் ஐயரு. துபாய்ல இருக்குறாரு. இது அவங்க அப்பா வீடு. அவங்க சகோதரர்கள் எல்லாருமே வெளிதேசத்துலதான் இருக்காங்க. எல்லாரும் போய் அஞ்சு, ஆறு வருஷமாச்சு. துட்டு சம்பாதிக்கறாங்க. வந்து இந்த இடத்துல ப்ளாட் கட்டணும்னு

நினைச்சண்டிருக்காங்க. என்னா சங்கதி."

"நீ யாருப்பா."

"நான் இந்த வீட்டுக்கு இன்சார்ஜா இருக்கேன். இந்த வீட்ல இருக்கறவங்க எல்லாரும் குடித்தனக்காரங்க."

"இந்த வீடு யார் கட்டினது."

"கிருஷ்ணமூர்த்தியோட தங்கச்சியும், தங்கச்சி புருஷனும். தாம்பரத்துல இருக்காங்க. நோட்டீஸ் கொடுங்க. அவங்களாண்ட போய் கொடுத்துட்டு வந்துடுவேன். அவங்க கட்டிடுவாங்க. எதுவும் பாக்கி இல்லைன்னாங்களே."

"வரி உயர்த்துப் போறோம்ப்பா. அதனாலதான் கேட்டேன். உள்ள அளந்து பார்த்துடலாமா."

"வாங்க."

அவன் வீட்டுக்குள் நுழைந்தான். சகல இடமும் ஏறி இறங்கிப் பார்த்தான். இந்தக் கட்டிடம் இன்னும் உறுதியான கட்டிடம். இங்கு இருக்கும் அத்தனை குடித்தனக்காரர்களும் அந்தணர்கள். ஒரு வீட்டை விதம்விதமாகப் பிரித்து கூடத்தைப் பொதுவாக்கி அவர்களுக்கு வாடகைக்கு விட்டிருக்கிறார்கள். கொல்லைப்புறத்தில் பூச்செடிகள் முளைத்திருந்தன. சாமந்தியும், மந்தாரையும், அடுக்கு மல்லியும், முல்லைக்கொடியும் இருந்தன.

"தோட்டம் நல்லாயிருக்கே."

"நான்தாங்க போடறேன். பூ பறிச்சு கொண்டுபோய் ஆயிரம்கண்ணிக்கு கொடுப்பேன். எனக்கு அதுக்காகவும் தனியா சம்பளம் தராங்க."

"உனக்கு சம்பளம் வேற உண்டா."

"ஆமாங்க. ஒரு ரூம் முதல்ல கொடுத்து. திண்ணையும் எனக்கே கொடுத்து மாசம் முன்னூறு ரூபா சம்பளமும் கொடுக்கறாங்க. தோட்டவேலை செலவுக்கு நூறு ரூபா தராங்க. நூறு ரூபாய்க்கு என்ன செலவு. நான் அங்கங்க சாணம் பொறுக்கி கொண்டு வந்து அதை மண்ல போட்டு மக்க வச்சு உரமா போட்ருவேன்.தபதபன்னு வருது பாருங்க."

"ரொம்ப பொறுப்பா செய்றீங்க பெரியவரே."

"என்னாங்க. ஆயிரங்கண்ணிக்கு செய்யறேன்."

அவன் பரமதிருப்தியாக வெளியேறினான்.

'நீ தப்பான வழியில போ நாயே. நான் சரியான வழியில போறேன்.'

அவனை கூட்டி வந்த ஸ்நேகிதனைப்பற்றி மோட்டார் சைக்கிள்காரன் ஆத்திரத்தோடு பல் கடித்தான்.

'எப்படி. தனக்கு எப்படி நல்ல புத்தி வந்தது.'

யோசித்தான்.

ஆயிரம்கண்ணி நினைவில் மின்னினாள்.

என்னை சரியானபடி திசை திருப்பிட்ட தாயே. இந்த வீட்டை எனக்கு முடிச்சு கொடு. உனக்கு என்ன வேணுமோ நான் பண்றேன். உன் வீடு. உன் நிலம்.. தப்பாகாத நான் பார்த்துக்கறேன். ஆரம்பத்துல நானே தப்பா ஆரம்பிச்சது தப்புதான். அதுக்கு தண்டனையா ஆயிரம் ரூபா போடறேன். ஆயிரம் ரூபா உண்டியல்ல போடலாமா இல்லை, ஐயருக்கு கொடுக்கலாமா. என்ன செய்யலாம்.

கோவிலுக்கெதிரே வண்டியை நிறுத்தி பையிலிருந்து ஆயிரத்தோரு ரூபாய் எடுத்து கோவிலுக்குள்ளே நுழைந்தான். கோவிலில் கூட்டமில்லை.

ராமசுப்ரமணியன் அவரைப் பார்த்துவிட்டு ஆரத்தி காட்டினான்.

அங்கிருந்து நடந்து வந்து. அகல் விளக்கு தீபத்தைக் காட்டினான். அவன் அகல்விளக்கு தீபத்தை கண்ணில் ஒற்றிக்கொண்டு பிரசாதங்கள் வாங்கிக் கொண்டான். பூவாங்கி மேல் சட்டையில் வைத்துக்கொண்டான்.

"தம்பி நீங்கதான் கோயில் அர்ச்சகரா."

"ஆமாம்."

"பேரென்ன."

"ராமசுப்ரமணியம்."

"நான் ஒரு தப்பு பண்ணிட்டேன். அதுக்கு பரிகாரமா அம்மாகிட்ட மன்னிப்பு கேட்கணும். எப்படி மன்னிப்பு கேட்கலாம்."

ராமசுப்ரமணியம் ஆச்சரியத்தோடு அவனைப் பார்த்தான்.

"என்ன தப்பு, ஏது தப்புன்னு கேட்டுடாதீங்க தம்பி."

"இல்லை.. கேட்கலை. எதுவா இருந்தாலும் பால்ல சமனமாகும். அபிஷேகத்துல நீங்கும். அபிஷேகத்துக்கு என்ன உண்டோ அத்தனையும் நீங்க வாங்கிண்டு வந்துடுங்களேன்."

"வாங்கிட்டு வரமுடியாது. நீங்க வாங்கிக்கலாமா. நான் காசு கொடுத்துடட்டுமா."

ராமசுப்ரமணியம் யோசித்தான். சரி என்று தலையசைத்தான்.

ஐநூறு ரூபா கொடுத்தா எல்லா அபிஷேகப் பொருளும் வாங்கிடலாம் என்று கணக்குப்போட்டான். அதுலயேகூட அம்பது ரூபா, அறுவது மிஞ்சும் என்று மனம் நினைத்தது.

அவர் ஆயிரத்தோரு ரூபாய் கொடுத்ததும் ராமசுப்ரமணிக்கு மூச்சு அடைத்தது.

என்ன தப்பு பண்ணினானோ இவ்ளோ காசு தரானே. உள்ளே ஒரு பயம் ஓடியது. திரும்ப ஆயிரம்கண்ணியைப்

பார்த்தான். வேண்டாம். இந்த தப்புக்காசு எனக்கு வேண்டாம்.

அவனுக்குள் பளிச்சென்று ஒரு தீபம் எரிந்தது.

பண்ணிடறேன். இது பெரிய காசு.

"ஒரு தவலைபால், ரெண்டு பாட்டில் தேன், பத்து இளநீர், சந்தனம், குங்குமம், குங்குமப்பூ, மலைவாழைப்பழம், பலாப்பழம் போட்டு பஞ்சாமிர்தம், சாத்துக்குடி பிழிஞ்ச பழரசம், தயிர், வாசனைப்பொடி, நல்லெண்ணெய் எல்லாம் வாங்கிடறேன். சந்தனமும், மஞ்சளும், குங்குமமும் வாங்கிடறேன். சர்க்கரைப் பொங்கல் நைவேத்யம் பண்றேன். போதுமா."

கேட்ககேட்க அவனுக்கு காது குளிர்ந்தது. தலையசைத்தான்.

"நீங்க எத்தனை மணிக்கு வருவேள்."

"நான் வரமுடியாது தம்பி. நீ பண்ணிடு. உன் மேல நம்பிக்கை இருக்கு. சுற்றிவிட்டு வெளியே போனான்."

ராமசுப்ரமணியன் எழுநூற்று அறுபது ரூபாய்க்கு எல்லா சாமான்களும் வாங்கி வந்தான். இருநூற்று முப்பது ரூபாயை உண்டியலில் போட்டான். பத்து ரூபாய் தனக்கு தட்சணை என்று வைத்துக் கொண்டான்.

"ஏது இவ்வளவு சாமான்."

"நான்தான் வாங்கிண்டு வந்தேன்."

"நீ வாங்கிண்டு வந்த. ஏது காசு."

காளிதாசன் ஆர்த்தத்தோடு கேட்டான்.

"எந்தக்காசா இருந்தா உனக்கென்ன."

"நீ காசு கலெக்ட் பண்ணி நீயா பண்றேன்னு சொல்லிண்டிருக்கியா."

"நான் போய் யாரையும் காசு கேட்கறதே கிடையாது. எனக்கு தட்டுல விழற காசு போதும்."

"இதுலயே நீ நிறைய மறைக்கற."

"தேவையில்லாத பேசாத."

அதற்குள் யாரோ தங்கச் சங்கிலியோடும், கையில் ப்ரேஸ்லெட்டோடும் கைகூப்பி நிற்க அவரை நோக்கி காளிதாசன் ஓடினான்.

மறுநாள், ஒரு தவலை ஆவின்பாலை சொம்பில் ஊற்றி மெல்ல மெல்ல அபிஷேகம் பண்ண கூடியிருந்த பலபேர் மெய்சிலிர்த்தார்கள்.

"அப்பா.. பத்து குடம் பால்" என்று யாரோ ஒரு சிறுமி வாய் பிளந்தாள். பஞ்சாமிர்தத்திற்கு எல்லாம் நெகிழ்ந்தார்கள். சந்தனமும், மஞ்சளும் வழிய கன்னத்தில் போட்டுக் கொண்டார்கள்.

"இந்தச் சின்னப்பையன் நல்லா பண்றான்ப்பா. பார்த்துப்பார்த்து செய்யறான்." அங்குள்ள பெண்கள் தங்களுக்குள் பேசிக்கொண்டார்கள்.

ராமசுப்ரமணியன் கற்பூரத்தட்டோடு நெருங்கி வந்தபோது வாய்விட்டுப் பாராட்டினார்கள்.

ராமசுப்ரமணியத்திற்கு சந்தோஷமாக இருந்தது.

"எல்லாம் அவள் அருள்."

உணர்ந்து சொன்னான்.

"அவர் யார் என்னான்னு விலாசம் வாங்கி வச்சுக்கல. ஒருத்தர் வந்தாரு பேசினாருன்னு பைத்தியக்காரன்மாதிரி ஆத்தாளும் புள்ளைங்களும் சொல்றீங்களே எதுனா இருக்கா." என்று அந்த வீட்டின் தலைவர் கோபித்துக்கொண்டார்.

"இவன் படிச்சவனாம். எதுக்கெடுத்தாலும் பேய்முழி முழிக்கறான் பார். இவனுக்கு என்னாத்த கல்யாணம் ஆகி, என்னாத்த குடித்தனம் பண்ணி, என்னாதத சம்பாதிக்கப்போறான். இந்த வீட்டை வித்து அவளுக்கு கல்யாணம்பண்ணி கையில அஞ்சு ரூபா கொடுத்து எதுனா பொழைச்சுக்கோடான்னு அனுப்பிடப்போறோம். நீயும், நானும் இருக்கற துட்டை வச்சுகிட்டு எங்கேயாவது ஹோமல சேர்ந்துடலாம் வா."

அவர் அலுப்போடு பேச, ஆயிரத்தோரு ரூபாய் அபராதம் செலுத்திய மோட்டர் சைக்கிள்காரன், வீட்டுக்குள் நுழைந்தான்.

"நான் வரலாங்களா."

ரொம்ப பவ்யமாக தள்ளிநின்று கைகூப்பினான்.

வியாபாரிகள் அப்படித்தான். வெகுவேகமாக பவ்யம் காட்டுவார்கள். அவன் உள்ளே நுழைந்த அதே நேரம் கேரேஜ் உள்ளே காண்டஸா கார் வந்தது.

"அங்கங்க டொக்கு விழுந்திருக்கு பாருங்க தம்பி. பையன் எடுத்துகிட்டு போய் கோடு போட்டுடறான். டோட்டலா தட்டி கொடுத்து இன்ஜினையும், டியூன்அப் பண்ணி தரணும். எவ்ளோ கேட்கற."

அவன் சுற்றிவந்து பார்த்துவிட்டு ஒரு விலை சொன்னான்.

"கூட ஐநூறு ரூபா கேளு. தந்துடறேன். ஆனால், வேலை சுத்தமா இருக்கணும். சீப்பா எதையுமே முடிக்காத. ஒவ்வொண்ணுக்கும் என்ன விலை உண்டோ அந்த மாதிரிதான் கொடுக்கணுமே தவிர காசுக்கு குறைச்சலா கொடுக்கறதுல எனக்கு நம்பிக்கையே இல்லை."

அவர் சொல்ல கேரேஜ்காரனுக்கு வாயெல்லாம் பல்லாகியது.

"மூவாயிரம் ரூபா சொல்றீங்க இல்ல. இந்தாங்க மூவாயிரம் ரூபா. கையில வச்சுக்கோங்க. வேலை முடிச்சவுடனே எனக்கு போன் பண்ணுங்க. இது உங்க இடங்களா தம்பி."

அவர் மெல்ல பேச ஆரம்பித்தார்.

அவன் தன் விஷயத்தைச் சொன்னான்.

அவர் இறங்கி தன் மனைவியோடு அவன் இடித்த சுவர்தாண்டி வைத்திருக்கிற கார்களுக்கு நடுவே புகுந்து அந்த இடத்தின் தன்மையை ஆராய்ந்தார்.

"நீங்க யார் ஸார்."

"நான் என்ன. சின்ன வயசுலேர்ந்து கஷ்டப்பட்டு கட்டிட வேலை செய்து மேஸ்திரி ஆகி அப்படியே மெல்ல மெல்ல பில்டிங் கட்டிகிட்டிருக்கேன் போயேன். காண்ட்ராக்டர்னு வெளிய சொல்றாங்க. நான் என்னாத்த காண்ட்ராக்டர். நான் இன்னும் கொலுத்து மேஸ்திரிதான்."

அவர் தங்கப்பல் தெரியச் சிரித்தார். அவர் மனைவி வேகமாகவும், துல்லியமாகவும் எடை போட்டாள். கழுத்து முழுவதும் பிடிப்பிடியாக நகைகள் இருந்தன.

செம நாட்டுக்கட்டை கேரேஜ்காரன் ஒருமுறை நினைத்துக்கொண்டான்.

"இதை விக்கறாராமா."

அவள் ஆச்சரியத்தோடு கேட்டாள்.

"சும்மா டப்புனு அந்த மாதிரியெல்லாம் கேட்காத."

"அவங்க கட்டிடம் கட்டி பெரிசுபண்ணி நல்லா வாழவேண்டிய இடம், நீ வந்து என்னமோ துட்டு இருக்குதுங்கறதுக்கு ஆடாத."

அவர் சீறலாகப் பேசினார்.

"சரி. கேட்கலை. ஒதுங்கிக்கலாம்."

"அப்படியெல்லாம் இல்லிங்கம்மா. இதை விக்கற எண்ணம் ஒண்ணு இருக்கத்தான் செய்யுது."

"யாருது இடம்."

"என்னுதுதாங்க."

"மொத்த இடமுமா."

"ஆமாங்க."

"இதுக்கு பட்டா இருக்கா."

அவன் மௌனமாக தயங்கினான்.

"வேற ஒருத்தர் கேட்டுட்டுப் போயிருக்காரு."

"நான் கேட்பதுக்கு பதில் சொல். இதுக்கு பட்டா இருக்குதா."

"இதுவரைக்கும் பட்டா இருக்குங்க."

"இது."

"இது கோயில் இடங்க."

"நீங்க நிக்க வச்சுருக்கீங்க."

"சும்மா இருக்கேன்னு சுவர் இடிச்சு விழுந்தது. நானா கொண்டு வந்து வண்டியை நிக்கவச்சேன். யாரும் கேட்கலை."

"வில்லங்கமான இடம்னு சொல்லு."

"ஆமாங்க. நானும் ஆறு, ஏழு வருஷமா அதை உபயோகப்படுத்திகிட்டுதான் இருக்கறேன். ஒருத்தரும் ஒண்ணும் சொல்லலை. வாடகையும் நான் கொடுக்கலை."

"வேற ஏதாவது கடிதப் போக்குவரத்து இருக்கா. காலி பண்ணச் சொல்லி சொன்னாங்களா."

"ஒண்ணுமே சொல்லலைங்க. நான் இருக்கறதே இந்த ஆளுங்களுக்கு தெரியாது."

"இந்த சுவர் யாரு கட்டினது."

"நான்தான் கட்டினேன்."

"இந்த செவுரு கட்டினது யாருன்னு கேட்டாங்களா."

"யாரும் ஒண்ணும் கேட்கலீங்க."

"அது உங்க பாத்தியதாவே ஆயிப்போச்சு."

"ஆமாம்."

"என்னா விலை சொல்றீங்க."

"நீங்க சொல்லுங்க."

"விக்கறவர் நீங்கதானே. நீங்கதானே விலை சொல்லணும்."

"கிரவுண்ட் பத்துலட்ச ரூபான்றாங்க."

"அதெல்லாம் போவாது. யார் சொன்னது. ஏமாத்தறான். மொத்தவிலை சொல்லுங்க."

"என் இடத்துக்கு பதினஞ்சு, அந்த இடத்துக்கு பத்து, இருவத்தஞ்சு."

"இதுக்குள்ள கால்வச்சு மாட்டிகிட்டோம்னா கோர்ட் செலவு அதுஇதுன்னு ஏகப்பட்ட விஷயம் இருக்கு. இருவத்தஞ்சு கொடுக்க முடியாதுங்க."

"பிறகு."

"இருவதுன்னா படியும்."

"நான் அப்புறம் சொல்றேங்க."

"எப்போ சொல்லுவீங்க."

"ஒரு வாரம் பொறுத்து சொல்றேங்க."

"ஒரு மாசம் பொறுத்து சொல்லுங்க. வில்லங்கமான இடம் கோயில் நிலத்தையெல்லாம் நாம இப்படி சட்டுனு சாப்பிடமுடியாது. அரசாங்கச் சொத்து. நிதானமா வரும் அரசாங்கம். தபதபன்னு வராது. ஆனா, நிச்சயம் வரும். அரசாங்கத்தை சமாளிக்கறது எல்லாராலும் முடியாது. என்னை

மாதிரி ஆளுங்களாலதான் முடியும்."
"என்னாதான் தருவீங்க நீங்க."
"நான் இருவது ரூபா தரேன்."
"ரொம்ப கம்மிங்க."
"இருவத்தோரு ரூபா தரேன்."
"என்னாங்க ஒரு ரூபால இருக்கு."
"இருவத்திரெண்டு ரூபா தரேன்."
"வேணாங்க."
"இருவத்திமூணு தரேன்."
"முடிஞ்சுபோச்சு."
"எவ்ளோ அட்வான்ஸ்."
அவன் மனைவி ஆச்சரியத்தோடு அவனைப் பார்த்தாள்.
"நல்ல நேரம் பிடிங்க."
அவன் பத்தாயிரம் ரூபாயும் மேலே ஒரு ரூபாய் நாணயமும் வைத்து பத்தாயிரத்தோரு ரூபாய் கொடுத்தான்.

"என்னாங்க. தபதபன்னு முடிச்சுட்டீங்க."
"அடுத்த கைக்கு மாத்திவிட்டுட மாட்டேன்."
"எவ்ளோக்கு."
"முப்பத்திமூணு."
"போகுமா."
"போகும்படியா வச்சுக்கணும்."
"எப்படி."
"இவனை பதினஞ்சு நாள்ல காலி பண்ண சொல்லணும். அந்த இடம் முழுக்க புதுசா ஆத்துமணல் அடிச்சு சுத்தி வெள்ளை பெயிண்ட் அடிச்சு அங்கங்க மரம் நட்டு முன்பக்கம் கேட் போட்டுடணும்."
இடம் கைமாறியது. அந்த மோட்டார் கார் கேரேஜ் ஓனர் வேளச்சேரி பக்கம் இடம் தேடினார். ஒரு இடம் வ...ங்கினார். வைத்திருந்த வண்டிகள் அனைத்தையும் அங்கே கொண்டுபோய் நிற்கவைத்தார். புதியதாக பலகை எழுதினார்.
"என்னாங்க. இங்க தண்ணி தேங்குமே. யாரோ கேரேஜ் ஓப்பன் பண்ணியிருக்கான். எவனோ ஏமாந்து தலையில கட்டியிருக்கான். இதுவும் வாங்கியிருக்கு."
"சொல்லக்கூடாது."
"நமக்கு என்னாத்துக்கு. எங்க யாரை ஏமாத்தினானோ இங்க இவன் ஏமாந்து போயிருக்கான்."
தெருவோடு போகிறவர்கள் பேசிக்கொண்டுபோனார்கள்.
"ஏன், என் பேர்ல வாங்கனீங்க."
அவள், இரவு ஜிப்பாகாரன் மனைவி அவனை கட்டித்தழுவிக் கொண்டு கேட்டாள்.

"எல்லாத்தையும் என்பேர்ல வாங்கணும்னாக்க இன்கம்டாக்ஸ் ப்ராப்ளம். அதான் உன்பேர்ல வாங்கினேன்."

"இது வில்லங்கமான இடம். அதனால என்பேர்ல வாங்கிட்டேன்னு சொல்லக்கூடாதா."

"என்ன வில்லங்கம். நீ வச்சுருந்தாதானடி வில்லங்கம். தூக்கி வித்துட்டீன்னா என்னத்த வில்லங்கம்."

"எப்போ விப்பீங்க."

அவன் சாமர்த்தியத்தால், அவள் சாமர்த்தியத்தால் ஆற்றுமணல் தூவி, வெள்ளைஅடித்து, இளங்கன்றுகள் நடப்பட்ட அந்த இடம் முப்பத்தைந்து ரூபாய்க்கு போயிற்று.

"எந்த இடம்.. இவ்ளோ பெருசா சொல்றீங்களே. நான் பார்த்ததே இல்லையே."

மாநகராட்சி ஊழியர்கேட்க, அவருக்கு உண்டானது தரப்பட்டது.

மாநகராட்சி அதிகாரிகள் அது வில்லங்கமான இடம் என்பதை மனதில் குறித்துக் கொண்டார்கள்.

"எவனாவது ஒருத்தன் கட்டிடம் எழுப்புவான் இல்லை. அப்போ குரல்வளையில கை வைப்போம். அது வரைக்கும் விட்ருவோம்." என்று தங்களுக்குள் பேசிக்கொண்டார்கள்.

அந்த இடத்தை இரண்டாம் முறை வாங்கியவன், பெரிய தொழில் செய்யவேண்டும் என்று புதிதாய் வந்தவன்.. தன் அண்ணனோடு இதுவரை செய்திருந்த வியாபாரத்திலிருந்து கத்தரித்துக்கொண்டு சுயமாக சம்பாதிக்க ஆசைப்பட்டவன்.

"உங்கண்ணாகிட்டேயிருந்து திடீர்னு பிடுங்கிண்டு பேரகறியேடா. நன்னாயிருக்கா இது. அவரை அம்போன்னு பாதியில விட்டு வறியே. நீ மேற்கொண்டு தொழில் பண்ண வேண்டாமா."

"ஏன். எங்கண்ணா எங்கப்பாவை அப்படித்தானே பாதியில விட்டு வந்தார். அப்போ இல்லாத நியாயம் இப்போ தெரியுதா. போறேன்னு சொன்னா போன்னு சொல்லுவீங்களா. விடாத பிடிச்சுகிட்டிருப்பீங்க. பாக்கெட் மணி தரேன்னுவீங்க. எல்லா லாபமும் நீங்களே சுருட்டிப்பீங்க. உங்களுக்கு கூடவே ஒரு கூலியாள் தேவையா. முடியாது. நான் சுயமா தொழில் பண்ணணும். தனியா நிக்கணும். ஆளை விடுங்க."

அவன் உதறிக்கொண்டு வந்தான்.

மிகப்பெரிய அளவில் கடன்பெற்று அந்த இடத்தையும் வாங்கினான்.

அந்த இடத்தில் நான்குமாடி கட்டடம் கட்ட வரைபடங்கள் தயாரித்தான்.

"எழுநூத்தி அம்பது ஸ்கொயர்பிட்னு வித்தோம்னாக்க

பிரமாதமா விலைக்கு போவும். நிச்சயமா வியாபாரம் ஆகும்."

அவனுக்கு பலபேர் தூபம் ஏற்றினார்கள். அந்த இடம் வில்லங்கமான இடம் என்று அவன் காதில் சொல்லப்பட்ட போதுகூட அவன் அதை ஆராயவில்லை.

"காசு கொடுத்து ஒருத்தர்கிட்டேயிருந்து முழுசா பட்டா வாங்கியிருக்கேன். அப்புறம் என்ன வில்லங்கம்" என்று அவன் முட்டாள்தனமாக சிந்தித்தான். என்னென்ன விதமாகக் கட்டினால் அதிக போர்ஷன்கள் ஏற்படுத்தலாம் என்று திரும்பத்திரும்ப வரைபடங்களை அவனே போட்டுப் பார்த்தான்.

அந்த ஊரின் சட்டமன்ற எம்.எல்.ஏ. வராண்டாவுக்கு வந்தார்.

அவன் எழுந்து நின்று கைகூப்பினான்.

"வாய்யா.. வா. ஒரு நாளைக்கு மோட்டர் சைக்கிள்ல வா. ஒரு நாளைக்கு மாருதிஜென்ல வா. இன்னொரு நாள் காண்டசா கார்ல போற. என்னாதான் பண்ற நீ சொல்லு."

"தொழில்தாங்க."

"என்னா தொழில்."

"ரியல் எஸ்டேட்டுங்க."

"அதைச்சொல்லு.. அதுலதாண்டா துட்டு."

"இல்லீங்க. இன்னிக்கு அரசியல்லதான் துட்டு."

"எவன் சொன்னான். கை துட்டை செலவு பண்ணி எலக்ஷன்ல நின்னு ஜெயிச்சோமே அந்த துட்டை மீட்கறதுக்குள்ள போதும் போதும்னு ஆகிப்போகுது. மறுபடியும் சவுக்குக்கட்டை கரிக்கே போயிடலாமான்னு பார்க்கறேம்ப்பா."

"அப்படியெல்லாம் இல்லைங்கண்ணா. அண்ணன் முயற்சி பண்ணா உங்களுக்கு கிடைக்காத காசா."

"எப்படி என்னத்த முயற்சி பண்றது. பெட்ரோல் பங்க் வந்தது. மறுபடியும் பிடுங்கிட்டானுவ. அதுல ஒரு நாப்பது ரூபா நஷ்டம். என்னாத்த செய்ய போ. நாம மாவு வித்தா காத்து அடிக்குது. உப்பு வித்தா மழை பெய்யுது."

அவர் வசனம் பேசினார். அவன் கைதட்டினான்.

"இல்லைண்ணா. ரியல் எஸ்டேட் பிஸினஸ் வந்துடுங்க."

"தெரியுமே. வலைபோட்டு இழுத்துடுவீங்களே."

"அண்ணா என்கூட வரவேணாம்னா. ஆயிரம்கண்ணி கோவில் நிலம் ஒண்ணு இருக்குது. அதை தன் நிலத்தோட சேர்த்து ஒரு கேரேஜ்காரன் ஒரு ஆளுக்கு வித்துட்டான். அந்த வித்த இடத்தை இன்னொருத்தன் வாங்கிட்டான். அந்த இடத்தை நீங்க வாங்கலாம்."

"வில்லங்கம் இருக்கற இடம்னு சொல்றியே."
"ஆமாம்."
"அப்புறம் நான் எப்படிடா வாங்கறது."
"அதனாலதான் நீங்க வாங்க முடியும்னு சொல்றேன்."
"புரியலையே."
"அரசாங்கத்துக்கு இதை போட்டு கொடுத்துடறது. தப்பான நிலத்தை தப்பானபடி வாங்கியிருக்காங்க. இது கோயில் நிலம் அப்படின்னு தண்டோரா போடற லெவலுக்கு கொண்டு வந்துடறது. அதுக்கப்புறம் அரசாங்கத்துல இருக்கற அதிகாரிகளை சரிபண்ணி அந்த இடத்தை நீங்களே வாங்கிக்கறது."
"எந்த இடத்தை."
"ஒரு பாழடைஞ்ச வீடு. அதனுடைய கொல்லைப்புறம் சேர்த்தே."
"நல்லாயிருக்கே நீ சொல்றது." யோசித்தார்.
"எந்த இடம்டா."
"வாங்க காமிக்கறேன்."
"அடடா.. ஆத்து மணலை போட்டு மறைச்சுட்டானா. இதுவரைக்கும் கோவில் இடம். இதுவரைக்கும் அவன் இடம் ரெண்டுத்தையும் கலந்து வித்துட்டானா."
"சோம்பேறி நாயிங்களா. ஆப்படிக்கறேன் பாரு."
ஆப்பு இறங்கியது. அரசாங்கத்திலிருந்து அவனுக்கு நோட்டீஸ் போனது.
அவன் பதறினான். அண்ணாவிடம் ஓடினான்.
"இப்போ ஏன் எங்கிட்ட வர, வராத போ."
அண்ணன் அவனைத் துரத்த அவன் யாரிடம் போவது என்று தெரியாமல் மறுபடியும், யார் விற்றானோ அவனிடம் போய் நின்றான்.
"என்னை ஏமாத்திட்டீங்களே.. என்னை ஏமாத்திட்டீங்களே."
"நீ யாருன்னே தெரியாதேப்பா. என்னை ஏமாத்திட்டீங்களேன்னு சொல்ற."
அவன் மிரட்ட, அவன் மனைவி கொண்டுவந்த காப்பியை அவன் முகத்தில் வீசினாள்.
"போடா.. போடா வெளிய" என்று கழுத்தைப் பிடித்து தள்ளினாள்.
முப்பத்து மூன்று லட்சரூபாய் கைவிட்டுப் போய்விடுமோ என்று அவன் கதறி அழுதான்.
"எல்லாத்துக்கும் காரணம் சட்டமன்ற உறுப்பினர். போய் பாரு."

அவனை ஏவினார்கள்.

சட்டமன்ற உறுப்பினர் "எங்கிட்ட நேரடியா பேசாத தம்பி. எனக்குத் தெரிஞ்ச ஒரு ரியல் எஸ்டேட் ஆள் இருக்கான். அவுங்கிட்ட போ. எனக்கு இந்த விஷயங்கள் நிறைய தெரியாது. தப்பு பண்ணா கண்டிக்கறதுதான் என் வேலையே தவிர, எப்படி தப்பிக்கறதுன்னு எனக்குத் தெரியாது. நான் அப்பாவி மனுஷன். தெரிஞ்சவன்கிட்ட போ" என்று மோட்டர் சைக்கிள்காரரிடம் அவனை அனுப்பினார்.

"ஜெயிலுக்குப் போகாத இருக்கணும்னு ஆசைப் படறீங்களா."

"ஆமாங்க."

"விட்ருங்க."

"எதை."

"நீங்க தப்பா வாங்கின நிலத்தை. கேரேஜ் நிலம் வாங்கினதுல தப்பேயில்லை. கேரேஜ் வரைக்கும் உங்களதுதான். அதை யாரும் ஒண்ணும் பண்ணமுடியாது. ஆனால், கால்தாண்டி கொல்லைப்புறத்துல வச்சிட்டீங்க. அங்கதான் தப்பு ஆயிப்போச்சு. எனவே, இப்படியொரு சுவர் எழுப்பி, நான் இந்த இடத்தை விட்டுட்டேன்னு எழுதி கொடுத்துடுங்க சரியாப் போயிடும்."

அவன் வேலி போட்டான். இந்த இடத்தை விட்டுவிட்டேன் என்று அரசுக்கு எழுதினான். அரசு அவன் சமாதானத்தை ஏற்றுக் கொண்டது. குறைந்தபட்சம் இருபது ரூபாய் போகும் இடத்தை முப்பத்து மூன்று ரூபாய்க்கு வாங்கியதற்காக அவன் வருத்தப்பட்டான்.

நல்லவேளை ஜெயிலுக்குப் போகவில்லையே என்று சமாதானம் அடைந்தான்.

தொடர்ந்து அந்த இடத்தில் கட்டிடம் கட்டி எழுப்பவும், வாங்கின கடனை அடைக்கவும் முயற்சி செய்தான்.

கட்டிடம் அங்கு வேகமாக எழும்பியது.

"அண்ணா.. இப்போ இது கோயில் நிலமாகிப் போச்சுண்ணா. இதை நீங்க வாங்கிக்கலாம்னா."

"நான் வாங்க முடியாதுடா."

"உங்க மச்சான் பேர்ல வாங்குங்க."

நூறு வருடங்களுக்கு முன்பு கட்டப்பட்ட அந்தக் கட்டிடம் ஐம்பது வருடங்களாக வீணாக இருக்கிறது. இதை எந்த விதமாகவும் கோயில் உபயோகிக்கவில்லை. இதை பழுதுபார்த்து சீரமைக்கவும் முயலவில்லை. அல்லது கட்டிடம் கட்டி வாடகைக்கு விடவும் ஏற்பாடு நடக்கவில்லை. எனவே, இந்த இடத்தை எனக்கு விற்றுவிட்டால் நான்

அரசாங்கத்திற்கு உடனடியாக பணம் கட்டி... என்று ஒரு மனு போயிருந்தது.

அந்த மனு மந்திரிகளிடம் போக மந்திரிகள் இடம் எது என்று ஆவலுற்றார்கள்.

"எனக்கு வேணும்" என்று சட்டமன்ற உறுப்பினர் சொல்ல மந்திரிகள் மெல்ல பின் வாங்கினார்கள்.

"குறுக்கிடாமல் இருப்பதற்காக சமாதானக் காசு வாங்கிக் கொண்டார்கள்."

"இன்னும் நிலமே வாங்கலை. ஆனா, ஏழு ரூபா செலவு. என்ன. புல்லு பிடுங்கி ரியல் எஸ்டேட் உத்தியோகம்டா."

சட்டமன்ற உறுப்பினர் கத்தினார்.

"பொறுமையா இருங்கண்ணா. ஏன் கோவிச்சுக்கறீங்க. ரோடு நுனிலேர்ந்து கொல்லைப்புறம் வரைக்கும் நாப்பது ரூபா விலை போகுது. நீங்க பத்து ரூபாய்க்கு கேளுங்க."

"தரமாட்டானே."

"பதினஞ்சு ரூபா வரைக்கும் போகலாம்."

"ஆபீஸரை சரிகட்டுங்கண்ணா. ஏற்பாடு பண்ணுவானுங்க. அவங்களுக்கு தெரியும். ஸார் அதுக்கு என்ட்ரி இல்லை. அந்த அப்ரோச் சரியா இல்லை. கட்டிடம் இடிச்சு வெளிய கொண்டுவரத்துக்குள்ளேயும். முன்னபின்ன ஆயிடும் ஸார். லாரியே போகாத இடம். அழகா பேசுவாங்க."

சட்டமன்ற உறுப்பினரின் மைத்துனன் அந்த இடத்தை பதினெட்டு ரூபாய்க்கு வாங்கினான்.

"என்னா பண்றது."

"கொடுத்திருங்கண்ணா."

"யாருக்கு."

"எனக்கு."

"தெரியும்டா டேய். சுத்தி சுத்தி கழுகுமாதிரி சுத்திகிட்டிருந்ததே.. இந்த இடத்தை கொத்திகிட்டு போறதுக்குத்தான்."

"நீங்க என்னண்ணா பண்ணுவீங்க. அதைச் சொல்லுங்கண்ணா. நான் உதவி செய்யறேன். கட்டிடம் கட்டி எழுப்பி வித்தா லாபமில்லை."

"யாருடா கட்டுவீங்க."

"நான்தான். உங்களுக்கு இருக்கற வேலையே பார்க்க முடியாதே. கட்டிடத்தை கட்டமுடியுமா."

"என்னா விலைக்கு தருவ."

"பதினெட்டு ரூபாய்க்கு வாங்கணீங்கண்ணா ஒரே மாசத்துல பன்னெண்டு ரூபா வரும்னா லாபம். முப்பது ரூபாய்க்கு கொடுங்கண்ணா."

"நாப்பது ரூபா விலை போவுன்ற. அப்புறம் முப்பது ரூபான்ற."

"சரிங்கண்ணா முப்பத்தஞ்சு ரூபாய்க்கு கொடுங்கண்ணா."

"சரி போ. முப்பத்தஞ்சு ரூபாய்க்கு எடுத்துகிட்டு போ."

பதினெட்டு ரூபாய்க்கு வாங்கி ஒரே மாசத்தில் பதினேழு லட்சரூபாய் லாபம் என்றால் சட்டமன்ற உறுப்பினருக்கு அதுதான் சரியான விஷயம் என்றுபட்டது.

இங்கே கட்டிடம் கட்டிக்கொண்டிருக்க முடியாது. வேறு இடத்தில் பட்டணத்தின் ஒதுக்குப்புறத்தில் பெரிதாய் பங்களா கட்டிக் கொள்ளலாம். அவர் கைமாற்றி விட்டார்.

மோட்டார் சைக்கிள்காரன் வெற்றிகரமாக தன் பலகையை அந்த இடத்தில் ஆணி அடித்தான். ஆயிரம்கண்ணியிடம் போய் விழுந்து வணங்கினான். அழுதான்.

எனக்கு கொடுத்திருக்கடி.. எனக்கு கொடுத்திருக்கடி. உனக்கு என்ன வேணும்னாலும் பண்ணுவேண்டி. முதல்ல ஒரு ரூபாய் எடுத்து வைக்கறேன். இங்க கட்டிடம்கட்டி நான் நல்லபடியா இருக்கணும்.

ஆயிரம்கண்ணி புன்னகை செய்தாள்.

"ராமசுப்ரமணியம்.. இந்தப் பகுதியிலயே ஒரு இடம் வாங்கியிருக்கேன். வந்து பூமி பூஜை பண்ணித்தறியா."

"பண்ணித் தரேனே."

"எவ்ளோ செலவாகும்."

"ஒரு ஆயிரம் ரூபாய் கொடுங்க. அடிப்படையான சாமான்கள் வாங்கிடறேன். அதுக்கப்புறம் என்ன செலவுன்னு சொல்றேன். தட்சணை உங்க இஷ்டம். அன்னிக்கு அபிஷேகம் கணஜோரா பண்ணேன். ஒரு தவலை பால் ஊத்தினேன். இருநூத்திநாப்பது ரூபா மிச்சம். பத்துரூபா நான் எடுத்துண்டு. இருநூத்தி முப்பது ரூபாயும் உண்டியல்ல போட்டுட்டேன்."

"ரொம்ப சந்தோஷம் ராமசுப்ரமணியம். அன்னிக்கு அபிஷேகம் பண்ண நாள்லேர்ந்து எனக்கு வாழ்க்கையே திசைமாறிப்போச்சு. இப்போ ஒரு கோடி பிஸினஸ்ல இறங்கப் போறேன். நீ பண்ற பூஜையிலதாம்ப்பா இருக்கு அது."

"நன்னா பண்ணித்தரேன். கவலையே படாதீங்கோ."

"நேர்கிழக்க வாசல் வச்சாக்க ஈசான்ய மூலையில கிணறு. ஒரு ப்ளாட் அறுநூத்தி அம்பது ஸ்கொயர்பிட் சாலிடா வருது."

கட்டிட வரைபடவல்லுனர்கள், மோட்டார் சைக்கிள் காரனிடம் தெரிவித்தார்கள்.

"இருக்கட்டும். அப்படியே வைங்க. எனக்கு ஃபர்ஸ்ட் ப்ளோர்ல இருந்துதான் கணக்கு. முன்பக்கம் கார்பார்க்கிங்

முக்கியம். அப்படி இருந்ததுன்னா கூட விலை போகும். கார் பார்க் இல்லைன்னா.. இந்த மாதிரி சந்துத்தெருவுல வீடு வாங்கமாட்டாங்க. கார் வச்சிருக்கறவன் டப்புனு வாங்குவான்."

அவன் கார்பார்க் மிக முக்கியம் என்று சொல்ல நானூற்று ஐம்பது சதுர அடியில் ஈசான்ய மூலையில் ஒரு போர்ஷன் துருத்திக்கொண்டு நின்றது.

ராமசுப்ரமணியன் பூமி பூஜை செய்யத் துவங்கினான்.

இரண்டு வருடங்களுக்கு முன்னால் நிர்வாக அதிகாரியின் விண்ணப்பத்தின்படி ரூபாய் ஒரு லட்சம் மகா கும்பாபிஷேகத்திற்காக இந்து அறநிலையத்துறையால் கோவிலுக்கு ஒதுக்கப்படுகிறது. இந்த செலவு தணிக்கைக்குரியது. அதற்கு மேற்கொண்டு ஆகும் செலவுகளை பக்தர்களிடம் அணுகி பெற்றுக் கொள்ளலாம் என்றும் உத்தரவிடப்படுகிறது. கும்பாபிஷேகம் நடக்கும் தேதிகளை முன்கூட்டியே தெரிவித்தல் நலம்.

இப்படிக்கு,
ஆணையர்.

என்று எழுதப்பட்டிருக்க மறுபடியும் மோகனசுந்தரம் சிவாச்சாரியார் க்ளையும், குமாஸ்தாக்களையும், வேலையாட்களையும் கூப்பிட்டு பேசினார்.

"கும்பாபிஷேகம் நடத்தறத்துக்கு வெளி ஆளை கூப்பிடக்கூடாது."

விஸ்வநாத சிவாச்சாரியார் உரக்கச்சொல்ல, "உங்களுக்கு அந்த வேலை தெரியாதுங்களே."

மோகனசுந்தரம் அதே குரலில் சொன்னார்.

"எனக்கு அந்த வேலை தெரியாதுன்னு உங்களுக்கு தெரியுமா."

"மத்த ஐயருங்க சொல்லிதான் சொல்றேன்."

"எந்த நாய் சொன்னான்."

"இன்னொரு தடவை இந்தக் கோயில்ல கெட்ட வார்த்தை பேசினீங்கன்னா.. நான் போலீஸ்ல பிடிச்சு கொடுப்பேன்."

"சும்மா சும்மா மிரட்டாதீங்க."

மோகனசுந்தரத்தை சிவாச்சாரியார் கடுமையாக எதிர்த்தார். இடையறாது இடையறாது அவருக்குள் ஒரு கோபம் பொங்கிக் கொண்டே இருந்தது. எல்லோர் மீதும் பரவிக்கொண்டே இருந்தது.

தன் கோபம் பற்றி அவர் பயந்தார். ஏதோ ஒரு நாள் எவரையோ கொலை செய்து விடுவோமோ, ஜெயிலுக்குப் போவோமோ என்ற கலவரம் அவருக்குள் இருந்தது. ஆனால்,

அந்தக் கலவரமும் பயத்தைக் கொடுத்தது. உடனடியாக கடுஞ்சொற்களை அவரிடமிருந்து பீறிட வைத்தது. தன்னை அடக்க வழியில்லாத மனிதனாய், வலுவில்லாத மனிதனாய் தன்னுடைய வாய் எங்கு அழைத்துக்கொண்டு போகிறதோ அங்கு போகின்ற மனிதனாய் அவர் தொடர்ந்து தவறுகள் செய்து வந்தார்.

"நிர்வாக அதிகாரி சொல்றதுல ஒரு நியாயம் இருக்கு இல்ல. ஹோமகுண்டம் கட்டி கர்த்தாவை உட்காரவச்சு. தர்பக்கட்டை கையில வாங்கி நானாவித தேவதைகளை ஆவாஹனம் பண்ற விஷயம் உங்களைவிட கெட்டிக்காராள இருக்கறவா பண்ணுவா. நீங்க அஷ்டோத்தரம் வரைக்கும் சொல்றீங்க. உங்களுக்கு இன்னும் சகஸ்ரநாமமே மனப்பாடம் ஆகலை."

ராமசுப்ரமணியம் சொல்ல, சிவாச்சாரியார் கடுங் கோபத்தோடு அவனைப் பார்த்தார்.

"உனக்கு சகஸ்ரநாமம் தெரியுமாடா."

"தெரியும்."

அவன் நிதானமாய், உறுதியாய் பதில் சொன்னான்.

அந்த உறுதி, நிதானம் விஸ்வநாத சிவாச்சாரியாருக்கு மேலும் கோபத்தைக் கொடுத்தது.

"இங்கிருந்து ஒரு கிலோமீட்டர் தொலைவுல இன்னொரு பெரிய கோவில் இருக்கு. அங்க ஒரு சிவாச்சாரியார் இருக்கார். அவர் பேரும் விஸ்வநாதன்தான். அவரை கூட்டிவந்து இந்த ஹோமத்தை நடத்தச் சொல்லப்போறேன்."

"கூடாது."

மோகனசுந்தரத்திற்கு மறுப்பாக நாற்காலியை உதைத்துக் கொண்டு விஸ்வநாதன் எழுந்திருந்தார்.

"என்னை சொல்றதுக்கு உங்களுக்கு அதிகாரம் இல்லை. அந்த ஹோமம் உங்களைவச்சு நடத்த முடியாது."

"நான் எதுக்கு இங்க இருக்கேன்."

"வெறுமன அர்ச்சனை பண்றதுக்கு."

"நான் எட்டணா காசுக்கு அர்ச்சனை பண்ணணும். எவனோ வந்து ஹோமம்கறபேர்ல லவட்டிண்டு போவானா."

விஸ்வநாதன் மீண்டும் கத்தினார்.

"லவட்டிண்டு போறத்துக்கு யாரும் ஹோமம் பண்ணலை. எல்லாரும் நல்லா இருக்கறதுக்குன்னு பண்றோம். உங்க புத்தியே லவட்டிகிட்டு போறது. வாரிகிட்டு போறது. எடுத்துகிட்டு போறதுலதான் இருக்கு. இதோ பாருங்க."

மோகனசுந்தரம் சிரிப்போடு சொல்ல அந்த சிரிப்பு விஸ்வநாதனுக்கு கோபத்தைக் கொடுத்தது.

"நான் ஸ்டே ஆர்டர் வாங்குவேன்."

"எதுக்குங்க."

"ஹோமம் நடக்கக்கூடாது. கும்பாபிஷேகம் நடக்கக் கூடாதுன்னு."

"முடிஞ்சா வாங்குங்க. உங்க பேர்தான் கெட்டுப்போகும். ஏற்கனவே ஊர்ல உங்க பேர் கெட்டுப்போயிருக்கு. உங்களை மரியாதை இல்லாமதான் எல்லாரும் பார்க்கறாங்க."

"எவன் பார்க்கறான்."

"நீங்க போய் ஸ்டே வாங்கிப் பாருங்க. யார் யார் மரியாதை இல்லாத உங்களை பார்க்கறாங்கன்னு தெரியும்."

"டேய் காளிதாசா வெளிய வாடா."

நிர்வாக அதிகாரி வெளியே வந்தார்.

"ஒரேயொரு ஐயர்தான் இருக்காரு. அதனால கொஞ்சம் நேரமாகும். யாரும் கோபப்படாம இருக்கணும்."

"கோவப்படற ஐயரு போயிட்டாரு இல்ல. நாங்க நிதானமா இருக்கோம் கவலைப்படாதீங்க."

ஜனங்கள் உடனடியாக பதில் சொன்னார்கள்.

மோகனசுந்தரம் சந்தோஷமானார்.

"யாராவது தேங்காய் உடைச்சு பூ பழம் பிரிச்சு கொடுத்தா இன்னும் வேகமா செய்துட முடியும்" என்று ராமசுப்ரமணியன் நிர்வாக அதிகாரியிடம் முணுமுணுப்பாகப் பேச, அந்தப்பேச்சு சீனுவாசன் காதில் விழுந்தது.

"நான் உடைச்சு தரலாமா. கருவறைக்கு வந்து உட்கார்ந்துக்கலாமா."

அவர் கேட்டார்.

கன்னியப்பன் தேங்காய், பழங்களை வரிசையில் நிற்பவர்களிடமிருந்து வாங்கித்தர தேங்காயை பளிச்சென்று ஒரே வீச்சில் அரிவாளால் வெட்டி குடுமியைப் பிய்த்து பழங்களைத் தனியாக எடுத்து வைத்து பூவை ராமசுப்ரமணியனிடம் கொடுத்து வெற்றிலைப்பாக்கு பிரித்து வைத்து சீனுவாசன் உதவி செய்தார். வியர்வை முதல் பதினைந்து நிமிடம் பொங்கி வழிந்தது.

அப்படித்தான் ஆரம்பத்தில் இருக்கும். வியர்வை அடங்கியபிறகு இந்த இடத்திற்கு பழகிவிடும் என்று சீனுவாசனுக்குப் புரிந்தது. உடம்பை மேல்துண்டால் பலமுறை துடைத்துக்கொண்டார். இடையறாது வனதுர்கை மந்திரம் சொல்லத் துவங்கினார். நிமிர்ந்து ஆயிரம் கண்ணியைப் பார்த்தார்.

எவனோ ஒருத்தன். என்னை பிடிச்சு நெஞ்சுல கைவச்சு தள்ளினான். அவனை பிடிச்சு வெளிய அனுப்பிட்டு என்னை கொண்டு வந்து உள்ள உட்காரவச்சுட்ட இல்ல. நீ பெரிய

ஆளும்மா.

அவனைப்பார்த்து வாய்விட்டுச் சிரித்தார். ராமசுப்ரமணியம் என்ன என்று கேட்டான்.

"ஒண்ணுமில்லை. உனக்கு பெரிய மரியாதை வரப்போகிறது. உற்சாகமா பண்ணு" என்று அவனை தட்டிக் கொடுத்தார்.

உரத்த குரலில் மந்திரம் சொல்லி, கற்பூர ஆரத்தி காட்டினான். தேங்காய், பழங்களை கொண்டுபோய் கொடுக்கும்போது 'சகல சம்பத்தும் கிடைக்கட்டும்' என்று வாழ்த்தினான். 'தீர்க்க சுமங்கலி பவ' என்று சொன்னான்.

"குழந்தை க்ஷேமமா இருப்பா" என்று நெற்றியில் விபூதி இட்டான்.

ஜனங்களுக்கு சந்தோஷம் கரைபுரண்டது. அவர்கள் கேட்பதெல்லாம் நல்ல இடத்திலிருந்து நல்லவிதமான இரண்டு மூன்று வார்த்தைகள் மட்டுமே.

திருமணமாகாத ஒரு சிறுபையன், மிக அழகாக இப்படி பூஜை செய்வதைப் பார்த்து அவர்கள் சந்தோஷமானார்கள்.

காணிக்கைகள் தட்டில் கூடுதலாக விழுந்தன.

விஸ்வநாத சிவாச்சாரியார் முரட்டுத்தனமாகப் பேசுகிறார். கெட்ட வார்த்தைகள் உபயோகிக்கிறார். உதாரணத்திற்கு துடைப்பம், உரோமம், நாய், ஆட்டமுடியாது, உன் அம்மாவை போன்ற வார்த்தைகளை கொச்சையாகப் பயன்படுத்துகிறார்.

கும்பாபிஷேகம் தன் முன்னிலையில்தான் நடக்க வேண்டும் என்றும் இல்லாவிட்டால் ஸ்டே ஆர்டர் வாங்குவேன் என்றும் சொல்லிவிட்டுப் போயிருக்கிறார். இன்று அவர் வரவில்லை. அவர் மகனும் வரவில்லை. அவர் மகனும் இவ்விதமாகவே நடந்து கொள்கிறார் என்று கடிதமெழுதி மேலே அவசரம் என்று போட்டு அதை ஆணையருக்கு மோகனசுந்தரம் அனுப்பி வைத்தார்.

நாலாயிரம் ரூபாய் புடவையை இருநூறு ரூபாய்க்கு ஏலத்தில் எடுத்ததாகக் கிட்டினார்கள். ஆனால், ஏலமே நடைபெறவில்லை.

மோகனசுந்தரம் இம்மாதிரி பல திருட்டுகள் செய்கிறார். இதை அறநிலையத்துறை தடுத்து நிறுத்தவேண்டும். விசாரணை கமிட்டி அமைக்கவேண்டும். இல்லையெனில் பொதுமக்கள் அதிருப்திக்கு ஆளாவார்கள். இந்த விஷயங்கள் பத்திரிகைக்கு ரகசியமாக எழுதப்பட்டு விட்டன. பத்திரிகையாளர்கள் துப்பறிந்து கொண்டிருக்கிறார்கள்.

விஸ்வநாத சிவாச்சாரியார் வேறொரு நபரைக்கொண்டு அறநிலையத்துறைக்கு எழுதிப்போட்டார்.

"என்னாங்க இது. நொய் நொய்யினு இந்த

கோயில்லேர்ந்து மட்டுமே இந்த மாதிரி தகராறு வந்திருக்கு. மோகனசுந்தரம் என்னென்னவோ சிவாச்சாரியாரை சொல்றாரு. சிவாச்சாரியார் என்னென்னவோ மோகன சுந்தரத்தை சொல்றாரு. என்னதான் இங்க நடக்குது."

"இதெல்லாம் நம்ம தலையில வச்சு ஓட்டமுடியாது."

"பத்திரிக்கை அனுப்பலேன்றாங்களே."

"அதான் உதவி ஆணையர்னு ஒருத்தர் உட்கார்ந்துகிட்டிருக்காரு பாருங்க. அவரை அனுப்புங்க."

"அவருக்கு சாமிமேலயே நம்பிக்கையில்லை."

"அதான் கரெக்ட். அது கோயில்னு நினைக்காம, கோர்ட்டுன்னு நினைச்சு விசாரிப்பான் இல்ல. அவன்தான் கரெக்ட். போய் என்னென்னு விசாரிக்கச் சொல்லுங்க."

அந்தக்கட்சி சிறப்பான முறையில் ஆட்சிக்கு வரும் என்று தெரிந்ததால் அவனுக்கு கதிரவன் என்று பெயர் வைத்தார்கள். அவன் படித்து முடித்து வயதாகி வேலைக்கு போகும்போது அந்தக்கட்சி மிக உயரத்தில் இருந்தது. அந்தக்கட்சி இரண்டாம் முறையாக செங்கோலோச்சிக் கொண்டிருந்தது.

"அவரு புள்ளையா நீ. உங்க வீட்ல ரெண்டு தடவை சாப்பிட்டிருக்கேன்ப்பா."

முதலமைச்சர் அவரை கட்டிக்கொண்டார்.

"எங்க இருக்க."

"அறநிலையத்துறையில ஸார்."

"அட... நம்மாளு அறநிலையத்துறையில இருக்கறதா. வேற இடத்துக்கு மாத்திட்டுமா."

"இல்லைங்க. என் வேலை இங்கதான். எந்த இடத்துல நம்ம எதிரிங்க இருக்காங்களோ அந்த இடத்துலதான் நாம வேலை செய்யணும்."

"அடிசக்கை. விதை ஒண்ணு போட்டு சுரை ஒண்ணா முளைக்கும். புலிக்குப் பிறந்தது பூனையாகுமா. வாழ்க.. வாழ்க.. வாழ்க."

மறுபடியும் அவர் அணைத்துக் கொண்டார்.

"கேமராக்கள் உடனே அதை விழுங்கின. தக்க வைத்துக் கொண்டன."

அவன் சரியான நேரம் பார்த்து பதவி உயர்வு வேண்டும் என்று மனு கொடுத்தபோது மூன்றாவது நாளே அவனுக்கு பதவி உயர்வு கிடைத்தது.

அவன் அந்த அலுவலகத்தில் சந்தோஷமாக தன் வேலைகளைச் செய்தான்.

"நாங்கள் கடவுளை எதிர்க்கவில்லை. கடவுளை நம்புகின்ற உங்கள் நம்பிக்கையை எதிர்க்கவில்லை. கடவுள் பெயரால் நடத்துகின்ற அக்கிரமங்களைத்தான்

எதிர்க்கிறோம்." என்று அவன் தன்னைச் சுற்றியுள்ளவர்களிடையே பேசினான்.

அவ்விதமே நடந்து கொண்டான்.

ஜனங்கள் கூடும் மிகப்பெரிய திருவிழாக்களுக்கு கதிரவன் அழைக்கப்படுவான். அதிகாரி என்ற முறையில் ஆலோசனை கூட்டங்களில் கலந்து கொள்வான்.

"இந்தக்கோயில் புளியோதரை. அந்தக்கோயில் சர்க்கரைப் பொங்கல். இங்க ஒரு ஐயரு பண்ணுவாரே அந்த வெண்பொங்கல்" என்று உணவு வகைகள் மூலம் கோயிலை அடையாளம் கண்டுகொள்வார். கோயில் சுத்தமாக இருக்க வேண்டும் என்பதில் கண்டிப்பாக இருந்தான். உணவு வகைகள் சரியாக தயார் செய்ய வேண்டுமென்பதில் கடுமை காட்டினான்.

"நீ கையில சர்க்கரைப்பொங்கல் கட்டி கொடுத்துட்டேன்றதனாலயே உன்னை கேள்வி கேட்கமாட்டேன்னு நினைச்சுண்டிருக்கியா. அதெல்லாம் வேற ஆளைப்பாரு, தூக்கி சர்க்கரைப்பொங்கலை தெருவுல போட்டு போயிடுவேன். உனக்குதான் சாமி. எனக்கு சாமி இல்லை. இறங்கி கண்ணை நோண்ட ஆரம்பிச்சேன்னா தாங்கமாட்ட. உண்மையில உங்க சாமியைவிட நான் ரொம்ப மோசமானவனா இருப்பேன். அத்தனையும் பொதுஜனம் காசு. அதை பாழ்படுத்தறதுக்கு உனக்கு எந்த அதிகாரமும் கிடையாது. பிக்பாக்கெட் அடிக்கறானே அவனைவிட கேவலம் சாமி பேரால கொள்ளை அடிக்கறவன். வெளியில நின்னு வறியா வறியான்னு கூப்பிடறானே அந்தப்பொம்பளையவிட கேவலம் சாமிபேரால காசு திருடறது. ஜாக்கிரதை. எங்கிட்ட மாட்டின ஒழிச்சு கட்டிடுவேன்."

அவன் உரக்க பல கோவில் அலுவலகங்களில் பேசியிருக்கிறான்.

அவன் கடுமை பல கோவில் அதிகாரிகளுக்கு சிம்ம சொப்பனமாக இருந்தது.

"என்னாங்க மோகனரங்கம்.. ஒரு பக்கம் உங்களைப்பத்தி நல்ல ரிப்போர்ட். இன்னொரு பக்கத்துலேர்ந்து கெட்ட ரிப்போர்ட். என்ன பண்ணணும்னு நினைக்கறீங்க."

எதிரே உட்கார்ந்து கொண்டான். மோகனரங்கம் கைகட்டி நின்றிருந்தார்.

"அதெல்லாம் ஒண்ணும் கைகட்ட வேணாம். எதிர உட்காருங்க."

அவன் எழுந்து நின்று, அவர் தோளைப்பற்றி உட்கார வைத்தான்.

"கெட்டதுன்னு ஒரு ஆளைப்பத்தி யார் வேணாலும்

சொல்லலாம். கெட்டதா அப்படின்னு நீங்க தீர விசாரிக்கலாம். உங்களுக்கு எல்லா ரைட்டும் இருக்கு. நீங்க எந்த கேள்வி கேட்டாலும் நான் பதில் சொல்லத் தயார்."

இந்தப்பதிலே அவனுக்கு சந்தோஷத்தைக் கொடுத்தது.

"அப்படித்தான் பேசணும். கோயில் உண்டியலை என்னிக்கு திறந்தீங்க."

அவர் தேதி சொன்னார்.

"எவ்வளவு இருந்தது."

"பதினஞ்சாயிரம் ரூபா."

"மூணு மாசத்துக்கு பதினஞ்சாயிரத்து சொச்சம்னா ரொம்ப குறைவு இல்ல."

"ஆமாம்."

"ஒரு பிள்ளையார் கோவில்லகூட கூடுதலா வருது. ஏன் நம்ம கோயில்ல வரமாட்டேன்னுது. கூட்டம் ஜாஸ்தி இல்லையா."

"வருதுங்க. கொஞ்சம் ஆதரவா நாம நடந்துக்கறது இல்லை. பால் குடம், சண்டி ஹோமம்னு அப்பப்போ விசேஷம் நடத்தினாதான். ஜனம் வரும். அப்படி விசேஷம் நடத்தறதுக்கு ஆரம்பத்துல நாம காசு போடணும். அரசாங்கத்துலேர்ந்து அப்படி ஒண்ணும் சேங்ஷன் செய்ய மாட்டேன்றாங்க. அவங்க சேங்ஷன் பண்ணி நமக்கு வரதுக்குள்ளேயும் லேட் ஆயிடுது."

"ஒரு லட்சரூபாய் சேங்ஷன் பண்ணியிருக்கோமே."

"ரெண்டு வருஷம் முன்னாடி எழுதி கேட்டது. இப்போ சேங்ஷன் ஆச்சுன்னு சொல்றீங்க. ஒரு லட்சரூபாயை வச்சுகிட்டு என்னா கும்பாபிஷேகம் செய்ய முடியும். ஹோமத்துக்கே சரியாப் போயிடும்."

"உங்களுக்கு ஒரு லட்ச ரூபாயில கும்பாபிஷேகம் முடிங்கன்னு நாங்க சொல்லலை. மத்தபடி நீங்க ஜனங்ககிட்டேயிருந்து எடுக்கணும்."

"நல்லா எடுக்கலாங்க. ஆனா, வர ஜனங்களை மரியாதையா நாம நடத்தறதே இல்லையே."

"யாரு.. யார்.. மேல குத்தம் சொல்றீங்க."

"யாருன்னு சொல்றது."

"அப்படிப் பேசக்கூடாது. கரெக்டா சொல்லணும். இன்னார்மேல தப்புன்னு சொல்லணும்."

"சிவாச்சாரியார் முரட்டுத்தனமா நடந்துக்கறதா எனக்கு ரிப்போர்ட் இருக்கு."

"யார் சிவாச்சாரியார் கூப்பிடுங்க."

"ஒரே ஒரு பையன்தான் இப்போ இருக்கான்."

"மத்தவங்க என்ன ஆச்சு. மூணு பேரு உண்டுன்னு சொல்லி கேள்விப்பட்டிருக்கேனே."

"அவங்க ரெண்டு பேரும் ஆறுநாளா வரலை. ஏன் வ்ரலைன்றதுக்கு எந்தக்காரணமும் சொல்லலை. நான் நோட்டீஸ் அனுப்பிட்டேன். ஆள் விட்டுப் பார்த்துட்டேன். வரமுடியாது போன்னுதான் சொல்றாங்க."

"அப்படியா. நான் பார்த்துக்கறேன் அதை. இப்போ இருக்கற சிவாச்சாரியார் யாரு. அவரை வரச்சொல்லுங்க."

ராமசுப்ரமணியம் எதிரே வந்து நின்றான்.

"சின்ன பிள்ளையா இருக்கானே."

"ஆனா, இவரு ஒருத்தர்தாங்க தன்மையா நடந்துக்கறாரு. இவராண்ட தட்டு கொடுக்கறதுக்கே ஜனங்க ஆசைப் படறாங்க. சின்னப் பிள்ளையா இருந்தாலும் பொறுப்பா நடந்துக்கறாரு."

"தம்பி வெறுமனே அஷ்டோத்திரம் சொல்றீங்களா. அஷ்டோத்தரம் சொல்லி முத்திரைகளும் காண்பிக்கிறீங்களா."

ராமசுப்ரமணியம் வியந்து பார்த்தான்.

"என்னாடா கதிரவன் இப்படி கேட்கறானேன்னு பார்க்கறீங்களா. எப்போ இந்த வேலைக்கு வந்துட்டேனோ அப்போ நான் சில விஷயங்கள் கத்துகிட்டேன். சொல்லுங்க என்னென்ன முத்திரை தெரியும் உங்களுக்கு. எவ்ளோ முத்திரை காண்பிக்கிறீங்க."

ராமசுப்ரமணியம் அந்தக் விஷயத்தை விளக்கினான்.

"நல்லாயிருக்கு. புள்ளைக்கு வேலை தெரிஞ்சுருக்கு."

"அபிஷேகம் எது எது முதல்ல ஆரம்பிக்கறீங்க. அடுத்தது என்ன அப்படின்னு அந்த வரிசைய சொல்லுங்க."

"நல்லெண்ணெய், வாசனைப்பொடி, இளநீர், தேன், பழச்சாறு, பால்" அவன் சொல்லிவர இடையில் கதிரவன் தடுத்து நிறுத்தினான்.

"போதும் சரியா இருக்கு. அம்மனுக்கு அலங்காரம் பண்ணியிருக்கறது யாரு."

"நான்தான்."

"பாதத்துக்கு வெள்ளிக்கவசம் போட்டிருக்கீங்க. கண்ணுக்கு மஞ்சளும், சந்தனமும் கலந்து இரண்டு ஓரமும் விட்டு நடுவுல ரவுண்ட் பண்ணி வைங்க. அது அழகா இருக்கும்."

"சரிங்க."

"அம்மனுடைய பின்பக்கம் நெருப்பு மாதிரி இருக்குது இல்ல. அந்த இடத்துல மஞ்சள் தடவி வைங்க. நல்லாயிருக்கும்."

"சரிங்க."

"வெறும் மாலையா போட்டு முகத்தை மறைச்சுடாதீங்க. வந்த மாலையை போடுங்க. மத்தவனுக்கு மாலையை

கொண்டுபோய் கொடுத்திருங்க."

"சரிங்க."

"கருவறையை கழுவறது யாரு. என்னாம்மா.. என்னா கழுவியிருக்கீங்க. வாங்க இங்க.. அந்த மூலையில இளநீர் எல்லாம் அப்படியே இருக்குதே என்னிக்கு போட்ட இளநீர்."

"முந்தாநேத்து இளநீர் ஸார்."

"முந்தாநேத்து இளநீர் அங்க இருந்ததுன்னா. ஒரு வீச்ச வராது. எடுக்க முடியாதா உங்களால. அது ஏன் பாத்திரம் கழுவாத இருக்கு. குத்து விளக்குல வந்து பாசி பிடிச்சுருக்கே யார் கழுவறது. இல்லை, கோயில் சரியில்லை." அடுத்த ஒரு மணி நேரத்தில் அங்குள்ள அத்தனை பேரையும் விரட்டினான்.

"இப்போ.. இப்போ தேய். வியாழக்கிழமைதான் விளக்கு தேய்ப்பியா. மத்தநேரம் தேய்க்க மாட்டியா. இவ்ளோ அழுக்கு வச்சுகிட்டு வியாழக்கிழமை தேய்க்கறேன்னு சொல்றியே. செவ்வாய்கிழமை தேய்ச்சா என்ன குறைஞ்சா போயிடும். எடு.. எடு.. விளக்கு எடு. ஒரு விளக்கு அங்க இருந்தாபோதும். மத்த எல்லா விளக்கையும் எடுத்துகிட்டு போ. இப்போ தேய்க்கணும். இன்னும் ஒன் அவர்ல தேய்ச்சு எனக்கு காண்பிக்கணும். தினம் தேய்க்கணும்னு சொல்லிடுவேன். மளிகை கவனிக்கறது யாரு.. நாராயணசாமி நீங்கதானா. நீங்க ஐயர்தானே. வாசல்ல கோலம்போட மாட்டீங்களா. தளிகை ரூம்ல சாமிபடம் இருக்காதா. ஆயிரம்கண்ணி படம்மாட்டி அந்த இடத்துக்கு பூபோட்டு முதல்முதல்ல கற்பூரத்தை அங்க ஏத்தி அந்த கற்பூரத்தைத்தான் அடுப்புல போடணும். அவளால அடுப்பு எரியுதுன்னு நினைப்பு வரணும். நெருப்பு குச்சி கிழிச்சு கெரசின் ஊத்தி அடுப்பு பத்தவைக்காதீங்க. அது அசிங்கம். படமே இல்லை. இருளோன்னு கிடக்கு புகை அடைஞ்சு. ஏன் புகைபோக்கி இல்லையா. இருக்கே. உள்ள அத்தனை கருப்பா இருக்கு. யாருப்பா வேலைக்காரன். வரச்சொல்லு அவனை. க்ளாஸ் ஃபோர் எங்க, இன்னும் அரைமணிநேரத்துல இந்த இடத்தை சுத்தம்பண்ணலைன்னா உனக்கு வேலை போயிடும்."

அவன் கன்னியப்பனை விரட்ட கன்னியப்பன் உளறினான். கதிரவன் பதில் சொல்லாது கோவிலின் எல்லா இடத்திற்கும் வந்தான். உற்சவரின் நகைகளை எண்ணிப் பார்த்தான். வெள்ளிக்கவசங்களை எடைபோட்டுப் பார்த்தான்.

"மோகனசுந்தரம் எல்லாம் சரியா இருக்கு. உங்க மேல ஒரு கம்ப்ளெயிண்ட் இருக்கே. நாலாயிரம் ரூபா புடவைய இருநூறு ரூபாய்க்கு எடுத்தீங்களாமே."

"இல்லீங்க. அப்படியெல்லாம் எடுக்கமாட்டேன். நல்ல

விலை கொடுத்துதான் எடுத்தேன்."

"எவ்ளோ விலை? கொண்டாங்க."

ரிஜிஸ்டரை சட்டென்று கதிரவன் வாங்கிக் கொண்டான். பிரித்தான். நாலாயிரம் ரூபாய் புடவையை எண்ணூறு ரூபாய்க்கு எடுத்தது சரியா, தவறா. மோகனசுந்தரம் குழறினார். எப்படியாவது அந்த ரிஜிஸ்டரை வாங்கிவிட வேண்டும் என்று பரபரத்தார். அவருக்கு வியர்த்தது. நாக்கு ஒட்டிக்கொண்டது.

ஆயிரம்கண்ணி.. ஆயிரம்கண்ணி.. உள்ளுக்குள்ளே அவள் பெயரை சொல்லத் துவங்கினான்.

என் தலைய உருட்டிடாத தாயே. ஒரேயொரு பட்டுப் புடவை. அதைத்தவிர நான் வேறெதும் ஆசைப்படலை. அந்த ஆசையே தப்புன்னு எனக்குத் தெரியுது. தாயே நாலாயிரம் ரூபா புடவைய எண்ணூறு ரூபாய்க்கு வித்தது தப்பா. தப்புன்னு சொல்லப் போறாங்களா. இது எப்படின்னு கேட்கப் போறாங்களா. இதுக்கு தீர்ப்பு சொல்லப்போறாங்களா. ஐயரு குதிப்பானே. ஊர் முழுக்க பரப்புவானே.

பட்டுப்புடவை ஏலம் எடுத்ததாக கணக்கு. ஆயிரத்து எண்ணூறு என்று போட்டிருந்தது.

"ஆயிரத்து எண்ணூறு ரூபாய்க்கு வாங்கியிருக்கீங்க. நல்ல விலைதானே. பில் நாலாயிரம் ரூபான்னு போடுவோம். ஆயிரம் ரூபாய்க்கு டிஸ்கௌண்ட் கொடுப்போம். மூவாயிரம் ரூபாயில ஆயிரம் ரூபா போனா ரெண்டாயிரம் ரூபா புடவைய ஆயிரத்து எண்ணூறு ரூபாய்க்கு எடுத்துருக்கீங்க. ஒண்ணும் தப்பு இல்லையே."

என்னால் தணிக்கை செய்யப்பட்டது. பச்சை மையில் தெளிவாக எழுதினான். கையொப்பமிட்டான்.

"ஏதோ ஒரு நாய் நீங்க இருநூறு ரூபாய்க்கு எடுத்திருக்கீங்கன்னு ரிப்போர்ட் பண்ணியிருக்கான். அந்த ஐயருன்னுதான் நினைக்கறேன். பார்ப்போம். ஐயரை வரச்சொல்லுங்க. ஆள் அனுப்புங்க."

கன்னியப்பன் விஸ்வநாதனை அழைத்துவர ஓடினான். விஸ்வநாதன் இல்லை என்று திரும்பி வந்தான்.

தற்காலிக பணிநீக்கம் செய்யப்பட்டது. எழுதி கையொப்பமிட்டு விஸ்வநாதனையும், காளிதாசனையும் நேரடியாக வந்து சந்திக்கச் சொல்கின்ற இன்னொரு உத்தரவும் எழுதி கையெழுத்திட்டான்.

மோகனசுந்தரம் திகைத்துப்போய் கிடந்தார். கதிரவன் போனபிறகு ரிஜிஸ்டரை திறந்து பார்த்தார். ஆயிரத்து எண்ணூறு என்று அதில் எழுதியிருந்தது. எண்ணூறுதானே எழுதினோம். இந்த ஒண்ணு யார் போட்டது. தெரியலையே. திகைத்தார். பையிலிருந்து ஆயிரம் ரூபாய் எடுத்து கோவில்

கணக்கில் சேர்த்தார்.

இனிமே உன் சொத்துக்கு கொஞ்சம்கூட ஆசைப்பட மாட்டேன். இது சத்தியம்.

கோயில் கருவறையை எட்டிப்பார்த்து ஆயிரம் கண்ணியைப் பார்த்துச் சொன்னார்.

ஆயிரங்கண்ணி மறுபடியும் சிரித்தாள்.

"மோகனசுந்தரம் நான் கோயிலுக்கு வந்தபோது கோவிலுக்குள்ள ஒரு ஐயரு தேங்காய் உடைச்சு கிட்டிருந்தாரு. அவர் யாரு."

"அவர் பப்ளிக் ஸார்."

"ஏன் உள்ள விட்ருக்கீங்க."

"ராமசுப்ரமணியம் மட்டும் தனியா இருக்காரு. தேங்காய் உடைச்சு, பூ, பழம் பிரிக்கறதுக்கு சரியா தோதா ஆள் கிடைக்கலை. அவரு செய்யறாரு."

"சரி. இப்போதைக்கு செய்யட்டும். எவ்ளோ சீக்கிரம் முடியுமோ, அவ்ளோ சீக்கிரம் நான் வெளியூர்லேர்ந்து ஒரு ஆளை அனுப்பறேன்."

"சரிங்க ஸார்."

"கும்பாபிஷேகமா.. சபாஷ் கரெக்டா பன்னிரெண்டாவது வருஷம் கும்பாபிஷேகம் நடக்கனும்னா அந்தக் கோவில் வலுவா இருக்குன்னு அர்த்தம். ஒரு போர்டு எழுதி நன்கொடை கொடுங்கன்னு கேளுங்க ஸார். பிட் நோட்டீஸ் கொடுங்க. அந்த பிட் நோட்டீஸ் அடிக்கற செலவை நான் ஏத்துக்கறேன்."

சீனுவாசன் சந்தோஷமாகச் சொன்னார்.

"அதுமட்டுமில்லை ஸார். வாராஹின்னு ஒரு மந்திரம் இருக்கு. பன்றி முகமுள்ள அம்பாள். அவளுடைய மந்திரத்தை ஜபம் பண்ணா காசு கொட்டோகொட்டுனு கொட்டும். நான் அந்த ஜபத்தை இப்பவே ஆரம்பிச்சுடறேன். திருப்பதியில காசு வரத்துக்கு காரணம் என்ன. வராகர். அந்த வராகர் இடத்துல நிறைய வராக மந்திரம் ஜபிச்சிருக்காங்க. கொஞ்சம்கூட தங்கு தடையில்லாத, ரொம்ப அமோகமாக கும்பாபிஷேகம் நடக்கும்."

"ஸ்டே வாங்குவேன்னு விஸ்வநாதன் பயமுறுத்தி யிருக்காரு."

"செத்துடுவாரு. அடிபட்டு செத்துடுவாரு." சீனுவாசன் உறுமலாய் பதில் சொன்னார்.

"இப்போ கதிரவன்னு ஒருத்தர் வந்துட்டுப் போனாரே அவர் சொன்னா மாதிரி கோவிலை சுத்தமா வச்சுப்போம். வரவாளை பணிவா வேண்டுவோம், மரியாதையா நடத்துவோம். உங்க ஸ்டாஃப்புக்கு சொல்லிடுங்க. சத்தம் போடற ரெண்டு ஆளுங்களும் போயிட்டாங்க. இவங்களை இன்னும் பிரியமா

பேசச் சொல்லுங்க. கோயிலுக்கு நிச்சயமா ஆளுங்க வரும். கோவிலை பெருக்கி கழுவினா போறாது. அங்கங்க மூலையில தூபஸ்டிக் ஏத்தி வைங்க. எத்தனை பேரு தூபஸ்டிக்கும், ஊதுவத்தியும் வாங்கித்தரா. அதை சும்மா குப்பையில எறியறீங்களே. அங்கங்க கார்னர்ல ஊதுவத்தி ஸ்டாண்ட், தூபஸ்டாண்ட் வச்சுருங்க. கோவில் மணமா இருக்கணும்."

சீனுவாசய்யர் சொல்ல, அம்சவேணி கோவில் பெருக்கி மெழுகி தூபமும், ஊதுவத்தியும் ஏற்றி வைத்தாள். மெல்லிய புகை படர்ந்தது. வாசனை எங்கும் பரவிற்று.

"என்ன. எல்லாரும் பார்க்கத் வேணாவா. நீங்களே வந்து நடுவுல கைகூப்பி ராணிமாதிரி நின்னுட்டீங்கன்னா.. ஓரமா நில்லுங்க. நீங்க ராணிதான். ஓரமா நின்னா இன்னும் உயர்ந்த இடத்துக்கு போயிடுவீங்க."

கன்னியப்பன் மிருதுவாக ஒரு பெண்மணியை வேண்டிக்கொண்டான்.

"கிட்டபோய் பார்க்கணும். அவ்ளோதானே.. நாங்க ஏற்பாடு பண்றோம். ஒரு பத்து நிமிஷம் பொறுமையா இருங்க. மும்மூணு நிமிஷமா அனுப்பிடறேன்."

எல்லோரும் அருகில்போய் அம்மனை தரிசனம் செய்தார்கள்.

"வெள்ளிக்கலசமெல்லாம் டல் அடிக்குது ஸார். ஒரு மாதிரியா இருக்கு."

ராமசுப்ரமணியம் சொல்ல கவசங்களை வாங்கி மோகனசுந்தரம் பரப்பினார்.

மார்புக்கவசம், முழங்காலிலிருந்து பாதம் வரைக்கும் உண்டான கவசம், கைகவசம், நெற்றிக்கவசம் என்று பலதும் இருந்தன.

சத்யா தாண்டிப் போனான்.

ஆறாவது முறையாக காமாட்சியை நினைத்து சுற்றிக் கொண்டிருந்தான்.

காமாட்சி காணோம்.

அந்தக் கவசங்கள் பார்த்ததும் அவனுக்கு அருகேபோய் பார்க்கவேண்டும் என்று தோன்றியது. அருகேபோய் எட்டிப் பார்த்தான்.

மோகனசுந்தரம் வாங்க என்று கைகூப்பினார்.

"என்னாங்க இது."

"சாமி கவசம். பாலீஷ் பண்ண வச்சுருக்கோம்."

"பண்ணிட்டீங்களா."

"இனிமேதான் பண்ணணும்."

"நான் பண்ணித் தரட்டுங்களா."

தன்னைமீறி சத்யா கேட்டான்.

'இந்தக்கவசம் உனக்கு செய்து தருகிறேன். உன்னை பளபளப்பாக்குகிறேன். என் திருமணத்தையும் பிரகாசமாக நடத்திவை.'

உள்ளுக்குள் வேண்டினான்.

"தாராளமா எடுத்துட்டு போங்க."

"டக்குனு கொடுக்கறீங்களே. வெள்ளிதானே."

"வெள்ளிதான்."

"நான் எடுத்துகிட்டு எங்கேயாவது போயிட்டேன்னா."

"தாராளமா போகலாம். நானா இந்தக் கவசத்துக்குக் காவல். அவ, அவ சொத்தை காவல் காக்கறா. எனக்கு என்ன தெரியும்."

மோகனசுந்தரம் வாய்விட்டுச் சிரித்தார்.

சத்யாவுக்கு அந்தக்கவசத்தின் மீது ஒரு மரியாதை ஏற்பட்டது. ஒவ்வொரு கவசமாக எடுத்து கண்ணில் ஒற்றிக் கொண்டான். பிளாஸ்டிக் பையில் போட்டுக் கொண்டான். சுற்றிவரும்போது காமாட்சி எதிர்ப்பட்டாள்.

"இது என்னன்னு சொல்லு பார்க்கலாம்."

அவன் சிரித்தான்.

அவளும் சிரித்தாள்.

நகர்ந்து போகும்போது கவசங்கள் சளீரென்று சத்தமிட்டன. காமாட்சி திடுக்கிட்டு நின்றாள்.

"பார்த்தியா அம்மன் கவசம்."

"எதுக்கு." ஆவலோடு அந்தப்பையை காமாட்சி தொட்டுப் பார்த்தாள்.

"அம்மன் கவசத்தை பாலீஷ் பண்ண கொடுத்திருக்காங்க."

"அப்படியா. எங்க பாலீஷ் பண்ணப் போறீங்க."

"தெரியலை. போய் விசாரிக்கணும்."

"எனக்குத் தெரியுமே."

"என்ன தெரியும்."

"என் சொந்தக்காரர் ஒருத்தர் ரவின்னு இருக்கார். அவர் வெள்ளி பாலீஷ் பண்ற கடை வச்சருக்கார். வெள்ளிதான் முக்கிய வியாபாரம். பாலீஷும் பண்ணித் தருவார்."

"எங்க இருக்கு கடை."

"நான் சுவாமியை பார்த்துட்டு வந்துடட்டுமா."

"சரி" என்று அவன் தலையசைத்தான்.

காத்திருந்தான்.

அவள் அவசரமாகச் சுற்றினாள். பையைத் திறந்து கவசங்களைப் பார்த்தான்.

ரோட்டில் மோட்டர் சைக்கிளில் ஏற சற்றுத்தயங்கி பிறகு ஏறினாள். வழிகாட்டினாள்.

"ரவி.. இவர் சத்யா. எங்க தெருவுல இருக்கார். எங்க தெருவுல ஆயிரங்கண்ணின்னு ஒரு கோயில் இருக்கில்ல.

அந்தக் கோவில்ல இருக்கற கவசம்" என்று நீட்டி முழக்கிப் பேசினாள்.

சத்யா வியப்போடு அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"நெத்தியில ஒரு கல்லு போயிருக்கே. திலகத்துல ரெண்டு மூணு கல்லு போயிருக்கே."

ரவி எடுத்துப் பார்த்து பூதக்கண்ணாடியில் பரிசோதித்தார்.

"எல்லா ரிப்பேரும் பண்ணிடுங்க. என்ன வேணாலும் தரேன்."

"என்ன வேணாலும் கேட்பேனா. மாட்டேன். காமாட்சிகூட வந்திருக்கா. கவனமாதான் கேட்பேன். கோவில் காரியம். என் செலவுக்கு உண்டானதை கொடுத்தாப் போதும்."

"எவ்ளோ ஆகும். ரெண்டாயிரம் ரூபா ஆகுமா."

சத்யா வெகுளியாய் கேட்டான்.

"இருநூறு ரூபாதான் ஆகும். பாலீஷ்தானே."

சத்யா பர்ஸ் பிரித்து உடனே காசு எடுத்து வைத்தான்.

"எவ்ளோ நேரம் ஆகும்."

"எவ்ளோ நேரத்துல வேணும்."

"எவ்வளவு சீக்கிரம் கொடுப்பேளோ அவ்வளவு சீக்கிரம் எனக்கு நிம்மதி. வெள்ளி என்னை நம்பி கொடுத்திருக்காங்க. திருப்பி கொண்டுபோய் கொடுக்க வேண்டாமா."

"ஒன்றரை மணிநேரத்துல தரேன்."

"சரி."

சத்யாவும், காமாட்சியும் வெளியே வந்தார்கள்.

"இப்போ என்ன செய்யறது.

"இங்கேயே நின்னுண்டிருப்போமா.""

"இல்லை. எங்கேயாவது போய்வரலாம்."

"எனக்குப் பசிக்குது."

சத்யமூர்த்தி சொன்னான்.

"எனக்கும் பசிக்குது."

காமாட்சியும் வெளிப்படையாகப் பேசினாள்.

அவர்கள் வண்டியேறி ஒரு ஹோட்டலுக்குள் நுழைந்தார்கள். ஹோட்டலின் குளிர் அவர்களை அணைத்துக்கொண்டது.

அவர்கள் சந்தோஷமாக பேசத் துவங்கினார்கள்.

அந்த வெள்ளிமீது சோப்புநுரை படர்ந்தது. அழுக்குகளை எடுத்தது. கரைகள் அகற்றப்பட்டன. புதுக்கலவை பூசப்பட்டு ஊறவைக்கப்பட்டது. மறுபடியும் துணியாலும், தோலாலும் அழுத்தி துடைக்கப்பட்டது.

மோட்டரில் பொருத்திய வெல்வெட் துணி அதன்மீது படர்ந்து அதை மெருகேற்றியது.

அரைமணி நேரத்தில் அந்த வெள்ளியின் எல்லாப் பகுதிகளும் பளபளக்கத் துவங்கின.

சத்யா திகைத்தான்.

காமாட்சி வியந்தாள்.

"இருநூறு ரூபாதானா.. இல்லை மேல ஏதாவது ஆச்சா."

"இருநூறு ரூபாதான் ஆச்சு."

"பாருங்க அம்மா தன் வேலையை தானே நடத்திக்கறா. இதேமாதிரி மத்த எல்லா வேலையும் அழகாகவும் ஆகும். விரைவாகவும் ஆகும்."

சீனுவாசன் கவசங்களை கண்ணில் ஒற்றிக்கொண்டார்.

"இன்னும் என்ன வேலை ஆகணும்."

"கும்பாபிஷேகம் ஆகணுமே."

சத்யாவின் கேள்விக்கு மோகனசுந்தரம் பதில் சொன்னார்.

"அதுக்கு நிறைய செலவாகாது?"

"ஏகப்பட்டது செலவாகும்."

"எப்போ கும்பாபிஷேகம்."

"வேலை நடந்து முடிக்கறத பொறுத்து."

"நான் ஏதாவது காசு தரட்டுங்களா."

"காசு வேணாங்க. வேலை ஏத்துக்கோங்க."

"வேலைன்னா.."

"கோபுரத்துக்கு பெயிண்ட் அடிக்கலாம். பொம்மை சரி பண்ணலாம். மேல்தளம் ஓட்டு போடலாம். மழை ஜலம் உள்ள வருது. அது வராத சரி பண்ணலாம். கீழ் தரைய க்ளீன் பண்ணி கொடுக்கலாம். மேல ஓவர் டேங்க் கட்டிக்கொடுக்கலாம்."

"நான் வந்து.." என்று சத்யா ஆரம்பிக்க, "இருங்க. நாம எந்த வேலை செய்யலாம்னு கோயிலை சுத்திபார்த்துட்டு அதுக்குப்பிறகு சொல்வோம்."

காமாட்சி அவனை அமைதிப்படுத்தினாள். அவன் சரியென்று தலையசைத்தான்.

"நீங்க எவ்ளோ தரப்போறீங்க."

"பத்தாயிரம் ரூபாய் தரலாம்னு இருக்கேன்."

"பத்தாயிரம் ரூபாய்க்கு எந்த வேலை செய்யமுடியும்."

"பெயிண்ட்டுதான் வாங்கித்தர முடியும்."

"நீங்க பத்தாயிரம் கொடுங்க. நான் எங்கிட்டேயிருந்து ஒரு அஞ்சாயிரம் ரூபாய் தரேன். பதினஞ்சாயிரம் ரூபாய் போடலாம். பதினஞ்சாயிரம் ரூபாய்க்கு என்ன வேலையோ அதை செய்யலாம். கன்னியப்பன் இங்க வாங்களேன்."

கன்னியப்பன் ஆவலோடு திரும்பினான்.

"அட.. என் பேர் உங்களுக்கு எப்படித் தெரியும்."

காமாட்சியைக் கேட்டான்.

"மத்தவங்க கூப்பிட்டு பார்த்திருக்கேன். அதான்

கூப்பிட்டேன். உங்க பேர் கன்னியப்பன்தானே."

"அதான் திரும்பிட்டனே. என்ன வேணும் சொல்லுங்கம்மா."

"எந்த வேலை குறைச்சலான காசுல முடியும். அதை நாங்க பண்ணணும்னு நினைக்கறோம்."

"ஏன். இருக்கப்பட்டவங்க நீங்க. நல்லா செலவு பண்ணுங்களேன்."

"காசு இல்லை கன்னியப்பன்."

"தயவு செய்து அப்படி சொல்லாதீங்க. அம்மா சன்னதியில நின்னு காசு இல்லைன்னு சொல்லலாமா. அம்மாவுக்குப் பண்ணுங்க. தானா காசு வரும்."

"கொஞ்சம் இரு காமாட்சி. எது முக்கியமான வேலை."

"இந்தத் தளத்துக்கு ஒட்டுபோடறது. நல்லா மழைபெய்ஞ்சா உள்ளுக்குள்ள ஊத்துது. இடமெல்லாம் ஈரமாப்போகுது. யாரும் உட்கார முடியலை. அங்கங்க வழுக்குது. எனக்குத் தெரிஞ்சு நாலஞ்சு பேர் பொத்பொத்துனு விழுந்துட்டாங்க. அதுவும் வயசானவங்க. ஏம்பா இப்படி வச்சுருக்கீங்க கோயிலன்னு கேட்கறாங்க. மழை பெய்ஞ்சு உள்ளுக்குள்ள தண்ணி ஊத்தினா நாங்க என்ன பண்ண முடியும். இவ்வளவு பெரிய மண்டபத்துக்கு ஒட்டு போடணும்னா நிறைய செலவாகாது."

"ஆகும். இருவது முப்பதாயிரம் ரூபா ஆகும்."

"ஐயோ."

காமாட்சி வாய் பிளந்தாள்.

"வாங்க. மேல ஏறி வாங்க பார்க்கலாம்."

அவன் ஒரு ஏணியை சார்த்தினான். அதன்மீது ஏறினான். பிறகு காமாட்சியை ஏறச்சொன்னான். பிறகு சத்யா ஏறினான்.

அவர்கள் மூவரும் ஒரு மேல் தளத்தில் நின்றார்கள். கோபுரத்தையும், விமானத்தையும் பார்த்து சத்யாவும், காமாட்சியும் கன்னத்தில் போட்டுக் கொண்டார்கள்.

"இது மொத்தமும் கொத்திட்டு ஜல்லி கொண்டு வந்து இடிச்சு, இந்த இடத்துல நிரவிட்டு, மேல சிமெண்ட் பால் போட்டு அழுத்திட்டு, அதுக்கும் மேல் மழை பெய்யாத இருக்கறதுக்கு கலவை இருக்கு அதை போட்டுடுவாங்க. பிசின் மாதிரி ஒட்டிக்கும். எதுவும் உள்ள அனுப்பாது. பத்துமூட்டை சிமெண்ட் செலவாகும். ரெண்டு லாரி லோடு ஜல்லி அடிச்சு மேல கொண்டுபோய் கொட்டணும். லேபர்தான் ஜாஸ்தி. நீங்க நினைச்சா முடியும்."

"எங்களுக்கு இந்த வேலையெல்லாம் தெரியாதுப்பா."

"வேலை தெரிஞ்சவர் ஒருத்தர் இருக்காரு. அவராண்ட கூட்டிகிட்டுபோய் விடறேன். சல்லீசா செய்து கொடுப்பார்."

"எங்க இருக்கார்."

"இருங்க."

அவன் பர்ஸ் பிரித்து ஒரு போன் நம்பர் கொடுத்தான்.

சத்யா அந்த போன் நம்பரை தன் டைரியில் எழுதிக் கொண்டான்.

டெலிபோனில் அந்த மனிதரை கூப்பிட்டான். கோபுரம் பார்த்தபடியே அவன் பேச மறுமுனையில் யாரோ போன் எடுத்தார்கள்.

"நான் ஆயிரங்கண்ணி கோயில்லேர்ந்து பேசறேன். நான் இந்த அம்மாவுடைய டிவோட்டி. கெமிக்கல் இன்ஜீனியரிங் படிச்சுருக்கேன். இந்தக் கம்பெனியில வேலை செய்யறேன். மண்டபத்துல கொத்திட்டு மழை உள்ள வராம இருக்கறதுக்கு செய்ய வேண்டிய வேலை ஒண்ணு இருக்கு. ஒரு ஆளை அனுப்பி எவ்வளவு ஆகும்னு சொன்னீங்கன்னா மேற்கொண்டு உங்களோட தொடர்பு கொள்றேன்."

"என்ன அளவு."

"அறுவது அடிக்கு நூறு அடி இருக்கும்."

"அப்ராக்ஸிமேட்டா ஒரு லட்சரூபாய் ஆகும்."

"ஐயோ, ஒரு லட்சமா. இது கோயில் காரியம் ஸார்."

"அப்படியா, லாபமில்லாம சொல்லணும்னா எழுவத்தஞ்சாயிரம் ரூபா ஆகும்."

"இன்னும் குறைக்க முடியாதா."

"என்னுடைய காசா அஞ்சாயிரம் போட்டா எழுவதாயிரம் ஆகும்."

"சரி ஸார். நான் வந்து நேரா பார்க்கறேன்."

"இன்னிக்கு சாயந்தரம் ஊருக்குப் போறேனே."

"அப்போ, இப்பவே வந்து பார்க்கறேன் ஸார்."

அவர்கள் இரண்டு பேரும் மோட்டர் சைக்கிளில் ஏறி அந்த மனிதரை நோக்கிப் போனார்கள்.

"இந்த நம்பர் யார் கொடுத்தா உங்களுக்கு.."

சுந்தரேசன் வரவேற்றார்.

"கோவில் பியூன் கொடுத்தான்."

"அடடே... கன்னியப்பனா. ரொம்ப சந்தோஷம். இவங்க யாரு உங்க வொய்ஃப்பா."

"இல்லை ஸார்."

"வுட்பியா."

"இல்லை ஸார்."

"ஓ.. லவ் பண்றேள்."

"இல்லை ஸார்."

"பிறகு."

"எதிர்வீட்டுப்பக்கம் இருக்கறாங்க. என்னுடைய ஜாதகம்

அவங்க வீட்டுக்குப் போயிருக்கு. அவங்க ஜாதகம் என் வீட்டுக்கு வந்திருக்கு. எங்க வீட்ல இன்னும் என்னென்னு முடிவு பண்ணலை. ஆனா, நாங்க ஒருத்தரையொருத்தர் பார்த்துண்டோம். பேசறோம். என்னமோ டக்குனு எடுத்தவுடனே சுவாமி காரியத்துல ஈடுபடறோம். என்னன்னு தெரியலை ஸார். எங்களுக்கே நாங்க பேசிப்பழக்றது வினோதமா இருக்கு. நான் வெறும் பத்தாயிரம் ரூபா கையில கொடுத்துட்டு போகலாம்னு பார்த்தேன். இவங்க ஏதாவது ஒரு நல்ல வேலை எடுத்து செய்யலாம்னு சொன்னாங்க. எது நல்ல வேலைன்னு பார்த்தா. கன்னியப்பன் கூட்டிண்டுபோய் இதுதான் நல்ல வேலை. இது முக்கியமான வேலை. இது பண்ணிக்கொடுங்க. எல்லாரும் வழுக்கி வழுக்கி விழறாங்க கஷ்டமா இருக்குன்னு சொன்னான்."

"எழுபதாயிரம் ரூபா ஆகும்."

"எங்கிட்ட இருக்கறதே பத்தாயிரம் ரூபாதான் ஸார். நான் வேலைக்கு சேர்ந்து எட்டுமாசம்தான் ஆகறது."

"காசு வரும். நிறைய வரும் ஸார் உங்களுக்கு."

"இவங்க அஞ்சாயிரம் ரூபா போடறேன்னாங்க. கையில பதினஞ்சாயிரம் இருக்கு."

"பதினஞ்சாயிரத்தை கொண்டு வந்து எங்கிட்ட கொடுங்க. நான் வேலையை ஆரம்பிச்சுடறேன். இந்த வேலையை முன்னாடியே எங்கிட்ட சொன்னாங்க. கோவில்ல ஏதோ பாலிடிக்ஸ் என்னை கழட்டி விட்டுட்டாங்க. இன்னும்கூட சீப்பா முடிக்கலாம் ஸார். ஆனா, பதினஞ்சாயிரத்துக்கு முடியாது."

"மிச்ச காசுக்கு என்ன பண்றதுன்னு தெரியலையே."

"உங்க ஃப்ரண்ட்ஸ்கிட்ட கேளுங்க ஸார்."

சத்யாவிடம் சுந்தரேசன் கண்சிமிட்டியபடி சொன்னார்.

"ஆயிரங்கண்ணிக்காக அங்கங்க கை ஏந்துங்க. கொடுக்க முடியுமா. கொடுக்க முடியுமான்னு கேளுங்க. உங்களுக்கு காசு சேரும்."

"எனக்கும் மனசுல அப்படித்தான் தோணித்து. உறவுக்காரா, சொந்தக்காரா எல்லார்கிட்டேயும் காசு கொடு. காசு கொடுன்னு கேட்டு.."

"என்னன்னு போய் காசு கேட்கறது."

"என் கல்யாணத்துக்கு ஏதாவது காசு கொடுப்ப இல்லை. அதை இப்போ கொடு. நான் ஒரு கோவிலுக்கு பண்ணணும்னு சொல்லப்போறேன்."

"அடேயப்பா அவ்ளோ ஆர்வமா கோயில்ல."

"எனக்கென்னமோ இந்தக் கோயில் ரொம்ப பிடிச்சுருக்கு ஸார்."

"ஏன்."

"இவரை இந்த கோயில் அறிமுகப்படுத்தி வச்சது ஸார்."

"அப்போ இவரை லவ் பண்றீங்களா."

"இல்லை ஸார். நான் அவரை லவ் பண்ணலை. ஆனா, அவரை பிடிச்சுருக்கு. இவர் புருஷனா வந்தா எனக்கு சந்தோஷம்."

"ஸார். எனக்கு காமாட்சிதான் பொண்டாட்டியா வரணும்னு ஒரு வேண்டுதல். ஒரு பேராசை இருக்கு. என் வேண்டுதலுக்கு காசு கொடுத்து அதை நிறைவேத்தி வைக்கறது ஆயிரங்கண்ணியினுடைய இஷ்டம். காமாட்சி இல்லைன்னா வருத்தம்தான். ஆனால், விழுங்கிப்பேன். காமாட்சி கிடைச்சா ரொம்ப நிறைவாயிடுவேன்."

"எத்தனை நாள் பழக்கம்."

"ஒரு வாரமா பார்க்கறோம். இன்னிக்குதான் நிறைய பேசறோம்."

"வெரிகுட். நீங்க பார்க்கறதுக்கே நன்னா இருக்கேள். சரியான ஜோடியா தெரியறது. காட் ப்ளஸ் யூ. அட்வான்ஸ் கொடுத்துட்டுப்போங்க. வேலைய ஆரம்பிச்சுடறேன்."

அன்று இரவு பதினைந்தாயிரம் ரூபாயை அவர் வீடு தேடி கொண்டுபோய் சத்யா கொடுத்தான். மறுநாள் காலை ஏழரை மணிக்கு சுத்தியலால் மேல்தளம் மெல்ல மெல்ல கொத்தப்பட்டது. ஒரு லாரி லோடு ஜல்லி தூள் பறக்க, கோயில் வாசலில் வந்து இறங்கியது. பிற்பகல் சிமெண்ட் கொண்டுவந்து அடுக்கினார்கள்.

மோகனசுந்தரம் வியந்தார்.

"கும்பாபிஷேக வேலை ஆரம்பிச்சுடுச்சு போலிருக்கே. நம்மைவிட வேகமா கோயில் பக்தர்கள் இருக்காங்க பார்த்தீங்களா."

சீனுவாசனிடம் சொன்னார்.

"நீங்களா பண்ணப்போறீங்க. அவங்கதான் செய்யப் போறாங்க. அவங்கதான் ஆர்வமா இருக்காங்க. இன்னிக்கு சாயந்தரம் பிட் நோட்டீஸ் வந்துடும். நானே வீடுவீடா கொண்டு போய் கொடுக்கப்போறேன்."

"செய்யுங்க. நீங்க வந்து உட்கார்ந்து மந்திரம் சொன்ன நாள்லேர்ந்து எல்லாம் நல்லாதான் இருக்கு."

"விஸ்வநாத சிவாச்சாரியார் வரலையே."

"வரலையாம்."

"ஏன். இன்னுமா இந்த ஆட்டம்."

"இல்லை ஸ்ார். கால்ல அடிபட்டு கட்டு போட்டிருக்கார். ஜுரம் இருக்காம்."

"என்ன கால்ல அடி."

"சர்க்கரை நோய் ஸார். ஏதோ ஸ்கூட்டர்ல விரலை கொடுத்திருக்கார். கட்டை விரல்ல ரத்தக்காயம் ஏற்பட்டு போச்சு. சரியா கவனிக்காத இங்கயும், அங்கயும் நடந்திருக்கார். இப்போ அது பெருசாயிடுச்சு. ஊசி போட்டு படுக்க வச்சுருக்காங்க. ஜுரம் வருது."

"ஐயோ, சர்க்கரைன்னு சொல்றீங்க. கால்ல அடிபட்டிருக்குன்னு சொல்றீங்க. ஜாக்கிரதையா பார்த்துக்கணுமே."

"தெரியலை ஸார். காலையில காபி கொடுக்கறதுக்கு நேரம் ஆயிடுச்சுன்னு ஸ்டூலை எட்டி உதைச்சாராம். மருமக வந்து அழுவுது."

"அட மடையா. வீட்டுக்கு வந்த பொண்ணை கடுமையா பேசினா நாக்கு இழுத்துக்கும். பெத்த பொண்ணகூட திட்டலாம். மருமகளை திட்டலாமா. மடையன்.. மடையன்."

சீனுவாசன் தலையில் அடித்துக்கொண்டார்.

'என் வீட்டிற்கு அருகே ஆயிரம்கண்ணி என்ற ஒரு கோவில் இருக்கிறது. மிக சக்தி வாய்ந்த அம்மனாக அதைச்சொல்கிறார்கள். மிக வரப்பிரசாதி உடனுக்குடன் பலன் தருபவள் என்றும் பலர் சொல்லி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அந்த ஆயிரங்கண்ணிக்கு கும்பாபிஷேகம் நடைபெற உள்ளது. அதற்கு முன்னே கட்டிடங்களை பழுது பார்க்க வேண்டியிருப்பதால் அதன் ஒரு பகுதியை நான் எடுத்துக் கொண்டிருப்பதால் உங்களால் முடிந்த அளவு தொகையை நன்கொடையாக கொடுக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.' சத்யமூர்த்தி கடிதம் எழுதினான்.

ஒரே நாளில் ஆயிரத்து நானூறு ரூபாய் வந்தது. காமாட்சி இருநூற்றி நாற்பது ரூபாய் கொண்டு வந்து கொடுத்தாள். மூன்று நாளில் இரண்டாயிரம் தருவதாகச் சொன்னாள்.

அவர்கள் தினந்தோறும் சந்தித்துக்கொண்டார்கள். ஏணியில் ஏறி வேலை நடப்பதை வேடிக்கை பார்த்தார்கள்.

"வெதர் புரூஃப் பாண்ட் அப்படின்னு ஒண்ணு இருக்கு ஸார். நீங்க கெமிக்கல் இன்ஜீனியர்தானே. உங்களுக்கு தெரிஞ்ச கெமிக்கல் கம்பெனியில இதை ஏதாவது பண்றானா பாருங்களேன்."

சுந்தரேசன் கேட்டுக் கொண்டார்.

அவர்கள் மேற்பார்வையிட்டு கீழிறங்கினார்கள்.

"என்னாங்க மேல என்ன பண்றீங்க."

மோட்டார் சைக்கிளில் ஊர் சுற்றி நிலம் வாங்கியவன் ஆவலோடு கேட்டான்.

"கும்பாபிஷேகம். அதுக்கு ரிப்பேர் வேலையெல்லாம் ஆரம்பிச்சுட்டாங்க."

சுந்தரேசன் பதில் சொன்னார்.

"அப்படியா."

"மேல முழுசா கொத்தி ஜல்லி போட்டு சிமெண்ட்டுப் பால் ஊத்தறோம்."

எல்லாம் தெரிந்தவன் போல சத்யா சொன்னான்.

"எங்கிட்ட ராமசுப்ரமணியம் ஒண்ணுமே சொல்லவே இல்லையே."

"இன்னிக்கு சாயந்தரம்தாங்க பிட் நோட்டீஸ் கொடுத்தாங்க."

"அப்படியா, எங்க."

"ஆபீஸ்ல இருக்கு பாருங்க."

அவன் அலுவலகத்திற்குப்போய் பிட் நோட்டீஸ் வாங்கினான். பிரித்துப் படித்தான்.

மோகனசுந்தரம் "நீங்க யாருங்க" என்று பிரியமாகக் கேட்டார்.

"நான் இங்க பக்கத்துல நிலம் வாங்கி கட்டிடம் கட்டியிருக்கேங்க. ஆத்தாக்கு ரொம்ப கடமைப்பட்டிருக்கேன்."

"அப்படிங்களா. ரொம்ப சந்தோஷம். கும்பாபிஷேகத்துக்கு ஏதாவது செய்யக்கூடாதா."

"செய்யறேங்க. என்னால முடிஞ்ச சிறுதொகை தரேன்."

"அதைவிட வேலை எடுத்துக்கோங்க. எங்க கையில காசு தரதவிட வேலை செய்து முடிச்சிட்டீங்கன்னா அது சந்தோஷம்."

"என்னா வேலைங்க செய்யணும்."

"கோபுரத்துல பொம்மைங்கள சரிபண்ணி பெயிண்ட் அடிக்கணும். விமானத்துக்கு பெயிண்ட் அடிக்கணும். உள்ளுக்குள்ள பெயிண்ட் அடிக்கணும்."

"எவ்ளோங்க ஆகும்."

"ஒரு லட்சரூபா ஆகுங்க."

"நான் எடுத்துக்கறேங்க. யார் பெயிண்டர் தெரியுங்களா."

"பெயிண்டர் தெரியாது."

"அவரு காண்ட்ராக்டர் பாலம் கட்டறவரு. அவர்தான் மேல ரிப்பேர் பண்ணி கொடுக்கறாரு. இவங்க காசு கொடுக்கறாங்க."

அவர் வருகிறவரை சுட்டிக்காட்டினார்.

அவன் சுந்தரேசனையும், சத்யாவையும், காமாட்சியையும் பார்த்தான். மடமடவென்று அருகேபோய் நின்று கொண்டான்.

"வ்ணக்கங்க. உங்களுக்கு பெயிண்ட் காண்ட்ராக்டர் யாராவது தெரியுமா."

"என்ன பெயிண்டிங் காண்ட்ராக்டர்."

"பொம்மைங்களுக்கு பெயிண்ட் பண்றவங்க."

"அப்படி சொல்லுங்க. அதுக்கு ஸ்தபதிங்க மாதிரி

ஆளுங்களைத்தான் கேட்கணும். நான் பாலம் கட்ட்றவன். ஆனாலும், ஒரு சில ஆளுங்க தெரியும். இருங்க போன் நம்பர் தரேன்."

அவர் யார் யாரிடமோ தொடர்பு கொண்டு அந்த மோட்டர் சைக்கிள்காரனுக்கு போன் நம்பர் கொடுத்தார்.

"என்ன பண்ணப்போறீங்க."

"கோபுரம், விமானம், உள்வேலை எல்லாமும் நானே பண்ணலாம்னு நினைச்சுகிட்டிருக்கேன்."

அவன் பணிவாக பதில் சொன்னான்.

சுந்தரேசனுக்கு வியப்பாக இருந்தது.

எல்லோரும் இந்தக் கோயிலுக்கு உதவிசெய்ய தான் மட்டும் ஒன்றும் செய்யாதுபோல் தோன்றியது.

"சரி. உங்களுக்கு ஏதாவது காரியம் ஆகணும்னா எனக்கு போன் பண்ணுங்க."

தன்னுடைய விசிட்டிங்கார்டை மோட்டர் சைக்கிள் காரனிடம் கொடுத்தார். சத்யாவிடமும் ஒன்று வழங்கினார். இன்னொரு கார்டு எடுத்துக்கொண்டு போய் மோகன சுந்தரத்திடம் கொடுத்து வணக்கம் தெரிவித்தார்.

"என்னை ஞாபகம் இருக்கா."

"பார்த்திருக்கேங்க. பேர் தெரியலை."

"சுந்தரேசன்னு பேர். பாலம் கட்டற காண்ட்ராக்டர். சத்யா வந்தாரு. எப்படி ரிப்பேர் பண்றதுன்னு கேட்டாரு. கோயில் வேலைன்னு ஆர்வமா செய்யறேன். இல்லைன்னா இந்த மாதிரி வேலை நான் செய்யறதில்லை."

"வேற என்ன வேலை செய்யணும்."

"அங்கங்க தரை தப்பா இருக்குங்க. கொஞ்சம் மேடுபள்ளமா இருக்கு. சிலகல்லுங்க பேந்திருக்கு."

"ஆமாம். பார்த்தேன். சுத்தி புதுசு அடிச்சிடலாங்களா."

"அது உங்க விருப்பம். நான் என்ன கேட்கறது."

"சலவைக்கல்லா போடாத வழுக்காத தரையா போட்டுத்தரேன். ஆன்டி ஸ்கிட்ன்னுன்னு ஒரு கல்லு இருக்கு. அதைப்போட்டுத்தரேன்."

"செய்யுங்கய்யா. உங்க இஷ்டம்."

பக்கத்திலுள்ள கடையில் டேப் வாங்கச் சொல்ல, சத்யாவும் காமாட்சியும் அளந்து காட்ட, அவர் குறித்துக் கொண்டார்.

விஸ்வநாத சிவாச்சாரியாருக்கு உள்ளங்கால் குடைந்தது. தாங்க முடியாத வலி ஏற்பட்டது.

"கொஞ்சம் பிராந்தி சாப்பிடுங்கப்பா. வலி போயிடும்."

மகன் சொன்னான்.

அவர் முடியாது என்று சொன்னார்.

ஆனால், அவன் வாங்கி டம்ளரில் கொடுத்தவுடன்

சரக்கென்று ஒரு மிடறு குடித்தார்.

உடம்பில் சர்க்கரை அதிகமாகியது. வலி முழங்கால்வரை எகிறியது.

காளிதாசன் தான் நிம்மதியாக உட்கார்ந்து குடிப்பதற்கு தன் தந்தையின் வியாதியை பயன்படுத்திக் கொண்டான். தவறாக அவருக்கு ஊற்றி ஊற்றி கொடுத்தான். அவர்மீது மிகுந்த அக்கறை உள்ளவன்போல் நடித்தான்.

பிள்ளை பொய்யாக இருக்கிறான் என்று தகப்பனுக்குத் தெரியவில்லை. பிள்ளை ஏமாற்றுகிறான் என்று புரியவில்லை.

"அப்படியே உடம்பே நன்னாயில்லைன்னாகூட என்ன. காளிதாசன் இருக்கான். அவன் பார்த்துப்பான்" என்று கம்பீரமாக விஸ்வநாத சிவாச்சாரியார் ஒருக்களித்துப் படுத்துக்கொண்டார்.

"இதான் ஆயிரங்கண்ணியம்மன் கோயிலா."

ஒரு இளைஞன் உள்ளேவந்து சீனுவாசய்யரைக் கேட்டான். கையில் மஞ்சள் பை இருந்தது.

"ஆமாம். நீ யார் தம்பி."

வந்த ஆளுக்கு மத்திம வயது. குண்டாக குழந்தை முகமாக இருநதான்.

"என் பேர் வெங்கடேஷ். நான் ஸ்தபதி. பொம்மை பண்றவன். இந்தக் கோயிலுக்கு பொம்மை பண்ணணும்னு பிரகாஷ் அனுப்பினாரு. யாரை பார்க்கறது."

"கோயில் நிர்வாக அதிகாரிய பாருங்க."

"கோயில் நிர்வாக அதிகாரியையா. இந்தக் கோவிலுக்கு ஒரு லட்சரூபா கொடுத்து கோபுரத்தை ரிப்பேர் பண்றதுக்கு யாரோ பொறுப்பு எடுத்துகிட்டிருக்காங்களாம். பக்கத்தெருவுல மோட்டார் சைக்கிள் காண்ட்ராக்டர் அப்படின்னு சொன்னாரு."

"அவர் எங்க இருக்காருன்னு தெரியலையே. எதுவா இருந்தாலும் ஈ.வோ வந்துதான் ஓ.கே. சொல்லணும். காசுதான் அவர் தருவாரு."

"இல்லைங்க ரேட் பேசவேணாமா."

"வெங்கடேஷ்."

சீனுவாசன் பிரியமாகக் கூப்பிட வெங்கடேஷ் அருகே வந்து நின்றான். ஏனோ அவனுக்கு இந்தக்கிழவரைப் பிடித்திருந்தது.

"ஒரு பொம்மைக்கு எத்தனை ரூபா செலவு ஆகும். என்ன பேரம் பேசலாம்னு இங்க யாருக்கு தெரியும். நீ சொல்றதுதான் ரேட்."

"அப்படியொன்னும் நான் தப்பா சொல்லிட மாட்டேங்கய்யா."

"நீ தப்பா சொல்றயா, ரைட்டா சொல்றயான்னு யாருக்கும்

தெரியாது. பொம்மை நல்லா பண்ணுவியா அதான் முக்கியம்."

"மேல ஏறி பார்க்கலாங்களா."

"ஒரு அனுமதி கேட்டுண்டு மேல போ."

நிர்வாக அதிகாரி மோகனசுந்தரமும், கன்னியப்பனும் உடன் வர சீனுவாசனும், வெங்கடேஷும் ஏணி ஏறினார்கள். தளத்திற்கு வந்தார்கள். கோபுரத்திற்கு அருகே போய் பார்த்தார்கள்.

"இதைவிடவும் லட்சணமா பண்ணலாங்க. கீழ இருந்து பார்க்கும்போது பொம்மை தப்பா தெரியல்ல. கிட்டவந்து பார்க்கறபோதுதான் மூஞ்சிக்கும், உடம்புக்கும் பெரிய வித்தியாசம் தெரியுது. என்னுது அப்படி இருக்காதுங்க. எண்சாணும் சரியா இருக்கும்."

"அப்படின்னா."

மோகனசுந்தரம் வியப்பாகக் கேட்டார்.

"இதுலேர்ந்து இது ஒரு சாண். இதுலேர்ந்து இது ஒரு சாண். இதுலேர்ந்து இது ஒரு சாண்ணு ஒரு அளவு இருக்கு. அந்த அளவுதான் பொம்மையிலும் வரும். மூஞ்சி ஒன்றரை சாண். மார்பு ஒரு சாண். எப்படி பிரிச்சிருக்காங்க பாருங்க. தப்பா இருக்கு. நான் ரொம்பசொன்னா கர்வமாப்படும். இதைவிட நல்லா பண்ணித்தரேன். எல்லா பொம்மையும் எடுத்துட்டு வேற பொம்மை வச்சுத்தரேன்."

"எவ்வளவு ஆகும்."

"கோபுரத்துக்கு மட்டும் ஒரு லட்சரூபா கொடுத்துடுங்க."

"ஐயோடா. வெறும் பொம்மை பண்றதுக்கு ஒரு லட்ச ரூபாயா."

சீனுவாசன் வேகமாக பின்னடைந்தார்.

"ஒரு பக்கத்துக்கு பதினாறு பொம்மை இருக்குங்க. நாலு பக்கம் அறுவத்திநாலு பொம்மை. அது தவிர உச்சியில யாளி முகம். அதுவும் செய்தாகணும். பழசை எடுத்து பாலீஷ் பண்ணி கலசம் வச்சாகணும். மூணுநிலை கோபுரமும் பெயிண்ட் பண்ணியாகணும். மதில் சுவர் முழுக்க பூதவரியும், சிம்மமும் இருக்கு. அதையும் ரிப்பேர் பண்ணித்தரேன்."

"சீனுவாசய்யர்.. தம்பி சரியா வரமாட்டார்."

"ஏங்க அப்படி சொல்றீங்க. எனக்கு இந்த கோயில்ல வேலை செய்தாகணும். எவ்ளோ தருவீங்க சொல்லுங்க."

"முப்பதாயிரம் ரூபா தரேன். ஒரு பொம்மைக்கு நூறுரூபா. அறுவத்திநாலு பொம்மைக்கு ஆறாயிரத்து நானூறு ரூபா. கவசம், யாளி, பூதவரி, சிம்மம் மொத்தப் பெயிண்ட்."

"இது நியாயமா இருக்குங்களா."

"கூட சொல்லிட்டேனோன்னு பயமா இருக்கு."

"கொஞ்சம் கூடபோட்டு கொடுங்கய்யா."

"எவ்ளோ கூட போட்டு தரச்சொல்றீங்க."

"எதுனா கூட போட்டு கொடுங்க. நான் செய்து தரேன். எனக்கு இந்த கோயில் செய்தாகணும்." வெங்கடேசன் பிடிவாதமாய் பேசினான்.

"சரி. முப்பத்தஞ்சு ரூபா. பொம்மை பிடிக்கலைன்னாக்க மறுபடியும் எடுத்துப்போட்டு மறுபடி செய்யச் சொல்லுவோம்."

"செய்து தரேங்க. ஆனா, ஒரு பொம்மையைக்கூட நீங்க பிடிக்கலைன்னு சொல்ல முடியாது. பொம்மை பண்ணுன்னு சொல்றீங்க. இடிக்கிற பொம்மைய அடிச்சு எடுக்கணுமே அதுக்கு கூலி கொடுக்கணுமே. நீங்க எடுத்து கொடுத்துடறீங்களா."

"இந்தக் கதையே வேணாம். எடுக்கறது, வைக்கறது எல்லாம் நீயே."

நிர்வாக அதிகாரி உரக்கக்கத்த சீனுவாசன் வியப்போடு அந்த இளைஞனையே பார்த்துக் கொண்டிருந்தார்.

"சரிங்க முப்பதஞ்சு ரூபா. எல்லா வேலையும் பண்ணித் தரேன். எனக்கு ஏதாவது அட்வான்ஸ் கொடுக்க சொல்லுங்க."

"நான் ஃபோன் போட்டு பார்க்கறேன். கீழ வா."

"ஏம்பா.. எடுத்தவுடனே ஒரு லட்ச ரூபான்னியே. நான் ஆடிப்போயிட்டேன்ப்பா."

"மன்னிச்சுக்கோங்க பெரியவரே."

வெங்கடேஷ், சீனுவாசனை நோக்கி கைகூப்பினான்.

"ஒரு லட்சரூபான்னு சொன்னா யாரும் கொடுத்துடப் போறதில்லை. நான் ஒரு சந்தோஷத்துக்கு சொல்லுவேன்."

"விவரம் தெரியாதவன் அம்பதுக்கு ஏத்துகிட்டிருந்தா."

"வாங்கிக்குவேன். ஆனா, என் மனசு கேட்காது. மத்த இடத்தைவிட நல்ல பொம்மை பண்ணித் தருவேன். நீங்க கோயில்ல என்ன அதிகாரி."

"ஒரு அதிகாரியும் இல்லையா. சும்மா சுத்தி சுத்தி வரேன்யா. அவ்ளோதான்."

"ரொம்ப சந்தோஷம். உங்களை மாதிரி ஆளுங்க தயவுதான் எனக்கு தேவை. இப்போ இருக்கற பொம்மையை போட்டோ எடுத்துக்கோங்கோ. நான் பொம்மை பண்ணி வைக்கறேன். அந்த பொம்மையையும் போட்டோ எடுங்க. அப்போ நான் ஒண்ணு கேட்பேன்."

"என்ன கேட்ப."

"இந்த பொம்மைக்கு விலை நூறு ரூபாதானா. நீங்க நாக்குல பல்லை போட்டு ஆமான்னு சொல்லிடுவீங்களான்னு பார்க்கறேன். ஐயா.. காசு கடவுள் தருவாரு. எனக்கு ரொம்ப நம்பிக்கை இருக்கு." அந்த இளைஞனின் திமிரும், சிரிப்பும், உற்சாகமும் சீனுவாசனுக்குப் பிடித்திருந்தன.

"தம்பி. இது காவல் தெய்வமான கோவில்தான். அதனால இங்க பொம்மைங்க உக்கிரமான தெய்வமா இருக்கணும்னு அவசியமா. இவ ரொம்ப அன்பா தன்மையா இருக்காடா. ஒரு ஸ்டேஜ் உக்கிரம் வச்சுக்கோ. ரெண்டாம் நிலை ரிஷிரூபராக சிவன். ஆனந்த சயனமாக விஷ்ணு. தாமரை மலர்மேல பிரம்மான்னு பளிச்சுனு பொம்மை பண்ணு. அதுக்கும் மேல இவளை வச்சுடு."

"வச்சிடலாங்க. ஒண்ணுமே தெரியாதவங்களுக்கு நடுவுல வேலை செய்யப்போறமோன்னு பயந்தேன். உங்களை மாதிரி இருக்கறவங்க கிடைச்சுருக்கீங்க. விடமாட்டேனே. ஐயாவுக்கு வீடு எங்க."

"இதே தெரு."

"இங்க பக்கத்துல எதுனா தங்கறதுக்கு வீடு கிடைக்குமா."

"ஏன்."

"கோயில்லயே தங்க முடியாது இல்லீங்களா."

"எத்தனை நாள் தங்குவ."

"ஒரு இருவது நாள்."

"ஒரு மாசமா எடுத்துடட்டுமா."

"வாடகைக்கா."

"வேற என்ன பண்றது."

"யார் இந்த காசு கொடுப்பா. கோவில் கொடுக்குமா."

"இல்லை. நான் கொடுக்கலாம்னு நினைச்சுகிட்டிருக்கேன். சாப்பாடு என் வீட்ல போடறேன்."

"ஏங்க.. ஏங்க நீங்க கஷ்டப்படறீங்க."

அவன் பதட்டமானான்.

"இல்லை வெங்கடேசா. கும்பாபிஷேகம் நடக்கப் போகுது. நானும் எதுனா பண்ணணும் இல்ல. எனக்கு முடிஞ்சது ஆயிரம், ரெண்டாயிரம்தான்."

"அட்வான்ஸ் கொஞ்சம் நல்லா வாங்கிக் கொடுங்கய்யா. வீட்டுக்கு காசு அனுப்பினா கொஞ்சம் நிம்மதியா இருப்பேன். எங்க அப்பா வயசானவரு இருக்காரு. அவரும் ஸ்தபதிதான். உட்கார்ந்து பேப்பர், கதைபுஸ்தகம் படிச்சுகிட்டிருப்பாரு. வீட்டுக்கு கொஞ்சம் காசு, அவருக்கு கொஞ்சம் காசு அனுப்பணும்."

"அந்த மோட்டர் சைக்கிள்காரன் வரட்டும் பேசலாம்."

"இந்தாங்க பத்தாயிரம் ரூபா அட்வான்ஸ். துட்டு பத்தி கவலைப்படாதீங்க. எனக்கு வேலை ஆரம்பிச்சுடணும். நாளைக்கு காலையிலயே ஆரம்பிச்சுடணும்."

மோட்டர் சைக்கிள்காரன் உரத்த குரலில் பேச, வெங்கடேஷ் அவன் எதிரே கைகட்டி நின்றான்.

அவன் பணிவில் மெல்லிய நடிப்பு இருப்பதை சீனுவாசன்

கண்டுவிட்டுச் சிரித்தார்.

"பாருங்க. என்ன பண்றது. ஸ்தபதி வேலை செய்யறவன் முறைப்பா இருந்தாக்க அவங்களுக்கெல்லாம் பிடிக்காது. அவங்க தானதருமம் பண்றாங்க. நாம அவங்ககிட்ட வாங்கி சம்பாதிக்கறோம். குழாய் ரிப்பேர் பண்றவனைவிட, நாற்காலி பண்றவனைவிட ஸ்தபதி தாழ்ந்துதான் இருக்கணும். இவ்ளோ எகிறி பேசறாரு இல்ல. வேலை முடியட்டும். அப்போ எப்படி கொஞ்சறாருன்னு பாருங்க."

"திரும்பத்திரும்ப பெரிய கித்தாப்பா பேசறியே தவிர."

"நீங்களும் அப்படித்தான் நினைச்சுகிட்டு இருக்கீங்க வெங்கடேஷ். கருப்பா, தடிமனா இருக்கறான். நாட்டுப்புறத்துல ஏர் ஓட்டறவன்னு நினைச்சுகிட்டிருக்கீங்க. வாங்க வேலை செய்து காண்பிக்கறேன். அப்போ தெரியும்."

வெங்கடேஷ் விடைபெற்றுக் கொண்டு போனான்.

"சிவன் கோயில் பிரகாஷ் போன் பண்ணி சொன்னாரு. ரொம்ப நல்ல பையன். ரொம்ப நல்லா வேலை செய்வான். தட்டி கொடுத்து வேலை வாங்குங்கன்னாரு. சீனுவாசன் நீங்கதான் இதை பார்த்துக்கணும்."

நிர்வாகஅதிகாரி மோகனசுந்தரம் சொல்ல, சீனுவாசன் அந்தப் பொறுப்பை தான் ஏற்பதாகச் சொன்னார்.

"அவர் உள்ளுக்குள்ள தேங்காய் உடைப்பாரா. மேல ஏறிப்போய் பொம்மை பார்ப்பாரா எனக்கு ஒண்ணும் புரியலை."

கன்னியப்பன் வாய்விட்டுச்சொல்ல, அங்குள்ள எல்லோருமே சீனுவாசனின் பொறுப்பு அதிகமாவதை உணர்ந்தார்கள்.

"ஏட்டுப்பொருத்தம் நன்னாயிருக்கு. முக்கியமான பொருத்தங்களெல்லாம் இருக்கு. தாராளமா கல்யாணம் பண்ணலாம்."

காமாட்சியின் அப்பாவுக்கு ஜோசியர் சொல்ல அவர் சந்தோஷமானார்.

"இன்னொரு ஜோசியர்கிட்டேயும் கேட்டுடலாமா."

"ஏண்டா.. இவர்தான் சரின்னுட்டாரே."

"பொருத்தம் மட்டும் பார்த்தா போறாதுப்பா. இந்தப் பையன் நல்லவனான்னும் பார்க்கணுமில்லை."

காமாட்சியின் அண்ணன் சொல்ல, அப்பா அதையும் இவர்கிட்டயே கேட்டுடலாமே.

"இல்லை. இவர் தடுமாறுகிறார். இவருக்கு வேலை தெரியலை. வைத்தியன் வயசாளியா இருக்கணும். ஜோசியன் பாலகனா இருக்கணும். இளமையான ஆள் ஜோசியம் சொன்னாதான் நல்லது. ரொம்ப வயசான ஆள்கிட்ட ஜோசியம்

இருந்தா. அவங்க கணக்குபோட்டு முடிக்கறதுக்குள்ளேயும் அசந்து போயிடறாங்க."

"எனக்கொரு ஃப்ரெண்ட் இருக்கார். அவர் பார்க்கறேன்னு சொன்னாரு, போகலாமா."

"ஆபீஸ்ல ஓர்க் பண்றாரா."

"இல்லை. ரியல் எஸ்டேட் பிஸினஸ். இம்போர்ட் அண்ட் எக்ஸ்போர்ட்ஸ். துணி ஏற்றுமதி பண்றார்."

"அந்த மாதிரி ஆளுங்களுக்கெல்லாம் என்னடா தெரியும் ஜோசியம் பத்தி."

"இதெல்லாம் சும்மா பேச்சு. வந்து பார். புட்டு புட்டு வச்சுடுவாங்க."

"பேரென்ன."

"என் ஃப்ரெண்ட் பேர் தாமோதரன்."

"உன் ஜாதகத்தையும் எடுத்துண்டு போலாமா."

"நான் என் ஜாதகத்தை பார்த்துட்டு வாயடைச்சு வந்திருக்கேன். அதனாலதான் இந்த ஜாதகத்தையும் சரியா பார்த்துடலாம்னு பார்க்கறேன்."

"உன் ஜாதகம் பார்த்துட்டு என்ன சொன்னார்."

"உனக்கும் உங்க அப்பாவுக்கும் ஆகாதுன்னார்."

"டேய்.. விளையாடாத. நான் என்னடா பண்ண உன்னை."

"இல்லையே. நாம ரெண்டுபேரும் என்னிக்கு ஒத்துமையா இருந்திருக்கோம். அம்மாவைப்பத்தி, என் பொண்டாட்டியப் பத்தி, என் உத்தியோகம்பத்தி, நான் உத்தியோகம் மாறினதைப்பத்தி, நான் ஃப்ரெண்ட்ஸை நம்பி ஏமாந்து போறதப்பத்தி எல்லாம் சொன்னார். நான் என்ன வியாபாரம் பண்ணுவேன்னு அவர் சொன்னார்."

"என்ன சொன்னார்."

"பாத்ரூம் சமாச்சாரமாத்தான் பண்ணுவேன்னு சொன்னார்."

"அட... எப்படிடா."

"தெரியலையே. ப்ளீச்சிங் பவுடர். ஃபினாயில் விக்கறேன்னு அவருக்கு எப்படி தெரிஞ்சது. ஆச்சரியமா இருக்கு."

"உன் மேலயிருந்து வாசனை வந்திருக்கும்."

"சும்மாயிருப்பா. திருப்பி திருப்பி முட்டாள்தனமா பேசாத."

அவன் வண்டியை ஓட்டிக்கொண்டே திருவல்லிக்கேணி பெல்ஸ்ரோடில் திரும்பினான். வண்டியை நிற்கவைத்து ஒரு கட்டிடத்தின் வாசலுக்குள் ஏறினான்.

வடஇந்திய பனியாக்களின் முகம்போல அந்த இளைஞனின் முகம் இருந்தது. கண்கள் ஒரு கணம் பார்த்துவிட்டு மறுகணம் உள்ளுக்குள் போய் யோசிக்கத்

துவங்கின. மீண்டும் கண்கள் கூர்மையாகி எதிரே இருந்த மனிதரை பார்க்கத் துவங்கின. மறுபடியும் பின்வாங்கின. அந்த இளைஞனின் பார்வை தொட்டுவிட்டு தொட்டுவிட்டு பின்னடைவதை காமாட்சியின் அப்பா ஆச்சரியத்தோடு பார்த்தார்.

"என்ன கல்யாண விஷயமா வந்திருக்கீங்களா."

நிதானமாக கேட்க காமாட்சியின் அப்பா திகைத்துப் போனார்.

"ஆமாம்."

"அந்த இடம் முடிச்சுடுங்க."

"நீங்க இன்னும் ஜாதகமே பார்க்கலையே."

"என்னாத்துக்கு பார்க்கறது. உங்க முகம் சொல்லுதே."

"என்ன சொல்லுது."

"உங்க வீட்ல கல்யாணம் வரப்போகுதுன்னு."

"அப்படியெல்லாம் சொல்லுமா என்ன."

"சொல்லும். உங்களது என்ன நட்சத்திரம்."

"உத்திரட்டாதி."

"அப்போ உங்க பொண்ணு மக நட்சத்திரம்."

"எப்படி சொல்றீங்க."

"இவர் நட்சத்திரம் எனக்கு ஞாபகம் இருக்கு. இவரது ஹஸ்தம். உங்களது உத்திரட்டாதி. அப்போ உங்க பொண்ணு மகமாத்தான் இருக்கும்."

"அப்படியா."

"கரெக்டாதான் சொல்றீங்க."

"இது வேற யார் வேணா சொல்லிடலாங்க. ஒண்ணும் பெரிய கஷ்டமில்லை."

"இல்லீங்க இப்படி ஜோசியம் சொல்லி பார்த்ததே இல்லை."

"ஜோஸியர் நிறைய பேருக்கு ஜோஸியமே தெரியாது.. அதான். கையில நீங்க வச்சுருக்கற ஜாதகம் திருவாதிரை, பூரம், உத்திரம். மூணு நட்சத்திரத்துல ஏதாவது ஒண்ணாயிருந்தால். இந்த திருமணத்தை நீங்க ஜாம்ஜாம்னு நடத்தலாம்."

"இது உத்திரநட்சத்திரம். சிம்மராசி."

"கிடைக்கணுமே. அப்படி பையன் கிடைக்கணுமே. உத்திரம் கன்யா கிடைக்கும். மிருதுவா இருப்பாங்க. உத்திரம் சிம்மராசின்னா ஸ்பீடா இருக்கற ஆளு. ஒப்பனா இருக்கற ஆளு. உண்மையா இருக்கற ஆளு. உண்மையாவும், தன்மையாவும், ஸ்பீடாவும் இருப்பான். இதானே ஆம்பளை லட்சணம். இப்படியொரு ஜாதகம் கையில கிடைச்சுருக்கும் போது என்னாத்துக்கு கவலை. டப்புனு போய் முடிங்க."

அவர் ஜாதகம் பிரித்து நீட்டினார்.

"கரெக்டா இருக்கே. அப்போ இவனையே முடிச்சுருங்க."

"நீங்க சரியாவே ஜாதகம் பார்க்கலையே."

"வேணாங்க. கண்ணு முன்னாடி கிடுகிடுன்னு நிறைய விஷயங்கள் தெரியுது."

"நீங்க குறி சொல்றீங்களா."

"இல்லை. ஜாதகம்தான். இது ஒருவிதமான கணக்கு."

"என்ன மாதிரியான கணக்கு. எனக்குப் புரியலை."

"உங்களுக்கு புரியணும்னு அவசியமில்லை. நம்பிக்கையோட கேளுங்க போதும்."

தாமோதரன் சொல்ல, காமாட்சியின் அப்பா முகம் சட்டென்று வாடியது. ஆனால், அந்த தாமோதரன் அந்த வாட்டத்தை கவனித்துவிட்டு இன்னும் மிருதுவாகப் பேச ஆரம்பித்தார்.

"இதோ பாருங்க. ஜாதகம்ன்னு பேப்பர்ல போடற கட்டம்கூட தப்பு பண்ணும். கம்ப்யூட்டர்கூட சரியில்லாத ஒரு தகவலை சொல்லிடும். ஆனால், உங்க முகம் அதுதான் எனக்கு ஜாதகம். அந்த முகம் சொல்ற கணக்கு தப்பே ஆகாது. ஒவ்வொருத்தர் ஜாதகமும் அவங்க மூஞ்சியில இருக்குங்க. நான் அப்படித்தான் பார்த்து சொல்றேன்."

"இது என்ன அங்க சாஸ்திரமா."

"அடாடா.." தாமு பின்னோக்கி சரிய காமாட்சியின் அண்ணன் நடுவில் புகுந்தான்.

"அது எதுவாயிருந்தா என்னப்பா. அதையா கத்துக்கப் போற. இவர் சொல்ற கைடென்ஸ எடுத்துக்க. அவரை பரிசோதனை பண்ணாத."

"இந்தப் பையன் நல்லவனா. அது சொன்னா போறும் ஸார்."

"ரொம்ப நல்லவன். அப்பா, அம்மா உண்டு. சகோதர சகோதரிகள் உண்டு. பெரிய குடும்பம். பொறுப்பான வேலை. கம்பீரமான படிப்பு. மனைவிகிட்ட பிரியமா இருக்கணும்கற எண்ணம். அப்படி, அம்மாவோட கொஞ்ச நாள் இருந்துட்டு தனி குடித்தனம் போகணும்கற ஆசை. இதெல்லாம் இருக்கும்."

"இவ பிடிக்குள்ள இருப்பானா."

காமாட்சியின் அப்பா இன்னும் அதிகக் கவலையோடு கேட்டார்.

"ஏங்க இருக்கணும். ஒரு ஆம்பளை பொண்டாட்டி பிடிக்குள்ள இருக்கலாமா. நல்லதா. நீங்க இருக்கீங்களா அப்படி. இல்லை இல்ல. உங்க பிள்ளை இருக்காரா. இல்லை இல்ல. அப்போ உங்க பொண்ணுக்கு வரப்போற மாப்பிள்ளை மட்டும் பிடிக்குள்ள இருக்கணும்னு ஆசைப்படறீங்களே என்ன

நியாயம் இது. இருக்கமாட்டார். அவர்தான் முடிவு. அதுதான் நல்லது. உங்க பொண்ணு பேச்சு கேட்கறவன். அம்மா பேச்சு கேட்கமாட்டானா. அப்புறம் குடித்தனம் என்னாகறது."

"பொண்ணு நன்னாயிருப்பாளா."

"அப்படி கேளுங்க. அதான் நல்ல கேள்வி. உள்ள நுழைஞ்சு நீங்க கேட்கற முதல் சரியான கேள்வி இதுதான். உங்க பொண்ணு அங்க அற்புதமா இருப்பா. அவ ஜாதகம் நல்லது. அவ போய் சேர்ந்த இடம் நல்ல வளமா இருக்கும். அதனால இந்த இடத்தையே முடிச்சுடுங்க. கல்யாணத்துக்கு முன்னாடி ஏதாவது வேண்டிகிட்டிருந்தா அதையும் முடிச்சுடுங்க."

"கல்யாணம் நிச்சயமானா சமயபுரத்துக்கு வரேன்னு வேண்டிண்டிருக்கேன்."

"நிச்சயமா செய்யணும்."

"நான் ஆயிரங்கண்ணிக்கு வேண்டிண்டிருக்கேன்ப்பா."

"என்ன வேண்டிண்டிருக்க."

"நீ என்ன கேட்டாலும் பண்றேன்னு வேண்டிண்டிருக்கேன்."

"என்னடா அது. முட்டாள்தனமா இருக்கு."

"சரியா இருக்குங்க."

தாமு உள்ளே புகுந்தார்.

"கல்யாணம் நிச்சயமானவுடனே அன்னிக்கு சாயந்தரம் உள்ள போங்க. உள்ள போனவுடனே அந்தம்மா நிச்சயமா ஏதாவது கேட்கும். அதை சரின்னு செய்துருங்க. ஆனா ஒரு விஷயம் இதை என்னால சொல்லாம இருக்க முடியாது."

"என்ன."

"அந்தப்பையனுக்கு உங்கப் பொண்ணைப்பத்தி தெரிஞ்சு, உங்கப்பொண்ணோட, அந்தப் பையனோட நெருங்கிய ஸ்நேகம் ஏற்பட்டிருக்கணும்."

"என் பொண்ணு அப்படியெல்லாம் இருக்க மாட்டா ஸார்."

"சரி. போய் கேட்டுக்கோங்களேன்."

தாமோதரன் எழுந்து நின்று கைகூப்பினார்.

"என்னாடா அது. தாக்கரே மூக்கரேன்னு பேசறான். காமாட்சி அப்படியெல்லாம் பண்ணுவாளா."

"எந்த புத்துல எந்தப்பாம்பு இருக்குன்னு தெரியாதுப்பா. என்ன, ஒண்ணும் தப்பா சொல்லலையே."

"எனக்கு அதெல்லாம் பிடிக்காது."

"அப்பா.. சும்மாயிரு. முரட்டுத்தனமா பேசி கெடுத்துடாத."

அவர்கள் இரண்டு பேரும் வீட்டிற்குள் நுழைந்தார்கள்.

"சத்யமூர்த்திங்கற பையனையே முடிக்கும்படியா சொல்லிட்டான். அதுதான் நடக்குமாம்."

"யார் சொன்னது."

"இவன் ஃப்ரெண்ட் ஒருத்தன். தாமோதரன்னு பேர். பொட்டுல அடிச்சமாதிரி பேசறாண்டி. நன்னாயிருக்கு ப்ரெடிக்ஷன். என் ஜாதகம் கேட்கணும்னு நினைச்சேன். ஆனா, ஏதாவது தடுக்புடுக்குனு சொல்லிடுவாரோன்னு பயம். வந்துட்டேன்."

"யார் என்ன சொன்னாலும் நான் பூப்போட்டு பார்த்துட்டு எனக்கு சிகப்புப்பூ வந்தாதான் கல்யாணம். நீங்க வேற குறுக்க நிக்காதீங்கோ. பூ வெள்ளையா வந்தா கல்யாணத்துக்கு ஒத்துக்க மாட்டேன். சூட்டோட சூடா போய் பார்த்துடுவோம்."

காமாட்சியின் அப்பா எழுந்திருக்க அவர்கள் கோயில் நோக்கி நடந்தார்கள்.

"ஏன் படிக்கிட்டேயிருந்து ஆரம்பிக்காம தள்ளிப்போய் ஆரம்பிக்கறீங்க."

வியப்பாக சத்யா கேட்டான்.

சத்யாவும், காமாட்சியும் தளத்தின் உச்சியில் நின்றிருந்தார்கள்.

"எட்டின இடத்துலேர்ந்துதாங்க ஆரம்பிக்கணும். கிட்டக்கயிருந்து ஆரம்பிக்கக்கூடாது. இங்கேயிருந்து ஆரம்பிச்சா இன்னும் அவ்வளவு தூரம் இருக்கேன்னு தோணும். அங்கேயிருந்து ஆரம்பிச்சா இதோ முடிச்சிட்டோம். முடிச்சுட்டோம்னு தோணும். அதனால எப்பவுமே தள்ளிதான் ஜல்லி போட்ட ஆரம்பிப்பாங்க."

"நாளைக்கு போட்ருவீங்களா ஜல்லி."

"ஆரம்பிச்சிடுவோம் தம்பி" என்று சொல்ல, அவர்கள் உடைக்கப்பட்ட கற்களில் கால்வைத்து ஒருவர் கையை ஒருவர் பிடித்தபடி நடந்து போனார்கள்.

பொம்மைகளை சற்று குண்டான ஒரு ஆள் மெல்லிய சுத்தியால் அடித்து எடுத்துக் கொண்டிருந்தான்.

"ஏன், எல்லாத்தையும் எடுத்துடறீங்க."

"எடுத்தாதானுங்களே வைக்க முடியும்."

"என்ன வைக்கப்போறீங்க."

"பொம்மைதேன்."

வெங்கடேஷ் கும்பகோணம் குசும்போடு பேசினான்.

"பொம்மை சரி.. என்ன பொம்மை."

"உங்க பொம்மை.. என் பொம்மையா வைக்க முடியும். கடவுள் பொம்மைதான் வைக்கணும்."

"ஏன், மனுஷாள் பொம்மை வச்சா என்ன."

வேண்டுமென்றே காமாட்சி கேள்வி கேட்டாள்.

அவன் திரும்பி காமாட்சியைப் பார்த்தான்.

"அதுவும் வைக்கறதுண்டு தாயே. பள்ளிக்கூடத்துப் பசங்க.

பாம்பாட்டி. மாடு மேய்க்கிற இடையர்கள். குறவன். குறத்தி. விவசாயி அப்படின்னு நிறைய பொம்மைங்க வைக்கலாம்."

"கணவன், மனைவின்னு வைக்க மாட்டீங்களா."

"நல்லா வைக்கலாமே. அழகா வைக்கலாமே."

"எங்க வைப்பீங்க. இந்தக் கோபுரத்துலயா."

"கோபுரத்துலயா.. கோபுரத்துல வேணாம். விமானத்துல வைக்கறேன்."

"அப்படியொரு கணவன், மனைவி பொம்மை வச்சா.. அந்த ரெண்டு பொம்மையும் எங்களைமாதிரி வைப்பீங்களா."

மறுபடியும் காமாட்சியை அவன் உற்றுப் பார்த்தான்.

"அப்படியே வைக்கறேன். நீ சொல்றது ஆத்தா வாக்கா இருக்கு. வைக்கலாம். வச்சிடறேன்."

"ரொம்ப சந்தோஷம். இதுக்கு நாங்க எவ்வளவு தரணும்."

சத்யா கேட்டான்.

"கொடுங்களேன். எதுனா கொடுங்களேன்."

"எதுனான்னா. எத்தனை ரூபா சொல்லுங்க."

"ரூபா வேண்டாம். வேற ஏதாவது கொடுங்க."

"எதுனான்னா."

"ஒரு வேட்டி, சட்டை, மேல்துண்டு, படிக்கறதுக்கு நல்ல புஸ்தகம்னு எதுனா இருந்தா தமிழ் புஸ்தகமா இருந்தா கொடுங்க. இங்கிலீஷ் தெரியாது."

"யோகியின் சுயசரிதம் படிச்சுருக்கீங்களா. நல்ல புக் அது."

"அந்த மாதிரி புஸ்தகம்தாங்க பிடிக்கும். ஒண்ணு வாங்கிக் கொடுங்களேன்."

"நிச்சயமா வாங்கித்தரோம். நாளைக்கே வாங்கித்தரோம்."

அவர்கள் கோபுரத்தைப் பிடித்துக்கொண்டு விளிம்பிலிருந்து எட்டிப்பார்த்தார்கள். கீழே அப்பாவும், அம்மாவும், அண்ணாவும் நின்று கொண்டிருப்பதைப் பார்த்து அவள் பயந்து பின்வாங்கினாள். ஆனால், அவர்கள் பார்த்து விட்டார்கள்.

"என்ன.. யாரு."

அவள் விழுந்து விடுபவள்போல தடுமாற அவன் தாங்கிப் பிடித்துக் கொண்டான். அதையும் அவர்கள் பார்த்தார்கள்.

"என்னடி இது. என்ன பண்ணிண்டிருக்கா அவ மேல. என்ன பண்ணிண்டிருக்க நீ."

அவர் சீற ஆரம்பித்தார்.

மகன் ஓடிவந்து அவருக்கு அருகே நின்று அவர் கையைப்பிடித்து அமைதிப்படுத்தினான்.

"இது கோவில். அமைதியாயிரு."

"அவன் சொன்னது சரியாப்போச்சுடா."

"எது, யார் சொன்னது."

"அந்த தாமோதரன் சொன்னது."

"நான்தான் முன்னாடியே சொன்னேனே. தாமோதரன் சொன்னா சொன்னதுதான்னு. கத்தி கலாட்டா பண்ணி எதுவும் பண்ணிடாத. யாருடா நீ அப்படியெல்லாம் கேட்டுடாத. அவர்தான் மாப்பிள்ளை. கெட்டியா பிடிச்சுக்கோங்கோன்னு சொல்றாரு. அந்த மரியாதையோட நடந்துக்கோ. தப்பு பண்ணிடாத."

சீனுவாசன், சத்யாவின் காமாட்சியின் முகமாற்றத்தைக் கவனித்தார்.

"ஏன் காமாட்சி பயப்படற."

சத்யா அடிக்குரலில் கேட்டதும் காதில் விழுந்தது.

"எங்க அப்பா என்ன வேணாலும் பண்ணுவார்."

காமாட்சியின் உடம்பு நடுங்குவதை சீனுவாசன் கவனித்தார். சட்டென்று அவர்களை உற்றுப்பார்த்தார்.

"பயப்படாதீங்கோ. நான் இருக்கேன். ஆயிரங்கண்ணி இருக்கா. இங்கேயிருந்து விமானம் தெரியாது. விமானத்துக்கு முன்பக்கம் நின்னுண்டிருக்கா. கைகூப்பி வேண்டிக்கோ காமாட்சி. உன் வாசல்ல கோலம் போடறேன்னு வேண்டிக்கோ. சத்யா, ஊர்ல இருந்தா நிச்சயம் வரேன்னு வேண்டிக்கோ. அவளை சுத்தி சுத்தி வந்தாபோதும் எல்லாம் சரியாயிடும். ஒருத்தரைக்கண்டும் பயப்படவேண்டாம். அவ காப்பாத்துவோ."

அவர்கள் கீழே இறங்கினார்கள்.

"யாரும்மா காமாட்சி இது."

"அப்பா. இவரு சத்யாப்பா. இவர் ஜாதகம் நம்மாத்துக்கு வந்தது."

"ஜாதகம்தானம்மா வந்தது. உன்னை யார் போகச்சொன்னா. பொருத்தம் பார்த்துட்டு, பொண்ணு பார்த்துட்டு அப்புறம்தானம்மா பேசணும்."

"இல்லைப்பா. சும்மா ஹலோ ஹலோ சொல்லிண்டிருக்கோம். மேல இவர் ரிப்போர் பண்ணி கொடுக்கறார். அதை சூப்பர்வைசர் பண்றதுக்காக போனோம்."

"காமாட்சியும் காசு போட்டிருக்கா ஸார்."

சத்யா சொன்னான். அவரை நோக்கி கை நீட்டினான்.

மெல்லிய தயக்கத்தோடு காமாட்சியின் அப்பா கைகுலுக்கினார். அவர் தயக்கத்தோடு கை குலுக்குவதாலேயே காமாட்சியின் அண்ணன் கைகுலுக்கி கட்டியும் தழுவிக் கொண்டான்.

அனைவரும் வரிசையாக நிற்க ராமசுப்ரமணியன் தீபாராதனை காட்டினான்.

"சத்யாவோட அப்பா வந்திருக்காரு." என்று கன்னியப்பன்

சொல்ல நிர்வாக அதிகாரி மோகனசுந்தரம் எழுந்து போனார்.

"யாருங்க சத்யா.. உங்கப்பாவா."

"இல்லீங்க. அப்பா இல்லை. அவங்க காமாட்சி. அவங்க காமாட்சியோட அப்பா."

"காமாட்சி உங்களுக்கு என்ன உறவு வேணும்."

சத்யா மௌனமாக இருந்தான்.

அங்கு எல்லோர் முகத்திலும் ஒரு சங்கடம் பரவியது.

"ஏங்க, எதுனா தப்பா கேட்டுட்டேனா."

"இல்லைங்க. அவங்க வீட்லேர்ந்து ஜாதகம் எங்க வீட்டுக்கு வந்திருக்கு. எங்க வீட்ல இன்னும் பார்க்கலை. அவங்க ஜாதகம் கொடுத்து பொண்ணு பார்த்து அதுக்கப்புறம் கல்யாணம் பேசணும். நாங்க ஒருத்தரை ஒருத்தர் பார்த்து ஆயிரங்கண்ணி ரிப்பேர் வேலையில இறங்கிட்டோம். அதனாலதான் இதை என்னாதான்னு சொல்றதுன்னு தெரியாம முழிக்கறோம்."

"அட போங்க, உள்ளபோய் அம்மாகிட்ட ஒரு சம்மதம் கேட்டுட்டு, டக்குனு முடிக்கறத விட்டுட்டு இதுக்குப்போய் என்னாங்க ஜாதகம் பார்க்கறது. பொண்ணு பார்க்கறது."

"நானும் அதைத்தான் சொல்றேன்."

காமாட்சியின் அம்மா உரக்கச் சொன்னாள்.

"பூ போட்டுப் பார்க்காம வேற எந்த முடிவும் எடுக்க முடியாது."

"பார்த்துடுங்களேன் இப்போ."

மோகனசுந்தரம் ஆயிரம்கண்ணியை சுட்டிக்காட்டி கைநீட்டினார். ராமசுப்ரமணியம் தனியே அழைத்துப்போய் சொல்ல ஒரு பெரிய வெற்றிலைக்குள் ஒரு அரளிப்பூவும், இன்னொரு பெரிய வெற்றிலைக்குள் மல்லிகைப்பூவும் கலந்து எடுக்கப்பட்டு வைத்து சுருட்டப்பட்டு நாரால் கட்டப்பட்டது. அம்மன் முன்பு வைக்கப்பட்டது. ராமசுப்ரமணியம் அதை ஒரு தட்டில் எடுத்துக்கொண்டு வந்து கிராதிக்கு நடுவில் வைத்தான். கிராதிக்கு நடுவே மோகனசுந்தரம் அங்கு விளையாடிக் கொண்டிருந்த ஒரு பாவாடைச்சட்டை போட்ட ஒரு பெண் குழந்தையை இறக்கினார்.

"ரெண்டுல ஏதாவது ஒண்ணு எடும்மா." என்று சொன்னார்.

அந்தப் பெண் குழந்தை ஒரு வெற்றிலைச்சுருளை எடுத்தது. வாயில் வைக்க விரும்ப அதை மெல்ல கையிலிருந்து வாங்கினார்.

அந்தப் பெண் குழந்தைக்கு உலர்ந்த திராட்சைப் பழங்கள் கொடுத்தார்.

வெற்றிலைச்சுருளை காமாட்சியின் அம்மாவிடம்

நீட்டினார்.

காமாட்சியின் முகம் வியர்த்திருந்தது. கண்களில் கலவரம் தெரிந்தது. உதடுகள் துடித்துக் கொண்டிருந்தன.

சத்யமூர்த்தி உறைந்து கிடந்தான்.

சீனுவாசன் அவர்கள் இருவரின் முகபாவத்தைப் பார்த்துவிட்டு வருத்தப்பட்டார். ஆயிரம்கண்ணியை நோக்கி கைகூப்பினார்.

'தாயே. இதுங்க தானா பார்த்து, தானா பேசி, தானே உன் வேலைய ஆரம்பிச்சுது. பிரிச்சா போடப்போற. வேண்டாண்டி கண்ணு. சேர்த்துடறா.'

கைகூப்பிக் கெஞ்சினார்.

காமாட்சியின் அப்பா மெல்ல வாங்கி அந்த வெற்றிலையின் மேலிருந்த நாரை நீக்கிவிட்டுப் பிரித்தார்.

உள்ளுக்குள் அரளி உட்கார்ந்திருந்தது.

ஆயிரம்கண்ணி சிரித்தாள்.

காமாட்சிக்கு சட்டென்று ஒரு அழுகை பீறிட்டது. வேகமாக கருவறைக்கு ஓடினாள். விழுந்து பலமுறை நமஸ்கரித்தாள். கைகூப்பினாள். எழுந்து மடமடவென்று கோவிலை சுற்றிவிட்டு வீட்டுக்கு ஓடினாள்.

"இப்போ என்ன சொல்ற. சொல்லு."

"அவா ஆத்துக்கு ஜாதகத்தை அனுப்புவோம்."

"இந்தக் கதையெல்லாம் கிடையாது. நாங்க ஜாதகம் பார்த்துட்டோம். பொருத்தமா இருக்கு."

"அவா சொல்ல வேண்டாமா."

"பொண்ணு தரேன்னு போய் சொல்ல வேண்டாம்."

"அவா கன்னாபின்னான்னு கேட்டாக்க."

"சத்யாகிட்ட சொல்ல வேண்டியதுதான்."

"வாங்கோ ஸார். போன் பண்ணி சொல்லிட்டு வாங்கோ. நானும் ஏற்பாடு பண்ணி வைக்கறேன்."

அவர்கள் முகத்தில் பல்வேறு விதமான சங்கடங்கள் இருப்பதைப் பார்த்து சீனுவாசன் வாய்விட்டுச் சிரித்தார்.

"உள்ளுக்குள்ள அவ சரின்னு சொன்னபிறகும் உங்களுக்குள்ள கலவரமா. இந்தக் கல்யாணம் நடந்தே தீரும். குழந்தேள் சந்தோஷமா இருக்கணும். அதுக்கு எல்லாவிதமான முயற்சிகளும் பண்ணுங்கோ."

அவர்கள் இன்னொருமுறை சுற்றிவர மோட்டார் சைக்கிள்காரன் ஏணியில் ஏறினான். உச்சிக்குப் போனான். வெங்கடேஷ் கோபுரத்திலுள்ள ஆயிரங்கண்ணி சிலையை மிகக் கவனமாகக் தட்டி எடுத்துக் கொண்டிருந்தான்.

ஏதோ சின்ன கலவரம் அவனைப் பிடித்து ஆட்டிக் கொண்டிருந்தது.

சரியாதானே செய்யறோம். வேண்டிகிட்டுதானே செய்யறோம். எதுவோ ஒரு கோபம் பொத்துதே. என்னன்னு தெரியலையே.

அவன் அசைத்து எடுக்க கம்பியில் பலமாய் அந்த பொம்மை இருந்தது. ஆக்ஸா பிளேடை எடுத்து தாமிரக்கம்பியை அறுத்தான். பொம்மையை அசையாமல் எடுத்து மெல்ல வைத்தான்.

ஒரு கால் மடித்து, ஒரு கால் நீட்டி, கையில் சூலம் ஏந்தி நான்கு கரங்களோடு அக்கமாலையும் அமிர்த குடமுமாய் ஆயிரம்கண்ணி சுடுமண் சிலையாக உட்கார்ந்திருந்தாள்.

"என்னாங்க. வேலை ஆரம்பிச்சுட்டீங்களா. இந்த பொம்மை இங்க இருந்தது இல்ல. பின்பக்கம் ஏதோ கம்பு நீட்டிகிட்டிருந்ததே அந்தக் கம்பியை வச்சுதான் செய்வீங்களா."

அவன் அந்த பொம்மையை குனிந்து பார்த்துவிட்டு வெட்டிய கம்பியைப் பார்த்தான்.

அந்த இடம் தளம் கொத்தப்பட்டிருந்த இடம். அந்த இடம் உடைந்த கற்கள் நிரம்பிய இடம்.

அந்த மோட்டர்சைக்கிள் காண்ட்ராக்ட்காரன் தடிமனானவன். பெரிய தொந்தியை உடையவன். தடுமாறினான்.

"ஐயா ஜாக்கிரதையா இருங்க. பிடிச்சுக்கோங்க சைட்ல."

அவன் உடனே உத்தரவுக்குக் கட்டுப்பட்டு வலப்பக்கமுள்ள கோபுரத்தில் கை வைத்தான். கோபுரத்து செங்கல் அவன் கனம் தாங்காமல் கையோடு வந்தது. கோபுரத்தின் செங்கல் கையோடு வர அவன் இன்னும் நிலை குலைந்தான். கால் நடுக்கம் தர தடுமாறி அந்தத் தளத்திலிருந்து கீழ்நோக்கி விழுந்தான். தட்டென்று அவன் உடம்பு தரையில் மோதிற்று.

வெங்கடேஷ் ஐயோ என்று கூச்சல் போட்டான். கோவில் முழுவதும் அந்தக் கூச்சல் கேட்டது.

சீனுவாசன் ஸ்தபதியான வெங்கடேஷ்தான் விழுந்து விட்டான் என்று பயத்தில் ஓடினார்.

"என்ன காண்ட்ராக்டரா."

அவனை மெல்லத்தூக்கி நிமிர்த்தி உட்கார வைத்தார். ஆனால் காண்ட்ராக்டருக்கு முதுகில் அடிபட்டிருந்தது. அவனை தூக்கி நிறுத்தியதும் அலறினான். ஆம்புலன்ஸுக்கு சொல்லப்பட்டது. பதினைந்து நிமிடத்தில் ஆம்புலன்ஸ் வர அவனை அசையாது தனியார் மருத்துவமனைக்கு எடுத்துப் போகப்பட்டான்.

"என்னாடா இது. என்ன, இவர் ஏன் மேல ஏறினாரு."

மோகனசுந்தரம் புலம்பிக் கொண்டிருந்தார்.

"நல்லா நடந்துகிட்டு வந்தது. எவன் கண்ணுபட்டதோ தெரியலையே."

கன்னியப்பன் வேறொரு மூலையில் கத்திக் கொண்டிருந்தான்.

கோவில் முழுவதும் ஒரு பரபரப்பும், படபடப்பும் பற்றிக் கொண்டன. மூலைக்கு மூலை கத்தத் துவங்கினார்கள்.

"பிள்ளையார் பூஜை பண்ணீங்களா. ஹோமம் பண்ணீங்களா. நீங்க பாட்டுக்கு தடக்குனு வேலை ஆரம்பிச்சுட்டீங்க."

"நாங்க எங்கப்பா ஆரம்பிச்சோம். அவரு வந்தாரு. அவரு ஆரம்பிச்சாரு." என்று சத்யாவை கை காட்டினார்கள்.

சத்யா மிரண்டான்.

"எடுத்தவுடனேயே கெட்ட பேர் வாங்கினுட்டேளா. என்ன பண்றது. தலையெழுத்து."

காமாட்சியின் அப்பா நொந்துகொண்டார்.

சத்யாவுக்கு அது கோபத்தைக் கொடுத்தது.

இவர் அளவுக்கு மீறி கேலி செய்கிறார். அலட்சியமாகப் பேசுகிறார் என்று அவன் ஆத்திரப்பட்டான்.

"ஸார் உங்கப்பா என்ன லூஸா. ஜாஸ்தி பேசறார்."

அவன் பேச்சுக்கு காமாட்சியின் அண்ணன் கோபப்பட்டான். ஆனால் பேசவில்லை.

எங்கப்பன் ஒரு முட்டாள். அந்தாள் பேசறதுக்கு காரணம் அம்மா. தூண்டித் தூண்டி விடறா. இந்த அம்மா தூண்டி விட்டுத்தான் என் பொண்டாட்டி நாள் தவறாத அழுதுண்டிருக்கா. இந்தக் கல்யாண சாக்குல அம்மா மூக்கை ஒரு தடவை அறுத்துடணும்.

காமாட்சியின் அண்ணன் உள்ளுக்குள் கறுவிக் கொண்டான். அவனும் பல் கடித்தான்.

"என்னது. மேலேயிருந்து விழுந்து செத்துப்போயிட்டானா. யாருடா அவன். கோவிலை மூடச்சொல்லுடா."

நொண்டி நொண்டி விஸ்வநாத சிவாச்சாரியார் வெளியே வந்தார்.

அவர் கால் வலித்தது. ஆனால், மனம் குதூகலித்தது.

"நான் இல்லைன்னா கோவில் குட்டிச்செவுருடா."

அவர் மறுபடியும் உரக்கக் கத்தினார். அவர் வீட்டுக்கு அருகே இருந்தவர்கள் முகம் சுளித்தார்கள். அவர் சைக்கிள்ரிக்ஷா வைத்துக்கொண்டு கோவில் வாசலுக்கு வந்தார். யாரும் செத்துப்போகவில்லை என்றதும் வருத்தப் பட்டார்.

"இன்னிக்கு செத்துப்போகலைன்னா என்ன. இன்னும்

ரெண்டுநாள்ல செத்துப்போவான்." கோவில் வாசல்லேர்ந்து உரக்கச் சொன்னார்.

மோகனசுந்தரம் வந்து "என்ன இங்க கூச்சல்" என்று கேட்க, "உனக்குத்தான் ஓய்.. காலம் முடிஞ்சுப்போச்சு. அந்திமம் வந்துடுத்து. உம்ம ஆட்டம் இத்தோட க்ளோஸ்." விஸ்வநாத குருக்கள் கூவினார்.

"இதெல்லாம் ஐயர் சொன்னா பலிக்கும். நீ ஐயரே இல்லைய்யா. போ.. வீட்டுக்கு போ. போய் குடிச்சுட்டு படுத்துக்கோ. ஐயனா பொறந்துட்டு சாராயம் குடிக்கறியே. உன்னைவிட கேவலமானவன் உண்டா. கோயில் வாசல்ல நின்னு கத்தற. போடா போ அந்தப்பக்கம்."

மோகனசுந்தரத்திற்கு கோபம் பீறிட்டுக் கொண்டு வந்தது.

"அது கோயில் நிலம்யா. அது இப்படி சுத்தி அப்படி சுத்தி எவ்வளவு சீப்பா வாங்க முடியுமோ அவ்வளவு சீப்பா வாங்கினான். கோயில் நிலத்துல கை வைக்கலாமா. அதுல லாபம் பார்க்கலாமா. அடிச்சா ஆத்தா. உச்சிலேர்ந்து கீழ விழுந்தான். அவனுக்கு முன்னாடி நின்ன ஸ்தபதி வெங்கடேஷ் அவன் விழலை. பின்னாடி இருந்தவன் விழுந்துட்டான்னா என்ன அர்த்தம்."

ஊர் பேசியது.

"அந்த நிலத்தை நாம வாங்க ட்ரை பண்ணலாம்யா. அவனை பயமுறுத்தி ஆத்தா கண்ணை குத்திடுவா. குலை உறுவிடுவா. நாக்கு அறுத்துடுவான்னு சொல்லி மடக்கிடலாம்."

மோட்டார்சைக்கிள் காண்ட்ராக்டரால் முதன்முதலில் ஷெட்டுக்கு கூட்டிவரப்பட்ட, மனைவியோடு உற்றுஉற்று அந்த இடங்களை அளந்து பார்த்த, அந்தக் குண்டோதரன் தன் மனைவியிடம் சொன்னான்.

"நாம போனா அங்க இருக்கறவங்க யாரும் உதவி செய்ய மாட்டாங்க. வேற எவனையாவது அனுப்பணும். யாரை அனுப்பறது."

"அங்க கார் ரிப்பேர் பண்றானே, அவனையே அந்த இடம் வாங்கும்படியா சொல்லிட்டா."

"அவன் வேற எங்கயோ போயிட்டதா சொல்றாங்களே. வேளச்சேரி போயிட்டானாம்."

"அவனை தூண்டிவிட்டா."

"செய்யலாமே. உனக்கு எதுனா தரேண்டான்னு கூட்டிகிட்டு வந்து ஏற்பாடு பண்ணலாம். அங்க முன்னாடி ஷெட் போட்டுக்கடான்னு சொல்லலாம். உடனே பல்லை காண்பிச்சுகிட்டு வருவான். அதுக்கப்புறம் சரிதான் போடான்னு சொல்லிடறது."

"கரெக்ட். அவனை கூட்டிக்கிட்டு வந்தா நல்லது. ஏன்னா அவனுக்கு அந்த பக்கத்து ஆளுங்களையெல்லாம் நல்லா தெரியும்."

"ஒருவேளை நாம அந்த கோயில் நிலத்தை வாங்கினா எதுனா பண்ணுமா."

அந்தப் பெண்மணி பயந்தபடி கேட்டாள்.

"என்னாத்த பண்ணும். நிலம் என்னத்த பண்ணும். இவன் தேவையில்லாத கோபுரத்துக்கு துட்டு கொடுக்கறேன்னு போய் ஏறி அடிபட்டுப் போனான். அந்த உடம்பை வச்சுகிட்டு கோபுரத்துல ஏறலாமா. முட்டாள். அது நல்ல இடம். உள்ள கைவச்சு வேலை ஆரம்பிச்சோம்னா அட்வான்ஸே வாங்கின விலைக்கு எடுத்துடலாம். மிச்ச எல்லாமும் லாபம்தான்."

"நீ நிலம் வாங்கி லாஸ் ஆச்சுன்னு சொன்னியே. அந்த இடம் மறுபடியும் விலைக்கு வருது."

அண்ணாவிடமிருந்து பிரிந்த அந்த இளைஞனை யாரோ தூண்டி விட்டார்கள்.

"அப்படியா. எப்படித்தெரியும்."

"வாங்கினவன் கோயில்ல ஏறி விழுந்துட்டான். நீ உள்ள பூந்து பாரேன். இதுல நஷ்டம் வந்ததுன்னு சொன்னியே. இப்போ லாபமா மாறிடும். அந்த நிலம் கேளு."

"அந்தாள் ஏன் விழுந்தான்."

"அவன் தலையெழுத்து சரியில்லை. அதனால விழுந்தான்."

"அந்த நிலம் வாங்கறது தப்பா."

அந்த இளைஞன் கேட்டான். தூண்டிவிட்டவன் பதில் சொல்லவில்லை.

அவன் அண்ணாவின் கார் எடுத்துக்கொண்டு ஆஸ்பத்திரிக்கு அந்த மோட்டார்சைக்கிள் காண்ட்ராக்டரை பார்ப்பதற்குப் போனான்.

அவன் படுத்திருந்தான். இடுப்பில் அடி. எல்லா இடத்திலும் டியூப் சொருகி இருந்தார்கள்.

அவன் விழித்திருந்தான்.

"வாங்க.. வாங்க டாக்டர்." என்று ஈனஸ்வரத்தில் பேசினான்.

"நான் டாக்டர் இல்லை. காண்ட்ராக்டர்."

வாலிபன் அவருக்கு அருகே போய் பதில் சொன்னான். கை பிடித்துக் கொண்டான்.

"மேலேயிருந்து விழுந்துட்டீங்கன்னு கேள்விப்பட்டேன். நான் கேரேஜ் வாங்கினவன். என்னை ஏமாத்திட்டாங்க. இந்தப்பக்கத்து நிலமும் தரேன்னு சொல்லிட்டு.."

"ஆமாம். கேள்விப்பட்டேன். அந்த ஜிப்பாக்காரன்

பொண்டாட்டியோடயே அலைவானே அவன்தானே ஏமாத்தினது."

"ஆமாம். அவன்தான் ஏமாத்தினான்."

"எதுக்கு இப்போ என்னைப் பார்க்க வந்த."

"நீங்க அந்த நிலத்தை நல்லபடியா வாங்கிட்டீங்களாமே. அது எனக்கு வித்தீங்கன்னா."

"வேணாம்.. வேணாம்.. வேணாம். அந்த நிலம் வேணாம்."

"ஏங்க."

"ஏன்னா அப்படித்தான்."

"ஏன்னு சொல்லுங்களேன். வில்லங்கம் இருக்கா."

"வில்லங்கம் நிலத்துல இல்லை. இது அவளுக்கு சொந்தமான இடம். அவோ ஆசைப்பட்ட இடம். நேத்து ராத்திரி கனவுல வந்து அது என்னான்னு சொல்லிட்டா. ஒரு நாள் இல்லை, ரெண்டு நாள் இல்லை. ஆறுநாள் அதே கனவு. அதே இடம். அதே லேடி."

"என்னான்னு விளக்கமா சொல்லுங்க."

"ஆயிரம் வருஷத்துக்கு முன்னாடி இது வெத்தலைத் தோட்டம். பக்கத்துல செழுங்கழுநீர் ஓடை. மீனவக்குப்பம். எல்லாம் இந்த அம்மாவுதுதான்."

"உங்களுக்கு எப்படி தெரியும்."

"சொன்னாளே. கனவுல வந்து சொன்னாளே."

அந்த இளைஞன் திகைத்தான்.

"சொல்லுங்க. வேற என்ன சொன்னாங்கன்னு சொல்லுங்க."

"வடக்கயிருந்து ஏகமா குதிரையில வராங்க. அம்பது அம்பது பேரா ஊருக்குள்ள நுழையறானுங்க. அம்பது பேருதானேன்னு சண்டைக்கு போன கிராமம் ஏமாந்துடுது. அஞ்சாயிரம், ஆறாயிரம் பேர் குதிரையில வந்து தெருத்தெருவா உள்ளுக்குள்ள புகுந்து எல்லாரையும் அடிக்கறான். குழந்தைங்க, பொம்பளைங்க, கிழவிங்க, கிழவனுங்க எல்லாரையும் அடிக்கறான்."

"இதென்ன கனவா, நிஜமா."

அந்த இளைஞன் நம்பமுடியாமல் கேட்டான்.

"என்னிக்கோ நடந்த நிஜம். எனக்கு கனவா வந்து சொல்லியிருக்காங்க. நான் உனக்கு அது நனவா சொல்றேன். புரியுதா."

இளைஞன் மலங்க மலங்க விழித்தான்.

"உள்ள தேடறாங்க. எங்கடி, எங்கடி இவதானே இந்த ஊர் தலைவனோட பொண்டாட்டி அப்படின்னு தேடறாங்க. இவபோய் கிணத்துக்குள்ள இறங்கிக்கறா. உறை கிணறு.

உறை கிணறுன்னா உனக்குத் தெரியுமா."

அந்த இளைஞன் மீண்டும் விழித்தான்.

"கிணறுபத்தி ஒண்ணும் தெரியலை. நீயெல்லாம் என்னாத்துக்கு பில்டிங் காண்ட்ராக்டரா இருக்கற. கிணத்தினுடைய பக்கவாட்டுல தோண்டியிருப்பாங்க. தோண்டிகிட்டே போய் அடுத்த கிணறுக்கு போயிடுவாங்க. இந்தக் கிணறுல ஜலமில்லைன்னா அந்தக் கிணத்துலேர்ந்து ஜலம் வரும். உள்ளுக்குள்ளேயிருந்து ஊறும். கிணத்துல எப்போவும் தண்ணி இருக்கும். வெளியூர் ஆளுங்க தன்னை தேடறதைப் பார்த்துட்டு கிணத்துல குதிச்சு உறைக்குள்ள போயிட்டாங்க அந்தம்மா. உள்ள இறங்கியிருக்காங்கன்னு தெரிஞ்சு ஆளுங்க இறங்க ட்ரை பண்ணியிருக்காங்க. ஆனா, உறை ஒரே இருட்டு. ஒண்ணும் தெரியலை. உள்ள போறதுக்கும் பயம். இவங்க மேல வந்துட்டாங்க. பாறைய கொண்டாந்து கிணத்துல போட்டு ஜலத்தை மேல தூக்கிடலாம்னு ஒருத்தன் ஐடியா சொன்னான். ஆனா, அந்த ஊர்ல பாறையே இல்லை. என்னா பண்றது. எல்லார் வீட்லயும் அம்மி குழவின்னு உரலு இருந்தது. அதைக் கொண்டாந்து தடோர் தடோர் தடோர்னு கிணத்துல போட்டாங்க. கொஞ்சம் கொஞ்சமா தண்ணி மேல ஏறுச்சு. பத்து நாள் தண்ணிக்குள்ளயே இருந்த அம்மா. தண்ணி மேலேற மேலேற மூச்சுத் திணறி செத்துப்போச்சு. நான் செத்தாலும் இந்த ஊரை காப்பாத்துவேண்டான்னு இந்த ஊர்ல காவல் தெய்வமா நின்னுடுச்சு. இது அதனுடைய இடம். அது வாழ்ந்த பூமி. அவங்க மாளிகை இருந்த இடம்தான் பெருமாள் கோயில். அவ வீட்டு கொல்லைப்புறமும், கிணறும்தான் அது இப்போ இருக்கற கோயில். செத்தபிறகு அந்த ஊர் ஜனங்க எல்லாரும் சேர்ந்து ஒரு நடுகல் நட்டாங்க. அதுதான் இன்னிக்கும் நமக்கு தெய்வமா இருக்கு. அந்த நாகர்தான் அது கடைசியா பூமியில சம்மணமிட்டு உட்கார்ந்த இடம். வடக்கு பார்த்து உட்கார்ந்திருக்கு. போயிட்டுவரேன்னு ஊருக்குச் சொல்லி கிணத்துல குதிச்சுடுச்சு. வடக்கு பார்த்து உட்கார்ந்த இடத்துல நாகர் வச்சுட்டாங்க.

இப்போ நான் வாங்கின இடம் இருக்கே. அந்த இடத்துலதான். அவளும், அவங்க வீட்டுக்காரரும் பெருசா பரணை குடிசை போட்டு தங்கியிருந்தது. பதினாலு வருஷம் அவங்க கூடலே செய்யலை. ஏன்னா, அவ வீட்டுப்புருஷனுக்கு நிறைய வேலை. வந்து தங்கினா அது கூடல் இருக்கக்கூடாத நாளு. அதனால அந்தப் பரணையில வெறுமன தலையை தடவி, முதுகுதடவி படுத்து தூங்கியிருக்காங்க. அந்தம்மா குறைஞ்சபட்ச சந்தோஷமா இருந்தது அந்த இடம்தான்.

இப்போவும் அந்த இடத்துலதான் அந்தம்மா சுத்தி சுத்தி வருது. ராவுல வந்து தங்குது. அந்த இடத்துல கட்டிடம் கட்ட முடியுமா. முடியாது. ஒரு கல்லுகூட நடமுடியாது."

"அப்போ அந்த இடம்."

"எப்போவுமே அப்படித்தான் இருக்கணும்."

"வீடு முன்னாடி இருந்திருக்கே."

"இதே மாதிரி கனவு வந்த ஒருத்தர் உனக்கு கோயில் கட்டறேன்னு ஆரம்பிச்சு அப்புறம் பொண்டாட்டி பேச்சை கேட்டு வீடு கட்டி உட்கார்ந்தான். ஆறுமாசத்துல இந்த அம்மா வீட்டினுடைய நிலைக்கதவை பிடுங்கி போட்டாங்க. வேறுவிதமான தொந்தரவுகள் கொடுத்தாங்க. அதனாலதான் அந்த இடத்துல மறுபடியும் வேற எதுவும் முளைக்கலை. அவங்க வீடு. சிதறிப்போச்சு. அங்க ஒண்ணும் யாரும் பண்ணக்கூடாது. அது கோயில் இடம். கோயில் கட்டற இடம். உன்னால கோயில்கட்ட முடிஞ்சா கட்டு. இல்லை, விட்டுட்டு ஓடிப்போ."

"நிலம் உங்க பேர்ல இல்ல இருக்கு."

"இல்லை. கோயிலுக்கு எழுதி கொடுத்துடப்போறேன். என்னை எழுப்பி நடமாட வை தாயே. நான் எழுந்து இந்த நிலம் மொத்தமும் உன்னுதுன்னு கையெழுத்து போட்டுக் கொடுத்துடறேன்னு நான் கையெழுத்து போட்டு உண்டியல்ல போட்டு போயிடப்போறேன்."

"ரொம்ப வெறுத்துப் போயிட்டீங்களா."

"வெறுத்தெல்லாம் போகலய்யா. எனக்கு ஆத்தா கொடுப்போ. என் மூலமா என்னமோ நடத்தறா. நான் ஒரு தப்பு பண்ணேன். அதுக்கொரு அடி வாங்கறேன்."

"என்னை ஏமாத்தின அந்த ஜிப்பாக்காரன் நல்லாதான் இருக்கான். அவனுக்கு ஒரு கெடுதலும் ஆவலையே."

"ஆகும் பார். அவ இடத்தை விக்கறதோ, வாங்கறதோ எவன் முயற்சி பண்ணாலும் ஆகும் பார்."

"அந்த வேளச்சேரியில கார் ஷெட் வச்சருக்கானே அவனும் நல்லாதான் இருக்கான்."

"ஆகும் பார்."

"டாக்டர் என்ன சொல்றாங்க."

"மூணுமாசத்துல எழுந்து நடமாடுவேன்னு சொல்றாங்க. நான் தினம்தோறும் ஆத்தாவோட பேசிட்டிருக்கேன்."

"நிலத்தை விக்காத வேற எதுனா செய்தா என்ன."

"வேற என்ன செய்யறது."

"கோயில் கட்டினா."

அந்த இளைஞன் கேட்டான்.

"கூட சேர்ந்துக்கறயா. கோயில் கட்டலாம்."

"கோயில் கட்டறதுக்கு துட்டு வேணுமே."

"ஆத்தா கொடுப்பாடா. நீ பெரிய பில்டிங் காண்ட்ராக்டரோட தம்பியா இருந்தாலும் வேலை தெரியலை. என்கூட சேரு. நான் வேலை கத்துத்தரேன். விதம்விதமா பில்டிங் கட்டறதுக்கு நான் கத்துத்தரேன். என்கூட சேருவேன்னு கையெழுத்து போட்டு பார்ட்னர்ஷிப்பா பேப்பர் எடுத்துகிட்டு வா. நாம ரெண்டு பேரும் கையெழுத்து போடுவோம். கொண்டு போய் ஆத்தாமடியில வச்சு உனக்கு கோயில் கட்டறேன். எனக்கு காசு கொடு அப்படின்னு கேளு. தருவோ."

"எனக்கு இது பிடிச்சுருக்கு. நான் உங்களோட ஜாயின் பண்றேன்."

அவன் கை நீட்டினான். அந்த மோட்டர்சைக்கிள் காண்ட்ராக்டர் அந்த இளைஞனின் கையை இறுகப்பிடித்துக் கொண்டான்.

ஆயிரம்கண்ணி சிரித்தாள். ஒரே குதூகலத்துடன் உடம்பை சிலிர்த்தாள். மூன்று நாலு மாலைகள் ஒன்று சேர சரிந்து கீழே விழுந்தன.

"அந்த ஜோசியக்காரன் சொன்னது சரியாயிடுத்துய்யா."

"இதுல என்ன ஓய் அவமானம். அவா ரெண்டு பேரும் சேர்ந்து ஏதோ கோயில் காரியம் பண்ணியிருக்கா."

"இல்லை. அதை எங்கிட்ட சொல்லிட்டு பண்ணியிருக்கலாமில்ல."

காமாட்சியின் அப்பா நண்பரிடம் பொறுமலோடு பேசினார்.

கிளப்பில் ஆறேழு நண்பர்கள் சீட்டாட இவர்கள் வேறிடத்தில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள்.

"ரிடையர் ஆயிட்டு என்ன பண்றதுன்னு தெரியலை. அதுவும் வாலண்டியர் ரிடையர்மெண்ட்டும் வாங்கி சோம்பேறித்தனமா வீட்ல உட்கார்ந்துண்டிருக்கறது. இங்க வந்து காசு கொடுத்து வத்தக்கொழம்பு சாதமும், சுட்ட அப்பளமும் வாங்கிக்கறது. தின்னுட்டு சீட்டு ஆடறது. இவனைப்பத்தி அவளைப்பத்தி ஏதாவது பேசிண்டிருக்கறது. ஊர் வம்பு அரசியல் அக்கப்போர். ஏதாவது பிரயோஜனம் உண்டா வாழ்க்கையில."

அந்த இடத்தை வாடகைக்குக் கொடுத்தவர் அலுத்துக் கொண்டார்.

"என்னமோ மனமகிழ் மன்றம்னு சொன்னா. சரி வயசானவா ஒண்ணா சேர்ந்திருக்காளே உருப்படியா ஏதாவது பண்ணுவாங்கன்னு பார்த்தாக்க கடைசியில சீட்டாட்ட க்ளப். காலி பண்ணுன்னா. லா பாயிண்ட் பேசறான். வக்கீல் நோட்டீஸ் அனுப்பறான். நன்னாவே இல்லை. இந்தக்

கிழவனுங்க பண்றது."

காலில் குத்திய முள் உள்ளே போய்விட்டது போல ஒரு உறுத்தல் அவருக்கு ஒவ்வொருநாளும் இவர்களைப் பார்க்கும்போது இருந்தது.

"ஜாதகம் பொருந்தியிருக்குங்கற இடத்தையே உன் பொண்ணு பார்த்து பேசியிருக்கா அவ்ளோதானடா. உன் பொண்டாட்டி சுவாமிக்கு முன்னால பூ போட்டு அவளும் ஓகேன்னு சொல்லிட்டா. இப்போ உனக்கு வசதியா இல்ல போச்சு."

"என்ன வசதி."

"உன் புள்ளதான் லவ் பண்றானேன்னு சொல்லிட்டு பத்து சவரன் நகைதான் போடுவேன்னு சொல்லு. அவங்க வீட்ல என்ன பண்றாங்கன்னு பார்ப்போம். சிம்பிளா கல்யாணம் முடிப்பேன்னு சொல்லு. காசை மிச்சப்படுத்திக்கோ. ஆறு லட்சரூபா, ஏழு லட்சரூபான்னு செலவு பண்ணாத."

"இல்லையே. என் வீட்டுக்காரி கேட்கமாட்டாளே."

"வாயை மூடிண்டு இருக்கச்சொல்லு. பிள்ளை வீட்ல வந்து பேசவா இல்ல. எட்டு பவுன் போடறேன். இல்ல, ஒன்பது பவுன் போடறேன். நீங்க அவசியமா கேட்டா பத்து போடறேன்னு சொல்லு"

"இல்லைடா.. அம்பது பவுன் வீட்ல இருக்கு."

"இருக்கட்டுமே. அப்புறம் போறவர போட்டுக்கலாமே. ஒரு ஜாதகம் பொருந்தினாப்போலவும் ஆச்சு. சாமி சம்மதம் கொடுத்தாப்போலவும் ஆச்சு. கல்யாணம் நடந்தாப்போலவும் ஆச்சு. பையன் லவ் பண்றான் அப்படின்னே சொல்லி சிக்கனமா முடிச்சுடு."

"எனக்கொரு பிரெஸ்டீஜ் இருக்கே."

"பொண்ணு கல்யாணத்துல ஏன் இப்படி பண்ற."

"நீ சொல்றதும் ஒரு பாயிண்ட்தான்."

காமாட்சியை பெண் பார்க்க வந்து அப்பா பேசியதைக் கேட்டு காமாட்சி அதிர்ந்தாள். சத்யா அதிர்ந்தான். சத்யாவின் வீடு கலவரப்பட்டது.

"என்னடா தெக்கத்திக் கள்ளனா இருக்கான். இவங்கிட்ட போய் நன்னாயில்லையேடா. நீ லவ் பண்ற, நீ லவ் பண்றேன்னு சொல்றான். நீ லவ் பண்ணியாடா. என்னத்துக்கு இந்த அசிங்கம்."

அம்மா சீறினாள்.

"இல்லைம்மா. அவர் தந்திரமா பேசறார். அது தப்பு. பாவத்தின் சம்பளம் மரணம். தந்திரத்தின் சம்பளம் அவமானம். அவர் அவமானப்படப்போறார் பார். அசிங்கப்படப்போறார். அதனாலதான் அப்படி பேசறார். நாங்க எந்த தப்பும் பண்ணலை

கோவில் காரியத்துக்கு ஒண்ணா சேர்ந்துண்டோம். அவ்வளவுதான்."

"யாருக்குத் தெரியும். ஊர்ல இருக்கறவன் சொன்னா நம்புவானா. தலைமுடி வெட்டிக்கற இடத்துல கேட்கறான். உங்கப் பொண்ண அந்தப்பையனோட பார்த்தனே. அவங்க ரெண்டு பேருக்கும் என்னா லவ்வான்னு கேட்கறான். நான் எங்க போய் என் முகத்தை வச்சுக்கறது."

சத்யாவின் அப்பா பேசினார்.

சத்யாவும், காமாட்சியும் மறுபடியும் கோவிலில் நின்று பேசினார்கள். சீனுவாசனிடம் ஆலோசனை கேட்டார்கள்.

சீனுவாசன் மோகனசுந்தரத்தை கூப்பிட்டார்.

"இவங்க கல்யாணத்தை கோயில்ல நடத்தினா என்ன. சட்டப்படி ஏதாவது சிக்கல் வருமா."

"ஒண்ணும் வராது. ரெண்டுபேரும் மேஜர். ரிஜிஸ்டர் மேரேஜ் பண்ணிகிட்டு வந்துட்டாங்கன்னா தாலி நான் எடுத்து கொடுக்கலாம். நீங்க எடுத்து கொடுக்கலாம். இந்தக் கோயில்லயே ஜம்முனு கல்யாணம் பண்ணலாம். ஆயிரத் ஐநூறு ரூபா கட்டினா ஏழைங்களுக்கு சாப்பாடு போடலாம்."

"நீ பண்ணிடறா சத்யா. உங்கப்பா பண்றது அநியாயம்."

சீனுவாசன் சீறலாய் பேசினார்.

"இதனால எங்க வாழ்க்கை பாதிக்குமா."

"பாதிக்காது. ஆயிரங்கண்ணி முன்னாடி நீ தாலிகட்டி குடித்தனம் பண்ணப்போற. நிச்சயமா பாதிக்காது."

"எப்போ கல்யாணம் வச்சுக்கலாம்."

"மூணு மாசம் சைலண்ட்டா இரு. உங்க ரெண்டு பேருக்குள்ளேயும் இந்த நட்பு திடமா இருக்கான்னு பார். ரிஜிஸ்டர் மேரேஜுக்கு அப்ளை பண்ணி எழுதிப்போட்டுடு. அவங்க கூப்பிடறபோது போய் கையெழுத்து போட்டு ரிஜிஸ்டர் மேரேஜ் பண்ணிக்கலாம். தாலி கட்டறதை கோவில்ல ஜாம் ஜாம்னு நடத்திடலாம்."

மழைக்காலம் துவங்கியது. இந்தமுறை ஒன்று மில்லாதபடி பேயாய் மழை கொட்டியது. ரெண்டு வருஷமா மழை இல்லை இல்ல. அதான் இந்த வருஷம் பிச்சு உதறுது. ஜனங்கள் திணறிக்கொண்டே பேசினார்கள்.

தூர்வாராத இடங்களெல்லாம் அடைத்துக் கொண்டது. மக்களே அவசர அவசரமாக தூர் வாரினார்கள்.

பொம்மைகளையெல்லாம் சிமெண்ட்டில் வெங்கடேசன் செய்துவிட்டிருந்தான். எல்லாவற்றையும் கோபுரத்தில் பொருத்தி விட்டிருந்தான்.

"நல்ல மழை. இது நல்லது. சிமெண்ட் இறுகும். தண்ணி உள்ள போய் சிமெண்ட் அடர்த்தியாயிடும். மழைவிட்டபிறகு பெயிண்ட்டிங்ல இறங்கிடலாம்."

"இதை மட்டும் ஏண்டா கீழ வச்சுருக்க."

மஹாவிஷ்ணு ஆதிசேஷனில் படுத்திருக்கும் சிலையைக் காட்டி சீனுவாசன் கேட்டார்.

"ரொம்ப நல்லா வந்திருக்கு. ரொம்ப நல்லா வந்திருக்குன்னு ஆரம்பத்துலேர்ந்து சொல்லி கிட்டிருந்தீங்களா அதனாலதான் இதை மட்டும் கீழ வச்சு வர்ணம் அடிச்சு பார்த்தேன். சிமெண்ட்டை நல்லா உள்ள இழுக்குது. ரெண்டாவது கோட் கொடுத்தாலும் வர்ணம் கொஞ்சம் மங்கிதான் இருக்கு. சிமெண்ட் நீர் உள்வாங்கிடுச்சுன்னா வர்ணத்தை உள்வாங்காது. அதனாலதான் மழையில நனைஞ்சு வெய்யில்ல காயட்டும்னு சிமெண்ட்டாவே வச்சுட்டேன். இது வர்ண சோதனைக்காக வச்சுருந்த பொம்மை."

"ரொம்ப அழகா பண்ணியிருக்கடா."

"ஒரு பொம்மைக்கு நூறுரூபா தாங்குமா."

"டேய்.. தப்புடா. நான் பேசினது தப்பு. பொம்மைக்கு விலையே இல்லைடா. இப்போ இது கொடுக்கற சந்தோஷத்துக்கு எல்லையே இல்லை. இதைக்கொண்டு போய் மேல வைக்கப் போறேன்னா எனக்கு மனசே ஆகமாட்டேங்கறதுடா. தினம் இதனோட பக்கத்துல உட்கார்ந்துக்கணும் போல தோன்றது. மஹாவிஷ்ணு காலை பிடிச்சுக்கணும்போல இருக்கு. இவர் உடம்பெல்லாம் தடவி விடணும்போல இருக்கு. எங்க குருநாதர் ஞாபகம் வருதுடா. இதை மேல வைக்காம இங்கயே ஏதாவது கீழ வைக்கலாமா."

சீனுவாசன் அந்தச் சிலைக்கு அருகே உட்கார்ந்து அதை நெருக்கமாக அணைத்துக் கொண்டார்.

"இருங்க.. இருங்க.. அப்படியே இருங்க."

வெங்கடேஷ் ஓடிப்போய் தன் மஞ்சள் பையிலிருந்து கேமராவை எடுத்து வந்து அவரை கோணம் பார்த்து போட்டோ எடுத்தான்.

"உள்ள இருக்கற விதானத்துக்கு மட்டும் பெயிண்டிங் ஆரம்பிச்சுடறயா. மழை ஒண்ணும் தொந்தரவு பண்ணாது."

"ஏன், மழைக்கு அப்புறமே ஆரம்பிச்சிடலாமே."

"இல்லைடா. ஒரு கல்யாணம் நடக்கப்போறது. தூணெல்லாம் பளபளன்னு இருந்தா கல்யாணமும் நன்னாயிருக்குமில்லை."

"யாரு.. ஒரு பொண்ணும், பையனும் மேல வந்தாங்களே அவங்கதானே."

"ஆமாம்."

"உனக்கெப்படி தெரியும்."

"கேள்விப்பட்டேனே. அவங்க வீட்ல கசமுசா ஆயிப்போச்சாம். பொண்ணைப் பெத்தவன் அல்பத்தனமா பேசறானாம். பையன் ரொம்ப நல்ல பையங்க. வெகுளியான பையன். அந்தப் பொண்ணு ரொம்ப நியாயமான பொண்ணு. பிரிச்சுடறமாதிரி இருந்தாங்களாமே."

"ஆத்தா விடமாட்டாடா. உள்ள பெய்ண்டிங் ஆரம்பிச்சுடு."

"ஆரம்பிச்சிடலாம். இவராண்ட போய் எப்படி காசு கேட்கறது."

"வேணா என்னுடைய சேவிங்லேர்ந்து நான் கொடுக்கறேன். அப்புறம் அவுங்கிட்ட வாங்கிக்கலாம்."

"நீங்க என்னாத்துக்கு காசு போடறீங்க."

"வேற எப்படிடா.. பெயிண்டிங் பண்ணணுமே."

"சரி கொடுங்க. நான் வாங்கிக் கொடுத்துடறேன். நான் உங்ககிட்ட கடன் வாங்கினதா இருக்கட்டும்."

பன்னிரெண்டாயிரம் ரூபாய் வர்ணத்திற்கென்று வெங்கடேஷ் அவரிடம் காசு வாங்கிக் கொண்டான்.

"உன் வேலைக்கு காசே கொடுக்கலை போலிருக்கேடா."

"அப்போ கொடுத்த பத்தாயிரம்தான். அவ கொடுப்பா. கவலைப்படாதீங்க."

"என்ன ஒரு அலட்சியமா சொல்ற."

"அலட்சியமா சொல்லலை. அன்புனால ஈர்க்கப்பட்டு சொல்றேன். இந்த இடமே எனக்கு பிடிச்சுருக்கு. இந்தக் கோயிலே பிடிச்சுருக்கு. இந்தக் கோயில்ல இருக்கற நிறைய மனுஷாள் பிடிச்சுருக்கு. பொம்மையெல்லாம் அற்புதமா வருது. ஒரு இடத்துல பொம்மை சரியா வந்தா அந்த இடத்துல தெய்வம் சரியா இருக்குன்னு அர்த்தம்."

"வாங்க.. வாங்க.. வாங்க."

மோகனசுந்தரம் அந்த மோட்டார் சைக்கிள் காண்ட்ராக்டரை கைகொடுத்து வரவேற்றார்.

இடுப்பில் பெல்ட்கட்டி, கழுத்தில் காலர் மாட்டி கையில் தடி ஊன்றி அவன் கோவிலுக்குள் நிதானமாக நுழைந்தான்.

"நீங்க முதலியாருங்களா."

காண்ட்ராக்ட்காரன் மோகனசுந்தரத்தைப் பார்த்துக் கேட்டான்.

"உங்க பொண்ணுக்கு வரன் பார்த்துகிட்டிருக்கீங்களா."

"ஒரு வருஷமா பார்த்துகிட்டிருக்கேன்."

"சுபயோகம் புஸ்தகத்துல போட்டிருந்தீங்க போல."

"ஆமாம் அங்கேயும் அனுப்பியிருக்காங்க எங்க வீட்ல."

"சுபயோகம் புஸ்தகம் மூலமா எங்களுக்கு வந்தது. மோகனசுந்தரம் நிர்வாகஅதிகாரி. பொண்ணு பேர் ஜீவா. சரிதானே."

"சரிதான். உங்க வீட்ல யாரு."

"என் தம்பி. அவன் சிவில் இன்ஜினியரிங் படிச்சவன். நான் படிக்காத சிவில் இன்ஜீனியர். பெண் பார்க்கலாங்களா."

"சரி பார்க்கலாம்." என்று தலையசைத்துவிட்டுச் சென்றார் மோகனசுந்தரம்.

"ஜாதகம் பார்க்கப்போனதே தப்பு. அவ சரின்னு சொல்லிட்டா. அதுக்கப்புறம் கல்யாணத்தை நடத்த வேண்டியதுதான். இவ்ளோதான் தருவேன். அவ்ளோதான் தருவேன்னு வேணும்னாலும் பேசினா, எல்லாம் அந்த மனமகிழ் மன்றம், அங்க போய் கிழட்டு நாய்ங்களோட பேசறது. அவங்க ஏத்தி விடறாங்க. இங்க வந்து பேயாட்டம் ஆடறது. அப்பாவை அடக்க உனக்கு துப்பில்லை."

"நான் ஏம்மா அடக்கணும். ஆயிரங்கண்ணி அடக்குவோ."

"நீ இத்தனை சப்போர்ட் பண்ணி பேசறதால சொல்றேன்."

"உன் பொண்ணு க்ல்யாணம் கோவில்ல நடக்கப்போறது வறயா."

"என்னடா."

"நாளைக்கு கார்த்தால. ஏழுலேர்ந்து ஏழரைக்குள்ள."

"என்னடா நீ பாட்டுக்கு தடுக்குனு பேசற. நேரம் காலம் பார்க்க வேண்டாமா."

"தாமு பார்த்து கொடுத்த நேரம்."

"யாருடா தாமு."

"உள்ள நுழைஞ்சவுடனே இந்தப் பையனோடதான் கல்யாணமாகும்னு சொன்னாரே அந்தத் தாமு."

"என்னமோ ரியல் எஸ்டேட் பிஸினஸ் பண்றவர்னு சொன்னியே. அவர்கிட்டயெல்லாம் எப்படிடா கேட்கறது. நல்ல ஜோசியர்கிட்ட கேட்போமேடா."

"அப்போ கல்யாணத்துக்கு ஒத்துக்கறியா."

"நான்.. நேரம் காலம்."

"தாமுவைவிட பிரமாதமான ஜோசியர் யாருமில்லை. என் ஃப்ரெண்ட் தாமு. ஜோசியருக்கெல்லாம் ஜோசியர். அவர்

வாக்கு சகாதேவன் வாக்கு. சொன்னா சொன்னதுதான்."

"உனக்கு எப்போ குழந்தை பிறக்கும். கேட்டுண்டியா."

"அப்பாவைவிட்டு தள்ளியிரு. அதுதான் உனக்கு நல்லது அப்படினுட்டான். அப்பாவைவிட்டு தள்ளியிருந்தாதான் உன் பொண்டாட்டிக்கு கர்ப்பம் வரும்னே சொல்லிட்டான். அப்பா அவ்ளோ கொடுமைக்காரர் இல்லை. நச்சரிப்பு. பிடுங்கல். ஐயோ காசே கையவிட்டுப் போறியேன்னு ஒரு இடையறாத திருட்டுத்தனம். தந்திரம். மட்டபுத்தி."

"அப்பாவை இப்படியெல்லாம் சொல்லாதடா."

"சம்மந்தி வீட்ல தெறகத்திக்கள்ளன்னு சொன்னா. சரியான வார்த்தை அதுதான்."

"என்ன வார்த்தைன்னு எனக்கு புரியலையே."

"சாப்பாடு போட்ட வீட்ல கன்னம் வைப்பானாம். தெறகத்தி பக்கத்துல இருக்கற திருடர்கள்."

"நான் எதுவோ ஜாதியை சொல்றயோன்னு நினைச்சேன்."

"ஐய்யய்யோ நான் ஏம்மா ஜாதியை சொல்றேன். ஜாதியெல்லாம் இல்லை. தெற்க போகப்போக ஜனங்கள் தந்திரமா இருப்பா. அப்படி தந்திரமாக இருக்கிற திருடர்கள். அவ்ளோதான் அர்த்தம்."

"உங்கப்பாவுக்கு நன்னா வேணும். நீ கல்யாணத்தை முடி. நான் கோயிலுக்கு வராமாதிரி வந்துடறேன்."

"இன்டர்னெட்ல பொண்ணு போட்டோ மூணு அனுப்பினோம். பையன் ரொம்ப பிடிச்சுப்போச்சுன்னு சொல்லிட்டான். அவனுக்கு லீவு கிடைக்காதாம். இப்போ லீவு எடுத்து வந்தோம்னா கல்யாணத்துக்கு அஞ்சுநாள்தான் இருக்க முடியுமாம். அதனால அவன்இல்லாத நிச்சயதார்த்தத்தை முடிச்சிடலாம்னு சொல்றாங்க. உங்களுக்கு சம்மதமா. இது பையன் போட்டோ."

மோட்டார் சைக்கிள் காண்ட்ராக்டர் ஆல்பத்தை நீட்டினார்.

மோகனசுந்தரம் வாங்கி ஆல்பத்தை கண்ணில் ஒற்றிக் கொண்டார்.

"பையன் நல்லாயிருக்கான்யா."

"முடிச்சிடுங்க."

"எனக்கொரு ஃப்ரெண்ட் இருக்கார் ஸார். அவர்கிட்ட படத்தையும், பையன் ஜாதகத்தையும் காண்பிக்கலாம்."

சத்யா வாங்கிக்கொண்டு போனான்.

"பையன் இப்பவே ஓஹோன்னு இருக்கானாம். பொண்ணு வந்தவேளை இன்னும் ஓஹோன்னு இருப்பானாம்.

இந்தப்பக்கமே வராத வெளிநாடுன்னே சுத்திண்டிருப்பாணாம். பையனுக்கு சீக்கிரம் கல்யாணம் பண்றது நல்லதுன்னே சொன்னாங்க."

"எதுனா கெட்டபழக்கம் வந்துடுமா."

மோகனசுந்தரம் பயந்தபடியே கேட்டார்.

"இல்லை. ரொம்ப ஏங்கிபோயிருக்கான். நல்ல சாப்பாடே கிடைக்கலைன்னு தாமு சொன்னார்."

"ஆமாங்க நேத்துகூட போன்பண்ணி தம்பி இதுதான் சொல்லியிருக்கான். என் வொய்ஃப்புகிட்ட."

மோட்டார்சைக்கிள் காண்ட்ராக்டர் சந்தோஷமாகப் பேசினார்.

"அப்போ நாம நிச்சயதார்த்தம் முடிச்சிடுவோம்."

"எப்போ."

"ஏழிலிருந்து ஒன்பதரை நல்ல முகூர்த்தம். ஏழுலேர்ந்து ஏழரை அற்புதமான டைம். இந்தக்கல்யாணம் முடிச்ச கையோட நாம இங்க பாக்குவெத்தலை மாத்திப்போம். ஒரே இடத்துல முடிஞ்சுடட்டும்."

"சாப்பாடு ஒண்ணும் போடவேணாமா."

மோகனசுந்தரம் கவலையோடு கேட்டார்.

"அதெல்லாம் கல்யாணத்துல வச்சுக்கோங்க. நிச்சயதார்த்தத்துக்கெல்லாம் துட்டு செலவு பண்ணிகிட்டிருந்தா சரியா வருமா."

"இல்லை. நீங்க பெரிய பணக்காரர். நான் ஒண்ணுமில்லாதவன். உங்களுக்கு ஏத்தபடியா நிச்சயதார்த்தமாவது செய்யணுமில்ல."

"நான் ஒண்ணும் பணக்காரன் இல்லை. இருக்கற துட்டையெல்லாம் நிலத்துல போட்டேன். அந்த நிலம் இப்போ ஆத்தாளுக்கு சொந்தம்."

"என்னா சொல்றீங்க."

"நாளைக்கு சொல்றேங்க. மழை மட்டும் விடமாட்டேன்னுதே. மழை விட்டா நல்லாயிருக்கும்."

அன்று மாலை மழை பலத்துப்பெய்தது.

வேளச்சேரிக்குள் கேரேஜ் ஆள் பாதி ரிப்பேர் செய்து வைத்திருந்த, முழுவதும் ரிப்பேர் செய்து வைத்திருந்த கார்களில் தண்ணீர் ஏறியது.

"என்னாங்க இது. ஊர்ல இருக்கற எல்லாத்தண்ணியும் நம்ம இடத்துக்கு வருது."

"இது பள்ளமான ஏரியா. குட்டை. ஏரி. இந்த இடத்துல நிலத்தை வாங்கிட்டு இங்க தண்ணி வருதுன்னா வெய்ய

நாள்ல தண்ணி வராது. மழை நாள்ல தண்ணி வரும். நீங்க ஷெட் போட்டா தண்ணி வரக்கூடாதுன்னு ஏதாவது உண்டா."

"கல்லு போட்டு தடுத்துடலாமா."

"எதை போட்டு தடுத்தாலும் இந்த இடத்துல ஒரு ஆள் ஆழம் தண்ணி இருக்கத்தான் செய்யும். மூணுமாசம் நிக்கும்."

சகலத்தையும் விட்டுவிட்டு கரையேறினான்.

அவன் கண்ணெதிரே கொட்டகை சரிந்தது.

வாகனங்கள் உருண்டன. பித்துப்பிடித்தவன்போல் அவன் அழத்துவங்கினான்.

அந்த நிலத்தை மீண்டும் வாங்கத்துடித்த அந்த ஆளின் மனைவி தூங்கி கொண்டிருந்தவள் திடுக்கிட்டு எழுந்தாள்.

இடிஇடித்து காக்கைகள் சிதறிப்பறந்தன. மழை தொடர்ந்து பெய்தது.

"ஏங்க அந்த இடம் வேணாம்.. அந்த இடம் வேணாம்."

அவள் புடவை தழைய படுக்கையறையிலிருந்து வெளியே வந்தாள்.

"என்னாடி... என்னா வேணும்."

உட்கார்ந்து குடித்துக் கொண்டிருந்தவன் எழுந்து நின்று மனைவியை தடுத்து நிறுத்தினான்.

"நாம ஒரு இடம் வாங்கலாம்னு சொன்னமே. அந்த மோட்டர்சைக்கிள் காண்ட்ராக்டரை பிடிச்சுடலாம்னு சொன்னமே அந்த இடம் வேணாம்."

"ஏன்."

"ஒரே கெட்ட கனவா வருது. நம்மை ஏமாத்தின ஆளு நம்ம தலையில கல்லை மாத்தி மாத்தி தூக்கித்தூக்கி போடறான். நாம ஒரு பள்ளத்துல இருக்கறோம். இந்தப்பக்கமும் அந்தப் பக்கமும் ஓடறோம். மேல எல்லாம் கல்லு விழுது. மழை பெய்யுது. இடி இடிக்குது. பூமி அப்படியே கொஞ்சம் கொஞ்சமா நம்மை மூடிக்க ஆரம்பிக்குது. நாம கெஞ்சறோம். விட்டுடு விட்டுன்னு கெஞ்சறோம். பையன் கல்லு போடறத நிறுத்திட்டு நம்மளையே பார்த்துகிட்டிருக்கான். அவன் நினைச்சா நம்மள காப்பாத்தலாம். எனக்கு கனவு கலைஞ்சு போச்சு. நான் பள்ளத்துல இருக்கேன். அவன் மேலிருந்து என்னை பார்த்துகிட்டிருக்கான். கெஞ்சறேன். கண்ணால கெஞ்சறேன்."

"என்னாடி இது. என்னென்னமோ கனவு கண்டுட்டு வியாபாரத்தை கெடுக்கற."

"என்னா வியாபாரம். வேற எங்கேயாவது வாங்கி வேற ஏதாவது விக்கலாம். அந்தப்பையனை ஏமாத்தி நமக்கு

என்னாத்துக்கு."

"சரி. அந்த இடம் வேணாம்."

"அந்தப் பையனை ஏமாத்தறது தப்பு. வேற எதுனா பண்ணணும்."

"கடலாடி வினாயகர் கோயில் தெருவுல ஒரு சந்து வீடு ஒண்ணு விலைக்கு வருதாம். பிடிச்சுகிடிச்சு கட்டினோம்னா, நல்லா வரும்னு சொல்றாங்க. அந்த இடம் பிடிங்க. இந்த இடம் வேணாம். அந்தப் பையனை எங்கேயாவது பார்த்தா அஞ்சு ரூபாயோ, ஆறு ரூபாயோ திருப்பி கொடுத்துடுங்க."

"பத்து ரூபா லாபம்டி. அத்தனையும் திருப்பித்தர முடியாதுல்ல."

"ஆறு ரூபாயாவது திருப்பி கொடுத்துடலாம். பையன் பார்க்கறதுக்கு கடவுள் பார்க்கறமாதிரி இருந்தது. கண்ணு இந்த ஆயிரங்கண்ணி விக்ரஹத்து கண்ணுபோலயே இருந்தது."

"எதையோ பார்த்து பயந்துட்டா. காலையில கோயிலுக்கு போகலாமா."

"போயிடலாம். சீக்கிரமே குளிச்சுட்டு சீக்கிரமே போயிடலாம்."

"மழை விடணுமே."

"காலையில விட்டுடும்."

மழை தொடர்ந்து பலத்துப் பெய்தது.

"உம்ம பொண்ணுக்கும் அந்தப் பையனுக்கும் கோயில்ல கல்யாணமாம். பேசிண்டா. உங்களுக்குத் தெரியாதா."

"அப்படியா தெரியாதே."

காலையில் வாக்கிங் போகும்போது அவர் நண்பர்கள் சொன்னார்கள். மழை விட்டிருந்தது. ஊர் முழுவதும் துடைத்து விட்டதுபோல சுத்தமாக இருந்தது. மரங்களிலிருந்து நீர் சொட்டிக் கொண்டிருந்தது. காக்கைகள் தலையை சிலுப்பி உடம்பிலிருந்து நீரை வெளியேற்றிக் கொண்டிருந்தன.

"ஏழரை ஒன்பதரை முகூர்த்தம்னு சொன்னா."

"அப்படியா இப்பவே போறேன்."

அவர் திரும்பினார்.

"வீட்டில் யாரும் இல்லை."

"கோயிலுக்கு போகலாமா."

"இப்பவே போகவேண்டாம்."

மணி ஆறே முக்கால் தாண்டியிருந்தது.

வேகமாக உடைகளை கழற்றி குளித்தார். இடுப்பில் துண்டு கட்டிக் கொண்டார்.

வாசலில் அழைப்பு மணியின் சத்தம் கேட்டது.

"இதோ வந்துட்டேன்."

வேகமாக நடந்தார்.

தரையில் ஒரு சொட்டு எண்ணெய் சிந்தியிருந்தது. அந்த எண்ணெயில் குதிகால் அழுந்தப்பட்டது. அழுந்தியதும் வழுக்கியது.

அவர் இரண்டு கைகளையும் விரித்துக்கொண்டு பதினைந்து அடி தரையில் சறுக்கி கதவில் இடித்து படேரென்று மல்லாக்க சாய்ந்தார்.

தலை பின்பக்கம் தரையில் மோதியது. அவர் எழுந்து நின்றார். நிற்க முடியவில்லை. இடுப்பு, கழுத்து, முதுகு எல்லாம் வலித்தது. மறுபடியும் குனிந்து துண்டு எடுக்க முடியவில்லை.

அப்படியே நிர்வாணமாக சோஃபாவில் உட்கார்ந்தார். மறுபடியும் யாரோ அழைப்பு மணி அடித்தார்கள். அவரால் எழுந்திருக்க முடியவில்லை. மெல்ல கண்மூடி மயக்கமானார்.

"கடைசிபட்சம் அப்பாவுக்கு ஒரு வார்த்தை சொல்லிடலாமே."

சத்யாவின் அம்மா சொல்ல மூன்றுபேர் அவரைக்கூப்பிடப் போனார்கள். மணியடித்தார்கள். பத்து நிமிடம் மணி அடித்தும் அவர் திறக்கவில்லை என்பதால் திரும்பி வந்தார்கள்.

"வீடு பூட்டியிருக்குன்னு நினைக்கறேன். வாக் போனவர் வரவேயில்லையாம். பக்கத்துவீட்ல சொன்னாங்க."

கெட்டிமேளம் கொட்டியது. கோவில்மணி அசைந்தது. கற்பூரதீபம் காட்டப்பட்டது. கற்பூரதீபம் காட்டியதும் அதை ஒத்திக்கொண்டார்கள். மறுபடியும் கெட்டிமேளமும் நாதஸ்வரமும் பலக்க வாசிக்கப்பட்டது. சுற்றியுள்ள பத்துப் பதினைந்துபேர் அட்சதைபோட சத்யா காமாட்சியின் கழுத்தில் தாலி கட்டினான்.

"பத்து பவுன் போடவேண்டாம். உன் கழுத்துல எவ்வளவும்மா இருக்கு இப்போ."

"நாலரை பவுன் செயின். ரெண்டரை பவுன் வளையல். ஒரு பவுன் மோதிரம்."

"பவுன் கம்மியாதான் போட்டிருக்கேன். எனக்கு ரொம்ப சந்தோஷம். காமாட்சி மாதிரி பொண்ணு கிடைக்கறதுக்கு ரொம்ப கொடுத்து வச்சுருக்கணும். மோகனசுந்தரம் இந்தப்புடவை, கொலுசு, மெட்டி இதெல்லாம் நாங்க வாங்கிக் கொடுத்தது. திருமாங்கல்யம் எங்களுது. அவ அப்பாகிட்ட சொல்லிடுங்கோ. நகையோடதான் பொண்ணு வரணும்னு நான் எதிர்பார்க்கலை. இந்தப் பெர்ண்ணு எங்கிட்ட

மரியாதையா அன்பா நடந்துண்டா போதும்."

சத்யாவின் அம்மா காமாட்சியை அணைத்து கொண்டாள். காமாட்சி நிமிர்ந்து மாமியாரைப் பார்த்தாள்.

"இனிமே எனக்கு நீங்கதான் அம்மா." என்று சொன்னாள்.

தொலைவிலிருந்த காமாட்சியின் அம்மா கண்களில் நீர் பொங்கி வழிந்தது. அவள் கைகூப்பி ஆயிரங்கண்ணியை நமஸ்கரித்தாள்.

"இந்தக் குழந்தை சௌக்கியமா இருந்தா அது போதும்."

காமாட்சியின் அண்ணன் அம்மாவை அணைத்துக் கொண்டான். காமாட்சியின் அண்ணி அந்த அம்மாவின் கைகளை பற்றிக் கொண்டாள்.

அவர்கள் கோவிலை வலம்வந்து வெளியேறினார்கள்.

"இருங்க.. அந்த நிலம் வாங்கின பத்திரங்க."

காலர் கழட்டப்படாத நிலையில் மோட்டர் சைக்கிள் காண்ட்ராக்ட்காரர். அந்த நிலப்பத்திரத்தை மோகன சுந்தரத்திடம் கொடுத்தார்.

"இதுல ஒரு லெட்டர் வச்சுருக்கேன். இந்த நிலத்தினுடைய பாத்தியதை முழுவதும் நான் மறுபடியும் ஆயிரம்கண்ணி கோவிலுக்கே சமர்ப்பிக்கிறேன். என்னபடியா அதை எழுதணுமோ அதை எழுதிக் கொடுத்தீங்கன்னா கையெழுத்து போட்டுடறேன்."

மோகனசுந்தரம் வாங்கி கண்ணில் ஒற்றிக் கொண்டார்.

"ஏங்க, அடுத்த ஃபங்ஷன் ஆரம்பிக்க வேணாமா."

"ஆரம்பிச்சுடலாமே."

மோகனசுந்தரம் மகள் ஜீவாவிற்கு தன் தம்பியை திருமணம் செய்து கொள்வதாய் நிச்சயித்து இன்னொரு கடிதம் சீனுவாசன் எழுத, அதில் அந்த மோட்டர் சைக்கிள்காரன் கையெழுத்திட்டான். மோகனசுந்தரமும் கையெழுத்திட்டார்.

"வெறுமனே கையெழுத்து மட்டும் போறுமா. இந்தாங்க பொண்ணுக்கு எங்க சார்பா புடவை, நகை. குழந்தை வந்திருக்குதா."

ஜீவாவை அழைத்து வந்தார்கள். ஜீவா தலை நிறையப் பூவும் நெற்றிச்சுட்டியும், சந்திரப்பிரபையும், சூரியப்பிரபையும், இடுப்பு ஒட்டியாணமுமாய் முன்னே வந்து நின்றாள். அவள் அம்மா அந்த மிளகாய்ப்பழ கலர் பட்டுப்புடவையை கட்டிக் கொண்டிருந்தாள். அவளுக்கு அட்டைப் பெட்டியில் வைத்து, புடவையும், பூவும், ஒரு தங்க மோதிரமும் கொடுக்கப்பட்டது.

அதை வாங்கிக்கொண்டு சபையை நமஸ்கரித்துவிட்டு ஜீவா பின்பக்கம் போனாள். மெல்ல அட்டைப்பெட்டியை

திறந்தாள். அந்த அட்டைப்பெட்டியில் அவள் அம்மா உடுத்தியது போலவே. மிளகாய்ப்பழ பட்டுப்புடவை இன்னும் அதிக ஜரிகையுடன் இருந்தது.

"ஐய்.. உன் புடவை மாதிரியே என் புடவையும்."

ஜீவா குதித்தாள்.

"இந்த மகாவிஷ்ணுவை மேல வச்சிடலாம். மழை நின்னுருக்கு."

வெங்கடேஷ் அதை தூக்கிக்கொண்டு ஏணியில் ஏறினான்.

சீனுவாசன் பின்னால் ஏறினார்.

"அப்படியே தோள்ல முட்டுகொடுத்து வச்சுக்கோங்க. தெற்குப்பார்த்தவரா அவரை வச்சிடறேன். ரங்கநாதர் தெற்கு பார்த்தாப்போல இவரும் தெற்கு பார்க்கட்டும். சிமெண்ட் போட்டு கம்பிபோட்டு கட்டிடறேன். அப்படியே தோள்ல தாங்கினாமாதிரி இருங்க."

சீனுவாசய்யர் தோளில் அந்த பொம்மையைத்தாங்க. சுவரில் பதித்த கம்பியில் பொம்மையை சொருகினான். சிமெண்ட் வேகமாகத் தடவினான். கம்பிப்போட்டு முடுக்கினான். பொம்மை சரியாமல் இருப்பதற்கு கீழே கற்கள் கொடுத்தான். கோபுரத்தின் ஒரு நிலையில் அந்த விஷ்ணுவின் பொம்மை மிகச்சரியாக உட்கார்ந்தது.

சீனுவாசன் நகர்ந்தார். திரும்பி விஷ்ணுவைப் பார்த்தார். மெல்ல எட்டி விஷ்ணுவின் புறங்கையில் முத்தம் கொடுத்தார். கால்களைத் தடவி கண்களில் ஒற்றிக் கொண்டார். கீழிறங்கி கைகூப்பினார்.

பல்லாண்டு.. பல்லாண்டு.. பல்லாயிரத்தாண்டு.. பல கோடி நூறாயிரம்.. இன்னும் பல நூற்றாண்டுகள் இரும் என்று உயரக் கை தூக்கி கடவுளை ஆசிர்வதித்தார். கீழிறங்கினார்.

"கதிரவன் ஸார் போன் பண்ணாரு. அடுத்த மாசம் இருவத்திரெண்டாம் தேதி கும்பாபிஷேகம் வச்சுக்கச் சொல்லி கவர்மெண்ட்ல சொல்லிட்டாங்க. நான் மூணு டேட் கொடுத்திருந்தேன். அந்த டேட்லயே வச்சிக்கோன்னு சொல்லிட்டாங்க. எல்லா மினிஸ்டருக்கும் முன்கூட்டியே சொல்லிடறாங்களாம்.

வேகமா செய்யச் சொல்றாங்க. இன்னும் ஒரு ரூபா சேங்ஷன் ஆயிருக்காம்." என்று மோகனசுந்தரம் சொல்ல சீனுவாசன் மோகனசுந்தரத்தின் கையை குலுக்கினார்.

கோயிலின் எல்லாப் பகுதியிலும் உள்ள ஜனங்கள் ஏதேதோ காரணங்களுக்காக சந்தோஷமாக இருந்தார்கள்.

"கோயில் கதவை சார்த்தணும்"

"எதுக்குடா திடுப்புனு வந்து சொல்ற."

"நம்ம விஸ்வநாத சிவாச்சாரியார் காலமாயிட்டாரு."

ஒருவன் வந்து சொல்ல இடப்பக்க கம்பிக்கதவை திறந்துவிட்டு கோவிலின் முக்கியக் கதவை மூடினார்கள்.

"ஒரு பத்து நிமிஷம் திரை மூடியிருக்கட்டும்" என்று சொன்னார்கள்.

திரையை மூடிவிட்டு ராமசுப்ரமணியன் வெளியே வந்தான். உள்ளே அவள் மெல்லியதாய் மிக மெல்லியதாய் ஒரு புன்னகை சிந்தி அமைதியாய் உட்கார்ந்திருந்தாள்.

மறுபடியும் மழை பலத்துப் பெய்யத் துவங்கியது. அந்த மழை மிக முக்கியம். அவசியம் வேண்டும் என்று ஜனங்களுக்குத் தெரியும். எனவே, சகலரும் அமைதியாய் பொறுத்துக் கொண்டார்கள்.

முற்றும்

கதை, கவிதை மற்றும் கடிதப் போக்குவரத்து, டி.டி. அல்லது எம்.ஓ. இவைகளை SREE AISHWARYA PUBLICATION பல்சுவை நாவல், 12/29, நைனான் தெரு, அபிராமபுரம், சென்னை-600 018. என்ற நிர்வாக அலுவலக முகவரிக்கே அனுப்பவேண்டும். போன்: 24614779

Palsuvai Naval Owner & Published by M.P. Chandra Sekaran at 50/1, Pycrafts Road, 1st Street, Royapettah, Chennai -14. and Printed by M.P.Chandrasekaran, at AdiSakthi Graphics 24/2, Pycrafts Road, 1st Street, Royapettah, Chennai - 14.

Editor: Pon. Chandrasekar



கடவுளுக்கு காதுகளில்லை
ஆனால் கேட்கிறார்
கடவுளுக்கு வாயில்லை
ஆனால் பேசுகிறார்
கடவுளுக்கு நாக்கு இல்லை
ஆனால் சுவைக்கிறார்
கடவுளுக்கு கண்களில்லை
ஆனால் பார்க்கிறார்
கடவுளுக்கு கைகளில்லை
ஆனால் வேலை செய்கிறார்

- திருவண்ணாமலை மஹான்
யோகிராம்சுரத்குமார்